# வரலாறு

## தரம் - 10




ஆக்கியோன்

R.S. சந்திரன்

ஆசிரியர், யாழ். இந்துக்கல்லூரி

மீள்பார்வை

S.ஜெயகுமார்

ஆசிரியர், வசாவிளான் மத்திய மகாவித்தியாலயம்.

**வரலாறு தரம் - 10**

– R.S. சந்திரன் எழுதியது

– S. ஜெயகுமாரினால் B.A(Hons) மீள்பார்வை செய்யப்பட்டது.



**பதிப்பு**

முதற்பதிப்பு – 2008, ஏப்ரல்

இரண்டாம் பதிப்பு – 2008, ஆகஸ்ட்

மூன்றாம் பதிப்பு – 2009, டிசம்பர்

நான்காம் பதிப்பு – 2011, ஜூலை

ஐந்தாம் பதிப்பு – 2014 ஜூலை

**வெளியீடு**

"றோயல் அக்கடமி"

அரசடி றோட், யாழ்ப்பாணம். தொ.பே. 021 320 0755

**அச்சுப்பதிப்பு**

கரிகணன் (தனியார்) நிறுவனம். #681 கே.கே.எஸ் வீதி, யாழ்ப்பாணம்.

---

**HISTORY GRADE - 10**

- R.S.Chandran

- Review by : S.Jeyakumar.B.A(Hons)



**Edition**

First Edition - 2008, April
Second Edition - 2008, August
Third Edition - 2009, December
Fourth Edition - 2011, July
Fifth Edition - 2014, July

**Published by**

**Royal Academy,** Arasady Road, Jaffna. Tel: 021 320 0755

**Printed by**

Harikanan (Pvt) Ltd, #681,K.K.S. Road, Jaffna.

**Contact**

chanaa2007@yahoo.com

**Price :** Rs.300/-

**ISBN :** 978-955-53668-0-9

# ஆசியுரை

ஒரு காலகட்டத்தில் வரலாற்றினை ஒருபாடமாகக் கற்பவர்கள் தொகையானது மிகவும் குறைவானதாகக் காணப்பட்டது. இதற்குக் காரணம் அக்கல்வி மிகவும் கடினமாக்கப்பட்டிருந்ததே. ஆனால் இன்றைய சூழ்நிலையில் அவ்வாறில்லை. கா.பொ.த. சாதாரணதரப் பரீட்சைவரை வரலாற்றுப் பாடம் கட்டாயமாக்கப்பட்டதால் உயர் கல்வியிலும் வரலாற்றுப் பாடத்தினைக் கற்கும் மாணவரது தொகையும் அதிகரித்து வருவதுடன் பாடவிதானங்களும் இலகுவாக்கப்பட்டுள்ளது. இதனால் பல நூல்கள் வெளிவர ஆரம்பித்துள்ளது.

அந்த வகையில் தரம் 10 இற்கான வரலாற்று நூலினை மாணவர்களின் தேவை கருதி ஆசிரியர் ஆர்.எஸ். சந்திரன் அவர்களால் எழுதப்பட்டு மீள் பதிப்பாக ஐந்தாவது தடவையாக மாணவர்கள், ஆசிரியர்களின் வரவேற்பினைப் பெற்று வெளிவந்துள்ளது. க.பொ.த. சாதாரணதர பரீட்சையில் தரம் 10 பாடவிதானங்கள் பெரும் முக்கியத்துவத்தினைப் பெற்று வருவதால் பரீட்சைக்கு மாணவர்களை தயார்ப்படுத்தும் நோக்கில் வினா–விடைத் தொகுப்பாக இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மொத்தத்தில் ஆசிரியர்கள், மாணவர்கள் எதிர்நோக்கும் கற்றல், கற்பித்தல் இடர்பாடுகளை நீக்கும் வகையில் எழுதப்பட்டிருக்கின்றமை ஒரு சிறப்பம்சமாகும்.

எனவே, பாடசாலைப் பாடப்புத்தகத்தைத் தழுவியதாக மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் எழுதிய ஆசிரியர் ஆர்.எஸ். சந்திரன் மிகவும் துடிப்பான உற்சாகமான ஆசிரியர். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகப் பட்டதாரியான இவர் மாணவர்கள் மத்தியில் மிகவும் நம்பகமானவர். இவரது இந்நூல் மேலும் பல பதிப்புக்களாக வெளிவந்து மாணவர் உலகு பயன்பட ஆசிகள் பல.

**கலாநிதி அ. அருந்தவராஜா,**
*சிரேஷ்ட விரிவுரையாளர்,*
*வரலாற்றுத்துறை,*
*யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.*

# முன்னுரை

"வரலாறு தரம் – 10" என்ற எனது முதலாவது நூலின் ஐந்தாவது பதிப்பினை வெளியிடுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். மாணவர்கள் புதிய பாடத்திட்டத்திற்கேற்ப தேர்ச்சிமைய கற்றலின் அடிப்படையில் சுயமாக விளங்கிக் கற்பதற்கு உதவியாக வினா – விடை அமைப்பு வடிவில் இந்நூல் வெளியீடாகின்றது.

இன்று வரலாற்றுப் பாடம் தாய்மொழியில் கற்றல் வேண்டும் என்ற கட்டாய நிலை உருவாகியுள்ளது. இதனால் இப்பாடம் மீதான கவனம் அனைவரிடத்திலும் காணப்படுகின்றது. க.பொ.த உயர்தரத்திலும், பல்கலைக்கழகங்களிலும் வரலாற்றினை ஒரு பாடமாகக் கற்கும் மாணவர்களின் தொகையும் அதிகரித்துக்கொண்டே செல்கின்றது. இந்த வகையில் கீழ்வகுப்பில் இருந்தே வரலாற்றினை மாணவர்கள் ஆழமாகக் கற்றல் வேண்டும்.

பாடவிதான நோக்கின் அடிப்படையில் இந்நூலை வினாவிடை வடிவில் எழுதியுள்ளேன். அதேவேளை க.பொ.த. சாதாரண பரீட்சைக்கு மாணவர்களைத் தயார்ப்படுத்தும் நோக்கிலும், வரலாற்றின் தொடர்ச்சித் தன்மையைப் பேணும் பொருட்டும் பாட அலகுகள் விரிவுபடுத்தப் பட்டுள்ளது. கடந்த காலங்களில் நடைபெற்ற பரீட்சையில் தரம் –10 பாட அலகுகள் அதிக முக்கியத்துவம் பெற்றிருந்ததையும் மாணவர்கள் கவனத்திற் கொள்ளவேண்டும்.

ஆண்டுதோறும் புதைபொருளாராய்ச்சியாளரின் பெரு முயற்சி களும், பேரறிஞர் பலரின் ஆராய்ச்சிகளும் புதிய வரலாற்றுண்மைகளை புலப்படுத்தி வருகின்றன. மாணவர்களுக்கு வரலாற்றுண்மைகளைப் எடுத்துக் கூறும்போது தகவல்களை பல கோணங்களில் ஆராய்ந்து உரைக்க வேண்டிய அவசியமும் அனுபவ வாயிலாக உணரப்பட்டுள்ளது. எனது இம்முயற்சிக்கு இவைகளே அடிப்படைக் காரணங்களாக இருந்தன.

இந்நூலை எழுதுவதற்குப் பல்வேறு வகைகளிலும் அன்புடன் ஆலோசனைகளையும், உதவிகளையும் வழங்கிய யாழ் பல்கலைக்கழக வரலாற்றுத்துறை சார்ந்த பேராசிரியர் செ. கிருஸ்ணராஜா, சிரேஷ்ட விரிவுரையாளர் கலாநிதி க. அருந்தவராஜா ஆகியோருக்கும் இந்நூல் தொடர்பாக அவ்வப்போது ஆலோசனைகளை வழங்கிய அதேவேளை இந்நூலை மீள்பார்வை செய்த ஆசிரியரும், எனது வழிகாட்டியுமான எஸ்.ஜெயகுமார் அவர்களுக்கும், மற்றும் ஆசிரியரும் எனது நண்பருமாகிய நா. நந்திஸ்வரன் அவர்களுக்கும், ஏனைய ஆசிரியர்கள் அனைவருக்கும் நன்றிகள். இந்நூலை அழகுற அச்சுப்பதிப்புச் செய்து தந்த கரிகணன் (தனியார்) நிறுவனத்தினருக்கும் எனது நன்றிகள்.

இறுதியாக நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இந்நூலிற்கு கல்விச் சமூகத்திடமிருந்து கிடைத்த வரவேற்பினாலேயே குறுகிய காலத்தினுள் ஐந்தாம் பதிப்பினையும் வெளியிடுகின்றேன். இதற்கும் கல்விச் சமூகத்தின் வரவேற்பு கிடைக்குமென எதிர்பார்க்கின்றேன்.

"ஞானதீபம்" **R.S சந்திரன்**
22/12, பத்திரகாளி கோவிலடி,
சுழிபுரம், யாழ்ப்பாணம்.

# பொருளடக்கம்

# 1 வரலாற்றுக்கு ஓர் அறிமுகம்

## 1. வரலாறு : அறிமுகம்

- வரலாறு என்பது மானிட நாகரிகத்தின் விருத்தியாகும். ஆரம்பம் முதற்கொண்டு தொடர்ந்து வரும் பழக்கவழக்கங்கள், பண்புகள், நடத்தைகள் மானிடத் தொடர்புகள் என்பவை பற்றிய தகவல்கள் நாகரிகத்தில் அடங்கும்.
- மனிதனால் செய்யப்பட்ட எல்லா செயற்பாடுகளும் வரலாற்றுப் பாடப்பரப்பினுள் அடங்கும். குறிப்பாக அரசியல், பொருளாதாரம், சட்டம் எனும் துறைகள் மட்டுமன்றி விஞ்ஞான வளர்ச்சியும் கலை, இலக்கிய அம்சங்களும் அதனுள் அடங்கும்.
- இலங்கைச் சரித்திரம் வரலாற்றுக்கு முற்பட்ட இருண்ட காலத்திலிருந்து தொடங்குகின்றது. ஆயினும் துலக்கமான வரலாறு கி.மு 6ஆம் நூற்றாண்டு தொடங்கி இன்றுவரை இடையீடின்றி (ஏறத்தாழ 2500 வருடகாலம்) தொடர்ந்து வருகின்றது.
- இலங்கையின் ஆரம்ப காலக் குடியிருப்புக்கள் நதிப்பள்ளத்தாக்குகளை அடிப்படையாகக் கொண்டே உருவாகின. ஏனெனில் ஆரியரது சீவனோபாயத் தொழிலாக விவசாயமே காணப்பட்டது.

## 2 வரலாறு என்ற பதத்தின் தோற்றம்.

- "இஸ்ரோறியா" (Istoria) என்ற கிரேக்க சொல்லின் அடிப்படையில் வரலாறு என ஆங்கில மொழியில் குறிக்கப்படும் "History" என்ற பதம் உருவாகியது.
- வரலாற்றின் தந்தையாகக் கருதப்படும் **"ஹெரபோரஸ்"** (கி.மு 484 - 425) என்ற கிரேக்க வரலாற்று ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டு வந்த "Istoria" என்ற சொல்லின் மூலம் **வரலாறு என்பது ஆராய்ச்சியின் விளைவாக பெறப்பட்டிருக்கும் தகவல்கள்** என்பதையே கருதினார்.
- கிரேக்க தேசத்தைச் சேர்ந்த ஹெரடோரஸ் பல நாடுகள், நகரங்களுக்குச் சென்று தான் சேகரித்துக் கொண்ட தகவல்களை வரலாறுகள் எனக் கூறினார்.

## 3. வரலாறு என்றால் என்ன?

- வரலாறு தொடர்பில் பின்வரும் பொதுவான வரைவிலக்கணங்கள் காணப்படுகின்றது.
  - i) கடந்த காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் இடையே நடைபெறும் முடிவற்ற பேச்சு வார்த்தை வரலாறு ஆகும்.
  - ii) மனித சமுதாய வாழ்க்கையின் பதிவுக் குறிப்புகளே வரலாறாகும்.
  - iii) மலர்ந்து விரிந்து வரும் மனித சுதந்திரத்தின் கதையே வரலாறு ஆகும்.

iv) உண்மையென்று நம்பத்தக்க சான்றுகளின் உதவி கொண்டு நாம் ஏற்றுக்கொள்ளும் செய்திகளின் தொகுதியே வரலாறு ஆகும்.

v) கடந்த காலத்தைக் கற்பதுடன் அக்கால உண்மைகளைக் கண்டறிதலே வரலாறு ஆகும்.

**4. வரலாறு பற்றி முன்வைக்கப்பட்ட பல்வேறு வரைவிலக்கணங்கள்.**

- வரலாறு என்றால் என்ன? என்ற வினாவிற்கு இன்றுவரை முடிவான வரைவிலக்கணம் எதுவும் அறிஞர்களால் கூறப்படாத போதும் முக்கிய சிலரது வரைவிலக்கணங்கள் பின்வருமாறு.

i) **ஹெரடோரஸின் கருத்து.**
ஆராய்ச்சியின் விளைவாகப் பெறப்பட்டிருக்கும் தகவல்களை உள்ளடக்கியதே வரலாறு ஆகும்.

ii) **ஜீ.எம். திரவிலியனின் கருத்து.**
வரலாறு என்பது தனிப்பட்ட ஒரு பாடமல்ல. எல்லாப் பாடத்தினதும் சேர்க்கையே ஆகும்.

iii) **ஸ்டுவர்ட் பிகொட்டின் கருத்து.**
புராதன காலம் தொடக்கம் இன்றைய காலம் வரையில் மனித குலத்தின் கடந்த காலத்தை கற்பதுதான் வரலாறு ஆகும்.

iv) **பேர்க் ஹாட்டின் கருத்து.**
ஒரு யுகத்தில் எழுதிப் பாதுகாத்து வைக்குமளவிற்கு பெறுமதிமிக்க விடயங்களை அதற்கு முன்னைய யுகம் ஒன்றிலிருந்து தேடிக் கண்டுபிடித்துக் கொள்வதே வரலாறு ஆகும்.

v) **E.H.காரின் கருத்து.**
இறந்தகாலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் இடையில் இடம் பெறும் உரையாடல் வரலாறு ஆகும்.

vi) **கொலிங்வூட்டின் கருத்து.**
ஒருவகை ஆராய்ச்சி அல்லது விசாரணையே வரலாறு ஆகும். அதாவது மனிதன் எப்படி இருந்தான், எதைச் செய்தான் என்பதற்கான விடைகளைக் காண முயற்சிக்கும் சிந்தனைத் துறை சார்ந்ததே வரலாறு ஆகும்.

vii) **T.S.எலிஒட்டின் கருத்து.**
ஒரு நபர் ஒரு சமுதாயத்தின் வாழ்க்கையை வேறு ஒரு காலத்தில் படிக்கக்கூடியதாக இருந்தால் அவன் தனது சொந்த வாழ்க்கையைப் படிக்கிறான் என்பதே வரலாறாகும்.

viii) **பிராட்லியின் கருத்து**
வேறுபட்ட சூழ்நிலைகளில் வேறுபட்டு செயற்படுகின்ற மனித இனத்தின் கதையே வரலாறாகும்.

**5. வரலாறும் அதனுடன் தொடர்பான பிற பாடங்களும்.**

- வரலாறு என்பது தனித்து இயங்குகின்ற பண்புகளைக் கொண்ட ஒரு பாடம் அல்ல. அது தொடர்புபடாத துறைகளேயில்லை

என்றளவுக்குப் பெரும்பாலும் எல்லாவகையான பாடங்களுடனும் நெருங்கிய உறவுகளை கொண்டிருக்கின்ற ஒரு பாடமாகும்.

- இதனால் தான் வரலாற்றாசிரியரான ஜீ.எம். திரவிலியன் வரலாறு என்பது பல அறிவுத்துறைகளும் கூடிவாழுகின்ற இல்லம் என வரையறை செய்கின்றார்.

i. வரலாறு மற்றும் புவியியல் பாடங்களுக்கிடையிலான தொடர்பு
உ+ம்:
- ♦ இலங்கையில் ஆரியக் குடியிருப்புக்கள் நதிப்பள்ளத்தாக்குகளை அடிப்படையாக கெண்டு உருவாகியமை.
- ♦ கண்டி இராச்சியத்தின் சுயாதீனத்திற்கு அதன் புவியியல் அமைப்பே அடிப்படையாக அமைந்தது.
- ♦ ஜப்பானில் காணப்பட்ட இயற்கை இடையூறுகள் அவர்களை சாதிக்க வைத்தது.
- ♦ ரஷ்யாவில் காணப்பட்ட புவியியல் நிலமையே ஹிட்லருக்கும் நெப்போலியனுக்கும் பாரதூரமாக அமைந்தது.

i. வரலாறு மற்றும் அரசியல் விஞ்ஞானம் என்பவற்றுக்கிடையிலான தொடர்பு
உ+ம்:
- ♦ சீலி என்பவர் இன்றைய அரசியல் நாளைய வரலாறு என்ற கருத்தினை முன்வைக்கின்றார்.
  நிகழ்காலத்தை விளங்கிக் கொள்வதற்கான திறவுகோலாக இறந்த காலத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்கின்றார் E.H.கார்.
- ♦ வரலாற்றாசிரியர்களுக்கு அதிகளவான சான்றுகள் கிடைப்பதற்கு அரசியல் உதவுகின்றது.
- ♦ மக்களின் தேசிய உணர்வுகளைத் தட்டியெழுப்புவதற்கு வரலாறு உதவுகின்றது.

iii. வரலாறு மற்றும் பொருளியல் பாடங்களுக்கிடையிலான தொடர்பு.
உ+ம்:
- ♦ ஆரம்ப காலத்தில் அடிமைநிலை, நிலமானியமுறை, முதலாளித்துவ முறை மற்றும் பொது உடமை முறை என்பன எல்லாம் பொருளாதார உந்துதல்களினாலேயே உண்டானது.
- ♦ முதலாம் உலகப்போர் ஏற்பட பொருளாதார ஆதிக்கப் போட்டிகள் வழிவகுத்தமை.

**வரலாறு தொடர்பில் ஜவஹர்லால் நேருவின் கருத்து**
நிகழ் காலமும் எதிர் காலமும் நிச்சயமாக இறந்த காலத்திலிருந்தே கட்டியெழுப்பப்படுவதனை அதன் அடையாளங்களிலிருந்து கண்டு கொள்ள முடியும். அதனை மறந்து செயற்படுவதென்பது அத்திபாரம் இன்றி கட்டடம் ஒன்றை எழுப்புவது போன்றதாகும்.

**06.வரலாற்றைக் கற்பதன் மூலம் கிடைக்கும் பயன்கள்.**

i. நாம் வாழும் சமூகம் மற்றும் உலகம் பற்றிய தெளிவான விளக்கத்தைப் பெற உதவுகின்றது.

ii. இறந்த காலம் பற்றிய புரிந்துணர்வு நிகழ்காலம் பற்றிய சரியான அறிவினைப் பெற உதவுகின்றது.

iii. நாட்டின் எதிர்காலத் தலைமைத்துவத்தை ஏற்பதற்குத் தயாராகும் மாணவர்களுக்கு அரசியல் நிகழ்வுகள் மற்றும் அரசியல் அதிகாரம் என்பன பற்றி தெளிவு பெற உதவுவதோடு தம்மைத் தயார்ப்படுத்துவ தற்கு உதவுகின்றது.

iv. தேசிய தனித்துவத்தை அறிவதற்கும் தேச அபிமானம், நாட்டுப் பற்று ஆகியவற்றை வளர்த்துக் கொள்வதற்கும் உதவுகின்றது.

v. மனிதர்களின் ஆளுமைகளில் இருந்து வெளிப்படும் நற்பண்புகளை முன்மாதிரியாகக் கொண்டு தேசியத்தைக் கட்டியெழுப்பிக் கொள் வதற்கு உதவுகின்றது.

vi. பண்டைய கால மக்களின் கலை, கலாச்சார, நாகரிக பழக்கவழக் கங்களை அறிந்து கொள்வதோடு, வேறுநாடுகளின் வரலாற்றையும் கலாசாரத்தையும் கற்பதனூடாக அவற்றின் பெறுமதியை உணர் வதற்கு உதவுகின்றது.

vii. கால நிர்ணயத்தின் முக்கியத்துவத்தை அறிவதற்கு உதவுகின்றது அதாவது புராதன வரலாற்றை எழுதும் போது காலம், இடம் என்பன வற்றுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டதை மகாவம்சத்தை ஆய்வு செய்வதன் மூலம் அறியமுடிகிறது.

உ+ம்: புத்தபெருமான் பரிநிர்வாணமடைந்து 218 வருடங்களுக்கு பின்னர் அசோகனது முடிசூட்டு விழா நடைபெற்றது என மகாவம்சம் கூறுகின்றது.

உ+ம்: மிகச்சிறந்த அரசியல்வாதியான இந்தியாவின் முதல் பிரதமர் ஜவஹர்லால் நேரு, தனது நாட்டின் சுயாதீனம், அதிகாரம், புகழ் என்பவற்றைப் பாதுகாத்த பிரித்தானிய பிரதமர் வின்சன்ட் சேர்சில் என்போர் திறமையான வரலாற்றியலாளர்களாவர்.

viii. வேறுபட்ட கருத்துக்களுக்கு இடமளித்தல், அதனை சகித்தல், ஒருவருக்கொருவர் மதிப்பளித்தல், முதலிய நற்பண்புகளை வளர்த்துக் கொள்ள உதவுகின்றது.

ix. மனிதவரலாற்றின் நோக்கங்கள், அனுபவங்கள், பிரச்சினைகள், வெற்றிகள் பற்றிய தகவல்களை அறிவதோடு ஒருவர் தன்னைப் பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கும் உதவுகின்றது.

x. பண்டைய மக்களின் விஞ்ஞான தொழிநுட்ப முன்னேற்றங்களை அறிந்து கொள்வதற்கு உதவுகின்றது.

**07. வரலாற்று மூலாதாரங்கள்**

i. குறிப்பிட்டதொரு காலத்தின் அல்லது தேசத்தின் வரலாற்றை மிகச் சரியாக அறிந்து கொள்வதற்கு அப்போது எஞ்சியுள்ளவற்றையே

வரலாற்று மூலாதாரங்கள் என்பர். இவற்றினூடாகவே இறந்தகால சம்பவங்களை சந்தேகமின்றி நம்பிக்கொள்வதற்கு நாம் தலைப் படுகின்றோம்.

ii. வரலாற்று மூலாதாரங்களை "இலக்கிய மூலாதாரங்கள்", "தொல் பொருள் மூலாதாரங்கள்" என இரு பிரதான பிரிவாகப் பிரிக்கலாம்.




**08.இலக்கிய மூலாதாரங்கள்.**

i. நூல்கள், பரம்பரைக்கதைகள், காவியங்கள், நாட்டார்பாடல்கள் தேசசஞ்சாரிகளின் குறிப்புகள், புகழ்கதைகள், கவிதைகள் என்பன இலக்கிய மூலாதாரங்கள் ஆகும்.

ii. இலங்கையின் புராதன காலத்தின் வரலாற்றினைத் தொடர்ச்சியாக கட்டியெழுப்புவதற்கு இலக்கிய மூலாதாரங்களே உதவுகின்றது.

iii. இலக்கிய மூலாதாரங்களை உள்நாட்டு இலக்கியங்கள், வெளி நாட்டு இலக்கியங்கள் என வகைப்படுத்தலாம்.

**09. உள்நாட்டு இலக்கிய மூலாதாரங்கள்**

**1) தீபவம்சம்**

i இலங்கை வரலாற்றைக் கூறும் முதல்பாளிநூல்

ii. கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் எழுதப்பட்டது.

iii. இந்நூலின் ஆசிரியர் யார் என்பது இதுவரை அறியப்பட வில்லை.

iv. புராதன காலம்முதல் மகாசேனன் வரையான வரலாற்றைக் கூறுகின்றது.

v. நம்பகமற்ற ஒழுங்கமைக்கப்படாத நூலாக உள்ளமை இதன் குறைபாடு ஆகும்.

**2) மகாவம்சம்**

i. இலங்கை வரலாற்றைக் கூறும் பிரதான வரலாற்று நூல்

ii. கி.பி. 6ஆம் நூற்றாண்டு காலத்துக்குரியது.

iii. மகாநாமதேரர் என்ற தேரவாத பௌத்த பிக்குவால் எழுதப்பட்ட பாளி நூல்

iv. புராதன காலம்முதல் மகாசேனன் வரையான வரலாற்றை மகாவம்சத்தின் முதற்பாகம் கூறுகிறது.

v. அதுவரை காலமும் நிலவிவந்த அறநூல்கள் மற்றும் ஜாதகக் கதை நூல்கள் என்பவற்றைப் பயன்படுத்தியே மகாவம்சம் எழுதப் பட்டது.

vi. **மகாவம்சத்தின் சிறப்பம்சங்கள் வருமாறு**

- ♦ தீபவம்சத்தில் காணப்பட்ட பல குறைபாடுகளை நீக்கி இலங்கை யின் 2500 வருட காலத்துக்குரிய தொடர்ச்சியான வரலாற்றை அறிய முடிகிறது.
- ♦ மகாவம்சத்தில் கூறப்படும் அதிகமான விடயங்கள் கல்வெட்டுக் களிலும் காணப்படுவதனால் வரலாற்று மூலாதாரங்களில் சிறப்பு பெறுகிறது.

vii. **மகாவம்சத்தின் குறைபாடுகள் வருமாறு**

- ♦ நூலாசிரியர் பௌத்த சமய வரலாற்றைக் கூறுவதிலேயே அதிக அக்கறை காட்டியமை. எடுத்துக்காட்டாக தேரவாதபௌத்தத் தைப் புகழ்வதால் சிலர் "தேரவாத காவியம்" என அழைக் கின்றனர்.
- ♦ பழைய அரசியல் மற்றும் பொருளாதார அமைப்பு என்பன பற்றி விரிவாகக் கூறப்படவில்லை.

**3) சூளவம்சம்**

i. மகாவம்சத்தின் பின்னர் தொடர்ச்சியான எழுத்துமூல வரலாற்றை அறிந்து கொள்வதற்கான நூல்

ii. மகாவம்சத்தின் தொடர்ச்சியாக எழுதப்பட்டதால் இந்நூலை மகாவம்சத்தின் இரண்டாம் பாகம் என்பர். ஆயினும் இந் நூலா னது மகாவம்சம் எழுதி முடிக்கப்பட்டு பல நூற்றாண்டுகளின் பின்னர் எழுதப்பட்டமையால் அதனை மகாவம்சத்தின் இரண் டாம் பாகமாக ஏற்றுக்கொள்ள முடியாது எனவும் கூறுகின்றனர்.

iii. இதனையே சிலர் சூளவம்சம் என அழைக்கின்றனர். ஆயினும் இதன் ஆசிரியரான "தர்மகீர்த்தி தேரர்" இப்பெயரால் இந் நூலைக் குறிப்பிடவில்லை.

**4) சமந்த பாசதிகாவ**

i. வினயபிடகம் எனும் பாளி மொழி நூலுக்கான விளக்கநூலாகும்.

ii. இந்திய துறவியான புத்த கோசரினால் எழுதப்பட்டது.

iii. இந்தியாவில் நிலவிய பௌத்தசமயம் இலங்கைக்கு பௌத்த சமயம் கொண்டு வரப்பட்டமை என்பன தொடர்பான விபரங்கள் அடங்கியுள்ளது.

5) மகா போதி வம்சம்

i. ஜய ஸ்ரீ மகாபோதி பிக்குகளின் வரலாற்றைக் கூறுகின்றது.

ii. அனுராதபுரத்துள்ள புனித வெள்ளரசு மரத்தின் வரலாற்றைக் கூறுகின்றது.

iii. உபதீஸ தேரரால் எழுதப்பட்டது.

6) தாட வம்சம்

i. புனித தந்ததாதுவின் வரலாற்றைக் கூறும் பாளி நூலாகும்.

ii. ராஜகுரு தம்பகீர்த்தி தேரரால் எழுதப்பட்டது.

7) தலதாசிறித

i. குருணாகலில் அமைக்கப்பட்ட தலதாமாளிகையில் பிரதிட்டை செய்யப்பட்ட புனித பற்சின்ன வழிபாட்டை நடாத்தும் விதத்தை விளக்கும் நூலாகும்.

ii. 4ஆம் பராக்கிரமபாகுவினால் சிங்களமொழியில் எழுதப்பட்டது.

8) தாது வம்சம்

i. பௌத்த தூபி அமைப்பு முறை பற்றிக் கூறும் சிங்கள மொழியிலான நூலாகும்.

9) பூஜாவலிய

i. தம்பதெனிய கால வரலாற்றைக் கூறும் சிங்கள மொழியிலான நூலாகும்.

ii. தம்பதெனிய மன்னன் 2ஆம் பராக்கிரமபாகு காலத்தில் மயூரபாத தேரரால் எழுதப்பட்டது.

10) நிகாயசங்கிரஹவாய

i. நிக்காயக்கள் எனக் குறிப்பிடப்படும் சங்கப் பிரிவுகளிடையே ஏற்பட்ட வளர்ச்சி பற்றிக் கூறும் சிங்கள மொழியிலான நூலாகும்.

ii. ஜெயபாகு தேவர்க்ஷிதர் என்ற தேரரால் எழுதப்பட்டது.

**10. ஒவ்வொரு யுகங்களிலும் எழுதப்பட்ட இலக்கிய மூலாதாரங்கள்.**

| காலம்/யுகம் | எழுதப்பட்ட நூல்கள் |
|---|---|
| அனுராதபுர காலம் | தீபவம்சம், மகாவம்சம், சமந்தபாசாதிக விசுத்திமார்க்கய, ஹெரணசிக, சிகவலந்தவினிச, சியபஸ்லகர, தம்பியா அட்டுவ ஹற்றபதய, யானகிகரன, சாராத்த சங்கிரஹய |
| பொலன்னறுவை காலம் | சூளவம்சம், முவதெவ்தாவத, சசந்தாவத, தர்ம பிரதீபிகாவ, ரசவாஹினிய, அமாவத்துர |
| தம்பதெனியாகாலம் | சத்தர்மரத்னாவலிய, பூஜாவலிய, கவிசிலுமின, விசுத்தி மக்க சன்னய, வனவினிச சன்னய |
| குருணாகல் காலம் | ஜாதகக் கதைநூல் (பன்சிய பணஸ்ஜாதகய) சிங்கள போதி வம்சம், நிகாயசங்கிரஹய |
| கோட்டைக் காலம் | குத்தில காவியம், காவியசேகர, பரகும்பாசிரித, கோகிலசந் தேசய, செலலிஹினி சந்தேசய |

## 11. வெளிநாட்டு இலக்கிய மூலாதாரங்கள்

- இலங்கை ஆதிகாலந்தொட்டு இந்தியா, சீனா, பர்மா, மலாயா, பாரசீகம், அரேபியா, கிரேக்கம், உரோம் எனும் மேலைத்தேச, கீழைத்தேச நாடுகளுடன் தொடர்புகளைக் கொண்டிருந்தது.

**1. டிமுண்டோ**

i. இலங்கைக்கும் வடமேல் இந்தியாவுக்கும் இடையில் நடைபெற்ற வர்த்தகத் தொடர்புகள் பற்றிக் கூறுகின்றது.

ii. கிரேக்க நாட்டவரான **அரிஸ்ரோட்டில்** என்பவரால் எழுதப் பட்டது.

**2. இண்டிகா**

i. சந்திரகுப்த மௌரிய மன்னனின் அரச சபையில் கிரேக்க தூதுவனாகப் பணியாற்றிய கிரேக்க நாட்டவரான **மெகஸ் தனீஸ்** என்பவரால் எழுதப்பட்டது.

ii. இலங்கை பற்றிய விபரங்கள் அடங்கியுள்ளது.

**3. நெச்சுராலிஸ் ஹிஸ்டோரியா**

i. இலங்கை பற்றிய பொருளாதார விடயங்கள் அடங்கியுள்ளன.

ii. உரோம் நாட்டவரான **பிளினி** என்பரால் எழுதப்பட்டது.

iii. இயற்கை வரலாறு எனவும் இந்நூலை அழைப்பர்.

**4. பெரிப்லஸ் ஒப் எரித்திரியன் சீ.**

i. கி.பி முதலாம் நூற்றாண்டில் **பெரிப்லஸ்மாரிஸ்** என்பவரால் எழுதப்பட்டது.

ii. இலங்கையில் முத்து, மாணிக்கம், பருத்தித்துணி எனும் வர்த்தகப் பொருட்கள் இருந்ததாகக் குறிப்பிடுகிறது.

**5. பூகோள சாஸ்திரப் பிரவேசம்**

i. இலங்கை பற்றிய சரியான குறிப்புகளைத் தரும் நூலாகும்.

ii. குறிப்பாக எமது நாட்டின் அமைவிடம், நாட்டினுள் அமைந்த இடங்கள், அவற்றின் பெயர்கள், இலங்கையின் வடிவம் என்பன பற்றிய சரியான விபரங்கள் உள்ளடங்கியுள்ளது.

iii. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் அலெக்ஸ்சாந்திரியாவில் வாழ்ந்த **தொலமி** என்பவரால் எழுதப்பட்டது.

iv. புவியியல் வரலாறு எனவும் குறிப்பிடப்படும் இந்நூலில் எமது நாடு தப்ரபேன் என அழைக்கப்பட்டது.

**6. பாரசீக யுத்தம்**

i. ஆதிகாலத்தில் இலங்கை வர்த்தக மத்திய நிலையமாகத் திகழ்ந்ததாகக் குறிப்பிடுகிறது.

ii. கி.பி. 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உரோம நாட்டவரான **புரோகோபிய பஸ்** என்பவரால் எழுதப்பட்டது.

7. பொபோ கிறபியா கிறிஸ்டியானா

i. ஆதிகாலத்தில் இலங்கை வர்த்தக மத்திய நிலையமாக திகழ்ந்ததாகவும் குறிப்பாக மாந்தைத் துறைமுகம் பிரபல்யம் பெற்றிருந்தது எனக் கூறுகின்றது.

ii. உரோம் நாட்டவரான கொஸ்மஸ் என்பவரால் எழுதப்பட்டது.

iii. கி.பி. 5ஆம் நூற்றாண்டளவில் இவர் இலங்கைக்கு விஜயம் செய்ததாகக் கூறப்படுகிறது.

8. சில் சிலாத் அல் தவாரிஹ்

i. அபூசைத் என்பவரால் எழுதப்பட்டது.

ii. அரேபிய இனத்தைச் சேர்ந்த சுலைமான் என்பவரால் சேகரிக்கப்பட்ட விடயங்களைப் பெற்றே அபூசைத் மேற்படி நூலை எழுதினார்.

9. அர்த்தசாஸ்திரம்

i. இலங்கை வரலாற்றைக் கூறும் இந்திய நூல்களுள் ஒன்றாகும்.

ii. கௌடில்யர் என்ற பிராமண ஆலோசகரினால் எழுதப்பட்டது.

iii. இந்நூலில் எமது நாடு "தாமிரபரணி" மற்றும் "பாரசமுத்திரம்" எனும் பெயர்களால் குறிப்பிடப்பட்டிருந்தது.

10. ராஜதரங்கணி

i. இந்தியாவின் காஷ்மீர் பகுதி வரலாற்றைக் கூறும் இந்நூலில் இலங்கையின் புராதன நீர்ப்பாசன முறை தொடர்பான தகவல்கள் காணப்படுகிறது.

ii. கி.பி. 11ஆம் நூற்றாண்டளவில் கல்கனர் என்பவரால் இந் நூல் எழுதப்பட்டது

11. பாகியனின் குறிப்புகள்

i. கி.பி 5ஆம் நூற்றாண்டில் இலங்கை விஜயம் செய்த சீன யாத்திரிகரான இவரின் குறிப்புகளில் எமது நாட்டு வரலாற்றுத் தகவல்கள் காணப்படுகிறது.

ii. இலங்கையில் மகாயானபௌத்தத்தின் செல்வாக்கு, மகா விகாரை, அபயகிரி விகாரைகளின் விபரங்கள் இவரது குறிப்புக்களில் காணமுடிகிறது.

iii. இவர் அபயகிரி விகாரையில் இரண்டு ஆண்டுகள் தங்கிச் சென்றார்.

12. ஹியுங்சாங்கின் குறிப்புகள்

i. சீன யாத்திரிகரான இவர் இந்தியாவிற்கு வருகை தந்தபோது கேட்டறிந்த இலங்கைத் தகவல்களைத் தனது குறிப்பேட்டில் கூறியுள்ளார்.

13. இபன்பதூதாவின் குறிப்புகள்

i. அராபியாவின் மொரோக்கோ தேசத்தைச் சேர்ந்த முஸ்லீம் தேசசஞ்சாரியான இவர் கி.பி 1344இல் இலங்கை வந்த போது அவதானித்த விடயங்களைத் தனது குறிப்பேட்டில் கூறியுள்ளார்.

**12.தொல்பொருள் மூலாதாரங்கள்.**

i. அகழ்வாய்வின் போது கண்டுபிடிக்கப்பட்டவையே தொல் பொருள் மூலாதாரங்கள் ஆகும்.

ii. தொல்பொருள் மூலாதாரங்களை மூன்றாக வகைப்படுத்தலாம்.
*1.* கல்வெட்டுக்கள் *2.* நாணயங்கள் *3.* சிதைவுகள்

iii. தொல்பொருள் மூலாதாரங்களால் கிடைக்கும் பயன்கள்

- ஊகங்கற்ற வகையில் வரலாற்றைப் புரிந்து கொள்ள உதவு கின்றது
- வரலாற்று ரீதியான கருத்துக்களை உறுதிப்படுத்த உதவுகின்றது.
- பண்டைய கால மக்களின் கலை, கலாசார, விஞ்ஞான தொழி நுட்ப முன்னேற்றங்களை அறிந்து கொள்ள உதவுகின்றது.

iv. தொல்பொருட்கள் எவ்வெவ்காலத்துக்குரியவை என்பதைத் தீர்மானிப்பதற்காக காபன் *14* ($C_{14}$) எனும் காலநிர்ணய சோதனை முறை பிரயோகிக்கப்படுகிறது.

**13. கல்வெட்டுக்கள் (பொறிப்புகள்) முக்கிய அம்சங்கள்:**

i. தொல்பொருள் சான்றுகளில் கல்வெட்டுக்களே முக்கியத்துவம் பெறுகின்றது. ஏனெனில் **கல்வெட்டுக்கள் பெரும்பாலும் அந்தந்தக் கால கட்டங்களிலேயே** பொறிக்கப்படுவதனால் அவை உண்மையான விடயங்களையே உள்ளடக்கியிருக்கும்.

ii. இலங்கையில் மகிந்ததேரரின் வருகையின் பின்னரே கல்வெட் டுக்கள் பொறிக்கும் வழக்கம் ஆரம்பமானது. குறிப்பாக "பிராமிய" எழுத்து வடிவிலேயே ஆரம்பகால கல்வெட்டுக்கள் காணப்பட்டது.

iii.கல்வெட்டுக்களை **குகைக்கல்வெட்டு, குன்றுக்கல்வெட்டு, தூண்கல் வெட்டு, சுவர்க்கல்வெட்டு** என்று வகைப்படுத் தலாம்.

iv. இலங்கையின் வரலாற்றைக் கற்கும் போது இந்தியாவின் பல்லவராயன் பேட்டை போன்ற வெளிநாட்டுக் கல்வெட்டுக் களும் முக்கியத்துவம் பெறுகின்றது.

**14.குகைக் கல்வெட்டுக்கள்: பற்றிய குறிப்புக்கள்.**

i. பௌத்த பிக்குகள் வசித்த கற்குகைகளின் கற்பீலிக்கு (குகைகள்ன் மேல் விளிம்பு) சற்றுக்கீழ் பிராமிய எழுத்துக்களில் மதகுருமாருக்குத் தானம் செய்யப்பட்டவையை பொறித்து வைக்கும் கல்வெட்டுக்களே இவையாகும்.
உ+ம்: மிகிந்தலை, வெஸ்ஸகிரிய, சிதுல்பவ்வ, ரிட்டிகல

ii. இக்குகைக் கல்வெட்டுகளில் குகைகளைத் தானமாக வழங்கியவரின் பெயர், அவருடைய விருதுப்பெயர், அவருடைய பரம்பரை, தொழில், சமுதாயத்தில் அவரது அந்தஸ்து முதலிய விபரங்கள் காணப்படுகிறது.

iii.இத்தகவல்களைக் கொண்டு அக்கால சமூக தகவல்களையும் குடியிருப்புக்கள் நாட்டின் எந்தெந்தப் பகுதியில் பரவியுள்ளது என்பதையும் அறிந்து கொள்ள முடியும்.

**15.குன்றுக் கல்வெட்டுக்கள்: பற்றிய குறிப்புக்கள்.**

i. கற்பாறைகளின் மேல் பொறிக்கப்பட்டிருக்கும்
உ+ம்: கடலாதெனிய இருமொழிக் கல்வெட்டு, அலவல அமுணக் கல்வெட்டு, மடவளைக் கல்வெட்டு, கல்விகாரைக் கல்வெட்டு.

ii. பொலன்நறுவ யுகத்தின் நிஸங்கமல்லன், முதலாம் பராக்கிரமபாகு போன்றோர் விகாரை, குளம் ஆகியவற்றை நிர்மாணித்து அதனருகில் இருக்கும் குன்றில் கல்வெட்டுக்களைப் பொறித்தனர்.

**16. தூண் கல்வெட்டுக்கள்: பற்றிய குறிப்புக்கள்.**

i. புனித தலத்திற்கு எதிரில் கற்றூண் வடிவில் எழுதிய ஆவணமாகும்.
உ+ம்: பதுளை தூண்கல்வெட்டு, கட்டுகஹகல்கே கல்வெட்டு

ii. மதகுருமாருக்குரிய பொருட்களை ஏனையவர்கள் பயன்படுத்து வதைத் தடுக்கும் நோக்காகக் கொண்டே இத்தகைய கல்வெட்டுக்கள் தோன்றின.

iii. பதுளைத் தூண் கல்வெட்டில் சில சட்டதிட்டங்களின் ஒரு தொகுதி பொறிக்கப்பட்டுள்ளது. குறிப்பாக வியாபார நகர் ஒன்றின் பொது நிர்வாக அமைப்பு முறையினைக் குறிக்கின்றது.

**17. சுவர்க் கல்வெட்டுக்கள்: பற்றிய குறிப்புக்கள்.**

i. கல்லால் உருவாக்கப்பட்ட தட்டையான ஒரு பலகையில் பொறிப்பது சுவர்க் கல்வெட்டாகும்.
உ+ம்: கல்பொத்த, மிகிந்தலை, தோணிகல சுவர்க் கல்வெட்டுகளை குறிப்பிடலாம்.

ii. இக்கல்வெட்டுகள் பொதுவாக மதகுருமாருக்கு விகாரைகள் தானம் செய்யப்பட்டபோது பொறித்தவையாக உள்ளது.

iii. சுவர்க் கல்வெட்டுக்களில் நான்காம் மகிந்தனின் மிகிந்தலைச் சுவர்க்கல்வெட்டு சிறந்ததாகும். இதில் மிகிந்தலை விகாரைத் தொகுதி, அதன் நிர்வாக நடவடிக்கைகள் தொடர்பான சட்டதிட்டங்கள் கொடுப்பனவுகள் போன்ற விடயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது.

iv. பொலநறுவையிலுள்ள நிஸங்கமல்ல மன்னனின் கல்பொத்த கல்வெட்டே கல்வெட்டுக்களில் மிகவும் பெரியதாகும்.

**18. கல்வெட்டுக்களின் முக்கியத்துவங்கள்.**

- வரலாற்று மூலாதாரங்களுள் கல்வெட்டுக்களே முக்கிய இடம் பெறுகின்றன. ஏனெனில் காலத்தை நிர்ணயிப்பதற்கு கல்வெட்டுக் களின் பங்களிப்பு மிகவும் முக்கியமானது.

i. இலக்கிய மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள விடயங்கள் பெரும்பாலும் கல்வெட்டுக்கள் மூலம் உறுதிப்படுத்தப் படுகின்றன.
உ+ம்: துட்டகைமுனுவின் படைத்தளபதிகள் பத்துப்பேர் பற்றி மகாவம்சம் குறிப்பிடும் விபரங்கள் சிதுல்பவ்வ மற்றும் சங்கபால விகாரைக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றமை.

ii. கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் விடயங்கள் சமகாலத்தில் பொறிக்கப்பட்டவையாக உள்ளமை இதன் சிறப்பம்சமாகும்

iii. கல்வெட்டுக்களின் மூலம் சிங்கள எழுத்துக்களின் வளர்ச்சி, சிங்கள இலக்கணம், அரசர்களின் பெயர்கள், பட்டங்கள் என்பவற்றுடன் பிரதேச ஆட்சியாளர்கள், இளவரசர்கள், பிராமணர்கள், பருமக, கமிக போன்றோர்களின் விபரங்களை அறிந்து கொள்ள உதவுகின்றது.

iv. கல்வெட்டுக்களின் மூலம் அக்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட வர்த்தகம், தொழில்கள் மற்றும் பொருளாதார நிலை, நிலத்தை அனுபவித்தமுறை, வரிஅறவிடப்பட்ட முறை என்பன பற்றி இலக்கிய மூலாதாரங்களில் காணப்படாத பல்வேறு விடயங்களை அறிய உதவுகின்றது.

உ+ம்: பதுளைத் தூண் கல்வெட்டு அக்காலத்து வர்த்தகத்தை அறிய உதவுகின்றது.

v. சமய வரலாறு பற்றிய விபரங்களை அறிய உதவுகின்றது. குறிப் பாக பௌத்த சமயப்பிரிவினர், வேறு சமய நம்பிக்கைகள், வழிபாட்டு முறைகள் போன்றன தொடர்பான தகவல்களை அறிய உதவுகின்றது.

உ+ம்: ஆராமை நிருவாகம் பற்றி மிகிந்தலை சுவர்க் கல்வெட்டு, அபயகிரி சமஸ்கிருத கல்வெட்டு, களுதியபொகுன கல்வெட்டு என்பன கூறுகின்றது.

vi. மக்களின் குடியேற்றப்பரம்பல், பௌத்த சமயத்தின் பரம்பல் மற்றும் அரசர்களின் ஆட்சி நிருவாக அதிகாரம் எவ்வளவு தூரம் பரவியிருந்தது போன்ற பல்வேறு விடயங்களை அறிய உதவுகின்றது.

உ+ம்: வல்லிபுர பொற்சாசனம் வசபனது ஆட்சி யாழ்ப்பாணம் வரை பரவலடைந்திருந்தமையை உறுதி செய்கிறது.

vii. குறுநில மன்னர்கள், பிரதேச ஆட்சியாளர்கள் பற்றி இலக்கிய மூலாதாரங்கள் குறிப்பிடாத பல விபரங்களைக் கல்வெட்டுக்கள் வெளிப்படுத்துகின்றமை.

உ+ம்: கந்துறுவெவச் கல்வெட்டில் ஐந்து அமைச்சர் பரம்பரை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**19.கல்வெட்டுக்களும் அவற்றின் மூலம் அறியப்படும் தகவல்களும்**

i. **கொடவாய தூண்கல்வெட்டு** :- துறைமுக வரி அறவிடப்பட்டமை பற்றியது

ii. **பதுளை தூண் கல்வெட்டு** :- வர்த்தக சந்தை ஒன்றின் நிருவாகம் பற்றியது

iii. **பெரிமியன்குளம் கல்வெட்டு** :- வர்த்தக மற்றும் கைத்தொழில்கள் பற்றியது.

iv. சிதுல்பவ்வ கல்வெட்டு :- நீதிமன்றின் மூலம் பெறப்படும் வருமானம் அப்பிரதேசத்தின் விகாரைக்குரியது.

v. திம்பிரிவாவிக் கல்வெட்டு :- இலம்பகர்ணரின் அரச பரம்பரை பற்றியது.

**20.நாணய மூலாதாரங்கள்: பற்றிய விடயங்கள்.**

- தொல்பொருள் அகழ்வுகள் மூலமாகவே நாணயங்களும் கண்டெடுக் கப்படுகின்றன. இதன் மூலம் பல உண்மைகளை அறியலாம்.
  - i. நாணயங்கள் கண்டெடுக்கப்பட்ட இடங்கள், அவற்றைச் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்ட உலோகத்தின் தன்மை, நிறை, நாணயங்களில் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள் போன்ற பல உண்மைகளை வெளிப்படுத்துகின்றன.
  - ii. பொருளாதார வளர்ச்சி, தொழிநுட்பவளர்ச்சி என்பன பற்றி அறியலாம். தங்கம், வெள்ளி, செப்பு நாணயங்கள் என்பன அவை வெளியிடப்பட்ட காலத்தின் பொருளாதார நிலையை வெளிக்காட்டுகின்றன.
  - iii. முத்திரை (இலச்சினை) பொறிக்கப்பட்ட நாணயம், புராண தரண எனப்பட்ட நாணயங்கள், யானை மற்றும் சுவஸ்திகா இலச்சினை பொறிக்கப்பட்ட நாணயம், இலட்சுமி உருவம் பொறிக்கப்பட்ட நாணயம், தம்பதெனிய செப்பு நாணயம், தங்க நாணயம், VOC நாணயம் ஆகியன வெவ்வேறு காலங்களில் இந்நாட்டில் பாவனையில் இருந்துள்ளன.
  - iv. இலங்கையில் உரோம, இந்திய, சீன, அரபு நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அதே போன்று மகாபராக்கிரமபாகு மன்னனின் கால நாணயங்கள் தென்னிந்தியாவில் கிடைத்துள்ளது.
  - v. நாணய விஞ்ஞான ஆய்வில் நாணயப் பரம்பல், அபிவிருத்தி, பல்வேறுநாணயங்கள் வெளியிடப்படல், உலோக விஞ்ஞானம், நாணயத்தின் பணப்பெறுமதி என்பன அடங்குகின்றது.
  - vi. வரலாற்றுக்குரிய கால நிர்ணயத்தைத் தீர்மானிப்பதற்கும் மேற்கொள்வதற்கும் நாணயங்கள் பெரிதும் உதவுகின்றன.

**21.சிதைவுகள் பற்றிய முக்கிய அம்சங்கள்.**

- i. புராதன கட்டடங்களின் எஞ்சியுள்ள பகுதிகள் சிதைவுகள் எனப்படுகின்றன.
- ii. இலங்கையின் அநுராதபுரம், பொலன்நறுவ, யாப்பகுவா நகரங்களின் வரலாற்று வளர்ச்சியை அறிய உதவுகிறது.
- iii. எமது முன்னோர் எவ்வறான தொழிநுட்பங்களைப் பயன்படுத்தி எவ்வாறான கட்டிடங்களை அமைத்துள்ளனர் என்பதை அறிந்து கொள்வதற்கு உதவுகின்றது.
- iv. சிதைவுகளுள் சிகிரியாவுக்கு முக்கிய இடமுண்டு ஏனெனில் அது பாதுகாப்பான கோட்டை என்ற வகையில் கட்டிட நிர்மானம்,

நீரகழிகள், பூங்காக்கள், குன்றின் மேல் அமைந்த அரச மாளிகை, சுவரோவியங்கள் என்பன காண்போரை வியக்க வைப்பதோடு அங்கு தொழில்நுட்ப பிரயோகம், சிறப்பான திட்டமிடல், அழகியல் இரசனை என்பன உயர் தரத்தில் காணப்படுகிறது.

v. கற்களால் மட்டமன்றி பிற்காலத்தில் மரங்களினாலும் கட்டிடங்கள் அமைக்கப்பட்டன. இதற்கு எம்பக்க தேவாலயம் சிறந்த உதாரணமாகும்.

vi. சிலைகள், செதுக்கல்கள், ஓவியங்கள் என்பன கலாசார வரலாற்றை பிரதிபலிக்கும் உயிரோட்டமான அம்சங்கள் ஆகும். எனவே மனிதனால் மதிக்கப்பட்ட அம்சங்களை அறிய சிதைவுகள் உதவுகின்றது.

vii. வெளிநாட்டு தொடர்புகள் பற்றி அறிந்து கொள்வதற்கும் சிதைவுகள் உதவுகின்றது.


கல்பொத்த கல்வெட்டு


தமிழ் பிராமிய கல்வெட்டு (பூநகரி)


உரோம நாணயங்கள்


வல்லிபுர தங்கஏடு


சேது நாணயம் – கந்தரோடை


போர்த்துக்கேயரின் இலங்கை நாணயம்



டச்சுச் சாதுவர் நாணயம் (1783)


பௌத்த சுவஸ்திகா நாணயம்


முதலாம் விஜயபாகுவின் நாணயம்


நாக சின்னம்


மருத்துவ ஓடம்



பதுளை தூண் கல்வெட்டு


மனிதனும் குதிரை முகமும்


சந்திரவட்டக்கல் (பொலநறுவை)


சந்திரவட்டக்கல் (அநுராதபுரம்)

# 2 இந்தியாவின் வரலாற்று ரீதியான வளர்ச்சி

**01.இந்தியா: அறிமுகம்.**

i) ஆசியா கண்டத்தில் "திபெத்தின்" தெற்குஎல்லையில் வாள்போன்று வளைந்து காணப்படும் மலைத்தொடர்களுக்கு தெற்கிலுள்ள பரந்த நிலப்பகுதி இந்தியா ஆகும். இது ஓர் உப கண்டமே.

ii) இவ் உபகண்டத்தை இந்துக்கள் "பாரததேசம்" என்றும், கிரேக்கர்கள் "இந்தியா" என்றும்(பாரசீக கல்வெட்டு குறிப்புக்களில் சிந்து என்பதற்கு ஒப்பானது) அழைக்கப்பட்டது.

iii) உலக நாகரிகங்களில் முதன்மையானவற்றுள் ஒன்றான சிந்து வெளிநாகரிகம் வீழ்ச்சியுற்ற பின்னர் இந்தியாவில் இடம்பெற்ற முக்கியமான வரலாற்று நிகழ்ச்சியாக ஆரியரின் வருகை காணப் படுகிறது.

**02.இந்தியாவின் தரைத்தோற்ற பிரிவுகள்**

- தரைத்தோற்ற அடிப்படையில் இந்திய உப கண்டத்தை மூன்றாக பிரிக்கலாம்.




i) **வட இந்தியா:-** இமய மலைத்தொட ரை வடக்கு எல்லையாகவும், விந்திய மலைத் தொடரை தெற்கு எல்லையாகவும் கொண்ட பிரதேசமாகும்

ii) **தக்கினபீடபூமி:-** விந்திய மலைத் தொடருக்கு தெற்கிலும், துங்க பத்திர நதிக்கு வடக்கிலும் உள்ளபிரதேசம் ஆகும்.

iii) **தென்இந்தியா:-** துங்க பத்திர நதிக்கு தெற்கே அமைந்துள்ள முக் கோண பிரதேசம் ஆகும்.

**02. இந்தியாவில் ஆரியக் குடியேற் றங்கள் நிறுவப்படுதல்**

i. ஆரியரின் பூர்வீக இடம்பற்றி வரலாற்றாய்வாளர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்ற போதிலும் பேராசிரியர் மாக்ஸ் முல்லர் போன்றோர் ஆரியர்கள் மத்திய ஆசியப் பகுதியில் இருந்து வந்தவர்கள் என கூறுகின்றனர்.

ii. மத்திய ஆசியாவின் கஸ்பியன் கடலைச் சூழவுள்ள ஸ்டெப்ஸ் புல்வெளிப் பிரதேசத்தில் வாழ்ந்த ஒரு கோத்திரமான ஆரியர்கள் குடித்தொகைப் பெருக்கம், கால்நடைகளுக்கான புல்வெளி நிலங்களின் தேவை போன்ற காரணங்களினால் மேற்கு, கிழக்கு நோக்கி இரு பிரிவுகளாக புலம்பெயர்ந்த சென்றனர்.

iii. மேற்கு நோக்கிச் சென்றவர்கள் கிரேக்கம் உட்பட பல ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றனர்.

iv. கிழக்கு நோக்கிச் சென்றவர்கள் தெற்கேயுள்ள ஈரான், ஆப்கானிஸ் தான் ஆகிய நாடுகளைக் கடந்து கைபர் கணவாய் வழியாக சிந்துநதிப் பள்ளத்தாக்கை அண்மித்த பஞ்சாப் பிரதேசத்தில் முதன் முதலில் குடியேறினர்.

v. இதன்பின்னர் சில ஆரியக்குழுக்கள் கங்கை, யமுனை நதிப் பகுதியின் மேற்குப் பகுதிகளில் (தற்போதைய டில்லியை அண்மித்தபகுதி) தமது குடியிருப்புக்களை வியாபித்தனர்.

vi. கி.மு. 7ஆம் நூற்றாண்டாகும் போது கங்கை - யமுனை சமவெளி வழியாக வட இந்தியா முழுவதும் தமது குடியேற்றங்களை நிறுவிய ஆரியர் தென்னிந்தியப் பிரதேசங்களை நோக்கி விரிவடைந்தபோது "விந்திய மலைத்தொடர்" தடையாக இருந்தது.

vii. ஆயினும் விந்திய மலைத்தொடர் கடந்த சில ஆரியக் குழுக்கள் டெக்கான் மேட்டுப்பகுதியில் தமது குடியிருப்புகளை நிறுவினர். பின்னர் கி.மு. 6, கி.மு. 5ஆம் நூற்றாண்டளவில் சில ஆரியக் குழுக்கள் தென்னிந்தியாவுக்கும், இலங்கைக்கும் தமது குடியிருப் புகளை வியாபித்தனர்.

### 04.ஆரியர் வருகை பற்றி கூறும் மூலாதாரங்கள்.

- ஆரியரின் குடிப்பெயர்வு, குடிப்பரம்பல் பற்றிய விபரங்களை அறிந்து கொள்ள இலக்கியங்களே பெரிதும் துணைபுரிகிறது.

  i) வேத நூல்கள் (இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்). இந்தியாவிற்கு ஆரியர் வந்து குடியேறிய காலம் முந்திய வேதகாலம் (இருக்கு வேத காலம்) என்றும், அவர்கள் இந்தியாவில் பரவத் தொடங்கிய பின்னரான காலம் பிந்திய வேதகாலம் என்றும் கூறுவர்.

  ii) பிராமணங்கள்

  iii) உபநிடதங்கள்

  iv) புராணங்கள்

  v) மகாபாரதம் போன்ற வீரகாவியங்கள்

### 05.ஆரியரின் சமூக அமைப்பு: முக்கிய அம்சங்கள்.

i) சமூகமைப்பின் அலகாகக் குடும்பம் விளங்கியது.

ii) ஆரியர் சமூகம் ஒரு தந்தை வழிச் சமூகமாக இருந்துவந்தது.

iii) ஆரியர், ஆரியர் அல்லாதோர் என்று இரு மக்கள் பிரிவினர் இருந்தனர்

iv) பிந்திய வேத காலத்தில் ஆரிய சமூகத்தில் நான்கு சாதிப்பிரிவுகள் காணப்பட்டன.

1. **பிராமணர் :** வேதங்களை ஓதிய குடும்பங்களின் பிரிவாகும். இவர்களே சமூகத்தில் உயர்ந்த முதற்பிரிவினராக இருந்ததுடன் அனைத்து விதமான சலுகைகளையும் பெற்றுக்கொண்டனர்.
2. **சத்திரியர்:** போர்த்தொழிலில் ஈடுபட்ட பிரிவினராகும். இவ்வம்சத்தைச் சேர்ந்தவர்கள் மன்னர்கள் மற்றும் சேனாதிபதிகள், ஆட்சியாளர்களாகவும் கருதப்பட்டு வந்தனர்.
3. **வைசிகர்:** தொழிலாளரையும் வணிகரையும் கொண்ட பிரிவினராகும். அதாவது சாதாரணதொழிலில் ஈடுபட்டவரைக் குறிக்கிறது.
4. **சூத்திரர்:** ஏனைய கோத்திரங்களிலிருந்து அடிமைப்படுத்தப் பட்ட பிரிவினராகும்.

v) இறைச்சி, பால், நெய், தயிர், மரக்கறி, அரிசி, பார்லி, எள் என்பன உணவாகக் கொள்ளப்பட்டன. அத்துடன் இலைகளைச் சாறாகப் பிழிந்து தயாரித்த "சோமபானம்" மக்களால் அதிகம் விரும்பப் பட்டது.

vi) பருத்தி, உரோமம், தோல் என்பவற்றால் தயாரிக்கப்பட்ட உடை களைப் பயன்படுத்தினர்.

vii) ஆண், பெண் இருபாலாரும் ஆபரணங்களை அணிந்தனர்

viii) நாடகம், வீணைவாசித்தல், சங்கீதம் ஆகிய அழகியற் கலைகள் வளர்ச்சியுற்றிருந்தன. அத்துடன் மல்யுத்தம், சூதாட்டம் போன்ற விளையாட்டுக்களும் காணப்பட்டன.

**06. ஆரியரின் சமயம்.**

i) ஆரியர் இயற்கைச் சக்திகளை தெய்வங்களாக வணங்கினர்.

ii) அனைத்து வேதகாலக் கடவுளரும் இயற்க்கைச் சக்திகளாக இருந் தனர். (இந்திரன், வருணன், அக்கினி, வாயு) அக்கினி நெருப்புக்கு அதிபதி யாகவும், வருணன் மழை, செழிப்பு என்பவற்றிற்கு அதிபதியாகவும் ஏற்றுக் கொண்டனர்.

iii) ஆரியர்கள் இத் தெய்வங்களின் அனுக்கிரகத்தைப் பெறும் நோக் கமாக வேள்விகள், யாகங்கள், நிவேதனங்களைச் செய்தனர்.

iv) பிராமணியக் கொள்கை வளர்ச்சி அடைந்திருந்தது.

v) கடுமையான தவம் அனுஷ்டித்து உண்மையைத் தேடிச் சென்ற முனிவர்கள் பிந்திய வேதகாலத்தில் காணப்பட்டனர்.

vi) உண்மையைத் தேடியறிய முற்பட்டதால் பௌத்த மதமும், சமண மதமும் தோன்றக் காரணங்களாயின.

## 07.ஆரியரின் பொருளாதார முறை

i) விவசாயம்

- ஆரியர்கள் முதலில் இடையர்களாக வசித்து வந்தனர். பிற்காலத்தில் அவர்கள் நிரந்தரமாக கமத்தொழிலை மேற்கொண்டனர்.
- கோதுமை, அரிசி என்பன முக்கிய தானியங்களாக விளங்கியது.
- நீர்ப்பாசன முறைகளை அறிந்திருந்தனர்.
- வயல்கள், கால்நடைகள், குதிரைகளை மக்கள் செல்வங்களாக கருதினர். குறிப்பாக பசுவைப் புனிதமாகக் கருதினர்.
- ஆடு, செம்மறியாடு, தோல், கம்பளி என்பவற்றை பெற்றுக் கொள்வதற்கென வளர்க்கப்பட்டன.

ii) கைத்தொழில்

- பட்டுத்துணி, பருத்தித்துணி என்பன உற்பத்தி செய்யப்பட்டன.
- துணிக்குச் சாயமூட்டுதல், அலங்காரத் தையல் வேலைகள் என்பவற்றை அறிந்திருந்தனர்.
- வீடுகள் கட்டவும், வீட்டுத்தளபாடங்கள் செய்யவும் தச்சர்கள் இருந்தனர்.
- இரும்பைப் பயன்படுத்தி விவசாய உபகரணங்கள், வாள், ஈட்டி போன்ற ஆயுதங்களைச் செய்தனர்.

iii)தொழில்

- பல்வேறு தொழிலைச் செய்வோர் காணப்பட்டனர். குறிப்பாக பொற்கொல்லர், குயவர், வர்த்தகர், குருமார் ஆகியோர் இருந்தனர்.

iv)வர்த்தகம்

- பண்டமாற்று மூலம் வர்த்தகம்நடைபெற்றது.
- தரைவழியாகவும், நீர்வழியாகவும் வர்த்தகம் நடைபெற்றது
- பொருட்களைக் கொண்டு செல்வதற்கு வண்டிகள், வள்ளங்கள் என்பன பயன்படுத்தப்பட்டன.
- தூர நாடுகளுடனும் வர்த்தகம் நடைபெற்றது.

## 08. ஆரியரின் நிர்வாக அமைப்பு.

i) இந்தியாவினுள் கூட்டம் கூட்டமாக வந்த ஆரியர் திக்குத்திக்கான இடங்களில் குடியேறினர்.

ii) நாளடைவில் இக்குடியேற்றங்கள் கிராமங்களாக மாறின.

iii) கிராமங்களுக்கு பொறுப்பாக கிராமசபை(கம்சபா) காணப்பட்டது. இதன் தலைவன் "காமினி"(கிராமணி) என அழைக்கப்பட்டான். இவனே கிராம மக்களிடம் வரியை சேகரிக்கும் பொறுப்பைக் கொண்டிருந்தான்

iv) புராதன வைதீக நூல்களின் பிரகாரம் ஆரிய மக்கட் கூட்டத்தினரிடையே சண்டைகள் இடம்பெறுகின்றபோது அதனை வழிநடத்த தெரிவுசெய்யப்பட்டவரை "ராஜன்" அல்லது "தலைவன்" என அழைத்தனர்.

v) பல கிராமங்களை ஒருவன் வெற்றிகொண்ட பொழுது முடியாட்சி முறை தோன்றியது. சுருக்கமாகக் கூறின் இராச்சியங்கள் உருவாகின. இதன் தலைவனாக "ராஜன்" காணப்பட்டான்.

vi) காலப்போக்கில் இராட்சியங்களின் உரிமை பரம்பரை முடியாட்சியாக நிலைபெற்றது.

vii) படிப்படியாக சாதி முறையை அடிப்படையாகக் கொண்ட செயற்பாடுகள் வளர்ச்சியடைந்தன.

viii) புரோகிதர் என்ற பதவியை அரசவையில் வகித்த பிராமணர் மன்னனுக்கு ஆலோசனை வழங்கியதோடு விழாக்களை நடாத்த ஒழுங்குகளை மேற்கொண்டனர்.

ix) சேனாதிபதி எனப்பட்ட படைத்தலைவன் மற்றொரு முக்கிய அதிகாரியாக இருந்தான்.

x) அரசனுக்கு ஆலோசனை வழங்க "சமிதி", "சபா" என்ற இருவகை சபைகள் இருந்தன.

xi) நீதி வழங்குவதில் மன்னன் நேரடித் தொடர்பு கொண்டிருந்தான்.

**09.ஆரியர் குடியிருப்புக்களின் பரவல்.**

i) இந்து நதியை அண்டி அமைந்துள்ள "சப்தசிந்து" (இன்றைய பஞ்சாப்) பகுதியிலேயே ஆரியர் முதலில் குடியேறினர். ரிக்வேதத்தின்படி சப்தசிந்து என்பது இந்துநதியின் ஏழு கிளையாறுகளை உள்ளடக்கியதாகும்.

1. வீனஸ்தா
2. அசிக்னீ
3. சதுஸ்ரி
4. சஸ்ரஸ்வதி
5. பருஷ்னி
6. ருஷாட்வன
7. விபாஷ

ii) ஆரியர்கள் குடியிருப்புக்களை அமைக்கும்போது பின்வரும் காரணிகளை கவனத்தில் கொண்டனர்.

1. நீர் வசதி
2. வளமான மண்
3. சீரான நில அமைப்பு
4. போக்குவரத்து வசதி.
5. காலநிலை.

iii) ஐத்திய பிரம்மன் (Aitriya Brahman) என்ற நூலின்படி ஆரியக் குடியேற்றங்களாக பின்வரும் இடங்கள் காட்டப்பட்டுள்ளன.

1. மேற்கு இந்தியாவிலுள்ள அப்பாச்சய தேசம்
2. மத்தியமாதேசம்.



3. உடுச்சியதேசம்/ உத்தரப் பிரதேசம்

4. பராச்சியதேசம்

5. தக்கினதேசம் (அந்திரா, சபாரா, முனிவா என்ற பழங்குடியினர் வாழ்ந்தனர்)

**10.பதினாறு பெருங்குடியிருப்புகள் (மஹாஜனபதங்கள்)**

i. வடஇந்தியாவுக்குள் ஆரியர் பரவியகாலத்தில் சிறு சிறு இராச்சியங்கள் தோன்றின.

ii. பௌத்த நூல்களுக்கிணங்க கி.மு 6ம் நூற்றாண்டில் ஆரம்பித்த இவ் இராச்சியங்கள் 16 மஹாஜனபதங்களென அழைக்கப்பட்டன அவையாவன.

| இராச்சியங்கள் | தலைநகர் |
|---|---|
| 1. அங்கம் | சம்பா |
| 2. மகதம் | பவுளுப்/கிரிவ்ராஜ |
| 3. காசி | வாரநாசி |
| 4. கோசலை | குசவதி(தென்கோசலை), சரஸ்வதி (வடகோசலை) |
| 5. மல்ல | குசிநாற, பாவ |
| 6. வஜ்ஜி | வைசாலி |
| 7. வத்சய | கௌசம்பி |
| 8. சேதி | சோத்திமதி |
| 9. அவந்தி | உஜ்ஜேனி |
| 10. மத்ஸயம் | விரட் |
| 11. சூரசேனம் | மதுரா |
| 12. குரு / கௌரவம் | டில்லி, இந்திரபிரஸ்த |
| 13. பாஞ்சாளம் | அபிச்சத்ர, கம்பில்யா |
| 14. காந்தாரம் | தக்ஷிலா, புஸ்கலவதி |
| 15. காம்போஜா | காபோ |
| 16. அஸ்காமம் | பிரதிஸ்தன |

iii. **மகதம், கோசலை, அவந்தி, வத்சய** ஆகிய பெருந்தேசங்கள் ஏனைய தேசங்களை மத்சய கோட்பாட்டின்படி அடக்கி ஆண்டன. இதனால் அரசியல் ரீதியில் முக்கியத்துவம் பெற்று விளங்கின

iv. **வஜ்ஜி, மல்ல** என்பன கண அரசுக்களாக இருந்தன. இங்கு செல்வந்த வர்க்கத்தினரின் ஆதிக்கம் காணப்பட்டது.

v. வஜ்ஜி, மல்ல ஆகிய அரசுகளுக்கு வடமேற்கே கோசலை அரசும், தென்கிழக்கே மகத அரசும் காணப்பட்டது. மகதம், கோசலை இரண்டிலும் முடியாட்சி முறை நிலவியது.

## மஹாஜனபதங்கள்




**11.மகத அரசின் எழுச்சி**

i) மகதத்தை கரியங்க **வம்சம், சிசுநாகவம்சம், நந்தவம்சம், மௌரிய வம்சம்** ஆகிய நான்கு வம்சங்கள் ஆட்சி செய்தன.

ii) ஏனைய முடியரசுகளுக்கு மேலாக மகத்தை உயர்த்துவதற்கு முயன்ற முதல் ஆட்சியாளன் **பிம்பிசாரன்** ஆவான். இவனது ஆட்சியில் மதத்தின் தலைநகரமாக "ராஜ கிருகம்" (பாளிமொழியில் ராஜஹக) விளங்கியது.

iii) மகதத்தின் எழுச்சிக்கு பிம்பிசாரன் மேற்கொண்ட நடவடிக்கைகள் வருமாறு

- திருமணத் தொடர்புகளினால் தன் அதிகாரத்தைப் பல பிரதேசங்களுக்கு நிலை கொள்ளச் செய்தான்.

உ+ம்: 1. கோசல மன்னன் மகரகோசலனின் மகளாகிய கோசலா தேவியை திருமணம் செய்ததன் மூலம் முக்கியத்துவம் வாய்ந்த காசியைப் பெற்றுக் கொண்டமை.

2. வைசாலி நாட்டு மன்னன் சேடகனின் மகள் செல்லன் னாவை திருமணம் செய்தமை

- போர்க்கொள்கையைக் கடைப்பிடித்து மகத அரசின் பிரதேசங்களை விரிவுபடுத்தினான்.

  உ+ம்: பிரம்மதத்த மன்னனுடன் போரிட்டு அங்கதேசத்தை கைப்பற்றி மகதத்துடன் இணைத்தமை

- அரசியல் நட்புறவின் அடிப்படையில் அயலிலுள்ள மன்னர்களுடன் தொடர்புகளைப் பேணியமை.

  உ+ம்: காந்தாரம், காம்போஜ போன்ற நாடுகளுடன் நல்லுறவுகளை வைத்திருந்தமை. குறிப்பாக காந்தார நாட்டு தூதுவர் இவனது அரசசபையில் இருந்தமை.

- பல்வேறு சமயப் பிரிவினருடனும் சிறந்த உறவைப் பேணி மகதத்தை எழுச்சியுறச் செய்தான்.

  உ+ம்: பிம்பிசாரன் கௌதம புத்தரினதும் மகாவீரரதும் ஆதாரவாளனாக விளங்கினான்.

iv) பிம்பிசாரமன்னனைத் தொடர்ந்து மகன் அஜாத்சத்ரு (தந்தையைக் கொலை செய்து) ஆட்சிக்கு வந்தான் இவன் மகதத்தின் தலை நகரை **பாடலிபுரத்திற்கு** (இன்றைய பட்னாவிற்கு) மாற்றினான்.

v) அஜாத்சத்ரு லிச்சவி உட்பட அனைத்து கண அரசுகளின் அதி காரங்களையும், கோசல அரசு உட்பட பல அரசுகளையும் மகதத்தின் கீழ் கொண்டு வந்தான்.

vi) மகதம் நந்தவம்சத்தின் காலத்தில் மிகப்பலம் பொருந்தியதாகக் காணப்பட்டது. இவ்வம்சத்தின் முதல் மன்னனாக **மகாபத்ம நந்தனும்** இறுதி மன்னனாக **தனநந்தனும்** விளங்கினார்கள்.

vii) கிரேக்க இனத்தைச் சேர்ந்த பேரரசன் மகா அலெக்சாந்தர் பஞ்சாப் உட்பட வடமேற்குப் பிரதேசங்களை ஆக்கிரமித்த போதும் மகதத்தை நந்தவம்சம் ஆட்சி செய்ததால் ஆக்கிரமிக்க முடியாமல் போனதாக ஹெரடோரஸ் தனது நூலில் குறிப்பிடுகிறார்.

viii) நந்தவம்சத்தைத் தொடர்ந்து மகதத்தை 137 வருடங்கள் மௌரிய வம்சத்தவர்கள் ஆட்சி செய்தனர்.

**12. மௌரியப்பேரரசு: முக்கிய அம்சங்கள்.**

i) மௌரியர் கால வரலாற்றை அறிவதற்கு இலக்கியங்களும் மௌரியர் காலத்துக் கல்வெட்டுக்களும், பிற நாட்டு இலக்கியங்களும் சான்று பகிர்கிறது.

உ+ம்: கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம், மெகஸ்தனீஸ் என்பவரின் இண்டிகா, அசோக கல்வெட்டுக்கள்.

ii) வட இந்தியாவில் மௌரிய அரச பரம்பரையின் ஆரம்ப ஆட்சியாளன் **சந்திரகுப்த மௌரியன்** ஆவான். இவனுக்குப் பின்னர் மகன் பிந்துசாரனும் தொடர்ந்து இவனது மகன் அசோகனும் ஆட்சி புரிந்தனர்.

iii) மௌரியர் கால வரலாற்றைக் கற்பதற்கு உதவும் மூலாதாரங்கள் வருமாறு

- கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம்.
- மெகஸ்தனீஸின் இண்டிகா நூல்
- முத்ரா ராஸவம்சம் என்ற வரலாற்று நாடக நூல்
- அசோக கல்வெட்டுக்கள்
- தீபவம்சம், மகாவம்சம், மகாபோதி வம்சம்.

**13. மௌரிய அரசர்கள்.**

i) **சந்திர குப்த மௌரியன்**

- மௌரிய வம்சத்தின் முதல் மன்னனாவான்
- நந்தகுலத்தைச்சேர்ந்த தனநந்த மன்னனுக்கு சேனைத்தலைவனாக விளங்கினான்.
- அலெக்சாந்தர் இந்தியாவிலிருந்து வெளியேறியவுடன் சாணக்கியன்" (கௌடில்யன், விட்டுணுகுப்தன்) என்ற பிராமண அரசியல் அறிஞரின் உதவியுடன் படையை திரட்டி அலெக்சாந்தரின் அதிகாரிகளைத் தோற்கடித்து பஞ்சாப்பகுதியை தனதாக்கினான்.
- அலெக்சாந்தரின் மரணத்தின் பின் அவருடைய ஆட்சிப் பிரதேசங்களைக் கைப்பற்றும் நோக்குடன் காபூல் பள்ளத்தாக்கு வழியே இந்தியாவினுள் நுழைந்து சிந்துநதியைக் கடந்து பஞ்சாப் பகுதியைக் கைப்பற்றிய **செலியுகஸ் நிகேடர்** என்பவனுடன் போர் செய்து பஞ்சாப் பகுதியைத் தனதாக்கினான். இதன் பின்பு தனநந்தனை தோற்கடித்து மகதப் பேரரசைத் தனதாக்கினான்.
- மேற்கில் பாரசீகப் பேரரசு வரையிலும், வடக்கில் இமயமலை வரையிலும், தெற்கில் கிருஷ்ணா, துங்கபத்ரா ஆகிய பிரதேசங்கள் வரையிலும் மௌரியப் பேரரசு இவனது ஆட்சியில் பரவியிருந்தது.
- இந்திய வரலாற்றின் முதல் மாமன்னர் என சந்திரகுப்த மௌரியன் குறிப்பிடப்படுகிறான்.
- செலியுகஸ் நிகேடர் தனது நட்புறவின் சின்னமாக **மெகஸ்தனீஸை** அரசியல் தூதுவராகப் பாடலிபுர அரசவைக்கு அனுப்பினான்.

ii) **பிந்துசாரன்**

- சந்திரகுப்த மௌரிய மன்னனின் மகன் ஆவான்.
- கிரேக்க நூலாசிரியர்கள் இவனை "அமித்திரகாதர்" என அழைக்கின்றனர். பகைவரைக் கொன்று முடிப்பவர் என்பது இதன் பொருளாகும்.
- இவன் ஆட்சிக்கு வந்தபின் தட்சசீலத்திலும், உஜ்ஜேனியிலும் புரட்சிகள் ஏற்பட்டன. அவற்றை அடக்குவதற்கு மகன் அசோகன் அனுப்பப்பட்டான் எனவும் கூறப்படுகிறது.

- இவனைத் தொடர்ந்து மகனான அசோகன் கி.மு. 269இல் சிம்மாசனத்தைப் பெற்றுக் கொண்டான்.

iii) அசோகன்

- தேவநம்பிய பியதஸ்ஸி (கடவுளின் அன்பன்) என்ற இயற் பெயரை உடைய இவன் ஆட்சிக்கு வந்த பின்பே அசோகன் (துயர் அற்றவன்) என்ற பெயரைச் சூட்டினான்.
- அசோகனைப் பற்றி அறிவதற்கு பௌத்த ஜைன சூத்திரங்களும், அசோகக் கல்வெட்டுக்களும் முக்கிய சாதனங்களாக உள்ளது.
- தந்தையின் ஆட்சியில் "உஜ்ஜேனியை" தலைநகராகக் கொண்ட அவந்திக்கு அரசபதிலாளனாக கடமையாற்றிய இவன் தந்தை இறந்தபின் ஆட்சியுரிமையை பெற்றபோதும் சகோதரர்களி டையே எழுந்த தகராறு காரணமாக கி.மு. 269 இலேயே இவனது முடிசூட்டுவிழா இடம்பெற்றது.
- போர்த்தந்திர நோக்கிலும் வர்த்தகநோக்கிலும் முக்கிய பிரதேசமாக விளங்கிய கிழக்கு தக்கணத்திலிருந்த "கலிங்கத்தை" (தற்போதைய ஒரிஸா) கடும் யுத்தத்தின்பின் வெற்றி கொண்டதால் மௌரியப் பேரரசு அதிக வலிமையாக மாறியது.
- இப்போரிலே கலிங்கத்திற்கு ஏற்பட்ட பேரழிவைக்கண்ட இவன் பெரும் வியாகுலமுற்றான். இதனால் இப்போர் உண்மையில் ஒரு வெற்றியன்று என தனது கல்வெட்டுக்களில் பொறித்துள்ளான்.
- இவன் காலத்தில் புஷ்ய மித்திரர் படைத் தளபதியாக இருந்தான்.
- இச்சந்தர்ப்பத்திலேயே புத்ததர்மம் பற்றி அறிந்து கொள்வதற்கு இவனுக்கு வாய்ப்புக் கிடைத்தது. இவன் "நிக்ரோட" என்ற சாமனேரரிடம் (இளம்புத்தகுரு) புத்ததர்ம போதனைகளை கேட்டு சமண சமயத்தை விட்டு பௌத்த சமயத்தைத் தழுவினான்.
- இதன் பின்பு போர் தொடுத்து நாடுகளைக் கைப்பற்றும் "திக்விஜய" கொள்கையை கைவிட்டு "தர்மவிஜய" கொள்கையை (மனித உள்ளத்தை வெல்லும்) கைக்கொண்டான்.
- சமூகசேவைகளை மேற்கொள்வதற்காக அசோகனால் "தர்மம காந்திரர்" (உயரிய அலுவலர்) எனப்பட்ட உத்தியோகத்தர்கள் நியமிக்கப்பட்டனர்
- **எல்லாப் பிரசைகளும் எனது பிள்ளைகள்** என்றே எல்லோரையும் கருதினான்
- அசோகனுடைய கல்வெட்டுக்களின் படி தென்திசையில் சோழ, பாண்டிய, தம்பபண்ணி போன்ற இராச்சியங்களுடனும் வடமேற்கு திசையில் மேற்கு ஆசியாவின் சிரியா, எகிப்து, போன்றவற்றுடனும் சில கிரேக்க இராச்சியத்துடனும் நல்லுறவைக் கொணடிருந்தான்.
- அசோகன் சண்டசோகா (கொடுமை நிறைந்தவர்), காமசோகா என அழைக்கப்பட்டான்.

iv) அசோகப் பேரரசு விரிவான பிரதேசங்கள்.

1. ஷா பஸ்கர்
2. மங்கேரா
3. கல்சி
4. ருவின்டை
5. நேபாளம்
6. காஷ்மீர்
7. நிக்லிவர்
8. அழகாபாது
9. கிரிநர்
10. மஸ்ரி
11. லொறியன் ரங்கை




**14. அசோக மன்னனின் பணிகள்.**

- அசோகன் மக்களின் நல்வாழ்விற்காகப் பல அரிய நற்பணிகளை மேற்கொண்டார்.
  - i) நீண்ட பெருந்தெருக்களை அமைத்தல்.
  - ii) நிழலின் பெருட்டு வீதியின் இரு மருங்கிலும் மரங்களை நாட்டுதல்.
  - iii) ஓய்வுக்கான மண்டபங்கள், கிணறுகள், குளங்கள் (குடிநீருக்காக) அமைத்தல்.
  - iv) வழிப்பறிக் குற்றங்களைத் தடுத்தல்.
  - v) மனிதர்களுக்குப் போலவே மிருகங்களுக்கும் வைத்தியசாலைகள் அமைத்தல்.
  - vi) மூலிகைச் செடிகளைப் பயிரிட்டும் அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தும் மருத்துவத்துறையை வளர்த்தார்.
  - vii) தர்ம மகாமாத்ராக்கள் என்ற பெயருடைய அதிகாரிகள் நியமிக்கப்படல்.
  - viii) சோழதேசம், பாண்டியதேசம், தம்பண்ணி, சிரியா, எகிப்து ஆகிய நாடுகளுடன் நெருங்கிய தொடர்பைக் கொண்டி ருத்தல்.

**15. அசோகன் புத்தசாசன மேம்பாட்டிற்கு ஆற்றிய சேவைகள்.**

- பௌத்த மதத்தைப் பரப்புவதற்கு உதவிய முதல் இந்திய மன்னன் அசோகன் ஆவான்.
  - i) தர்ம வாசகங்களை கல்வெட்டுக்கள் ஊடாகப் பரப்பியமை.
  - ii) சமயப் பிரச்சாரங்களுக்கு அதிகாரிகளை நியமித்தமை.
    உ-ம் : தர்ம மகாந்திரர், தர்ம யுக்தர்கள்.
  - iii) தர்ம யாத்திரிகைகளை நடாத்தியமை.
  - iv) மூன்றாவது பௌத்த பேரவையைக் கூட்டியமை.

v) வெளிநாடுகளுக்கு சமயம் பரப்பும் குழுக்களை அனுப்பியமை.

vi) சமயம் சார்ந்த கட்டடங்களை நிர்மானித்தல், புனருத்தானம் செய்தல்.

உ-ம் : சாஞ்சி தூபி நிர்மானித்தமை.

- கி.பி 640 இல் இந்திய விஜயம் செய்த "ஹியுங்சாங்" என்ற தேசசஞ்சாரி யான மதகுரு இந்தியா எங்கிலும் அசோகனால் உருவாக்கப்பட்ட தூபிகளும் கோபுரங்களும் இருந்ததாகக் குறிப்பிட்டார்.

---

**மூன்றாவது பௌத்த பேரவை**

- அசோக்மன்னன் காலத்தில் (கி.மு 252) மூன்றாவது பௌத்த பேரவை பாடலிபுர நகரில் கூடியது.
- இதற்கு "மொகலிபுத்ரதிஸதேரர்" தலைமை வகித்தார்.
- இப்பேரவை முடிவுகளின்படியே ஒன்பது நாடுகளுக்கு தர்ம தூதுக்குழுக்கள் அனுப்பி வைக்கப்பட்டன.

1. தம்பபன்னி (இலங்கை)
2. சுவர்ணபூமி (பர்மா)
3. மகிசமண்டல (மைசூர்)
4. வனவசிதேசம் (வடகணர)
5. அபரந்ததேச (சுப்ர துறைமுகத்தைச் சுற்றியுள்ள பிரதேசம்)
6. மகராஷ்ரா
7. யோனகதேசம்
8. காஷ்மீர்
9. நேபாளம்

---

**16. அசோகனது முக்கிய பாறைக் கல்வெட்டுக்கள்.**

- அசோகனது பதினான்கு பாறைக் கல்வெட்டுக்கள் காணப்படுகிறது. இவற்றில் அசோகனுடைய ஆட்சிமுறை, நீதி, தர்மம் முதலியனபற்றிய விபரங்கள் காணப்படுகின்றன.

i) **1ஆவது பாறைக் கல்வெட்டு:** எதிர்காலத்தில் ஒரு உயிரும் கொல்லப்படமாட்டாது.

ii) **2ஆவது பாறைக் கல்வெட்டு:-** மருந்து மூலிகைகளை பயிரிடல், நிழல்தரு மரங்களை வீதி ஓரங்களில் நாட்டுதல்.

iii) **3ஆவது பாறைக்கல்வெட்டு:-** ஒருவன் தன் தந்தைக்கும் தாய்க் கும் கீழ்ப்படிதல் நடத்தல் நல்லது.

iv) **5ஆவது பாறைக் கல்வெட்டு:-** 13 ஆண்டு காலத்துக்குப் பிறகு முதன் முதலாகத் தர்மத்தைப் பரப்பும் அதிகாரிகளை நியமித்தல்.

v) **7ஆவது பாறைக் கல்வெட்டு:-** அவரவர் தமது கடமையைச் செய்க.

vi) **9ஆவது பாறைக் கல்வெட்டு:-** தந்தை, ஆசிரியர் போன்றோரிடம் மரியாதையாக இருத்தல் வேண்டும்

vii) **10ஆவது பாறைக் கல்வெட்டு:-** அரசரும் அதிகாரிகளும் மக்கள் நன்மைக்காகப் பாடுபடுதல் வேண்டும்.

viii) **12ஆவது பாறைக் கல்வெட்டு:-** பிறருடைய சமயத்தைப் பழித்துக் கூறக்கூடாது.

ix) **13ஆவது பாறைக் கல்வெட்டு:-** கலிங்கப் போரால் ஏற்பட்ட துயரங்கள் உயிரிழப்புக்கள் முதலிய விளைவுகள் பற்றியது.

x) **14ஆவது பாறைக் கல்வெட்டு:-** என்பிள்ளைகளோ, பேரப்பிள்ளைகளோ புதிய திக் விஜயத்தை மேற்கொள்ளாது தர்ம விஜயமே உண்மையான விஜயம் எனக் கொள்ளுதல்.

**17.மௌரிய நிர்வாகத்தின் பண்புகள்.**

i) அரசனே நிர்வாகத்தில் பிரதானியாக இருந்தமை
ii) சட்டம், அதிகாரம், நீதித்துறை, ஆயுதப்படை போன்றவற்றின் முழு அதிகாரமும் அரசனிடம் இருந்தமை. இது மத்திய மயப்பட்ட நிர்வாகத்திற்கு எடுத்துக்காட்டாகும்.
iii) நிர்வகாத்தில் அரசனுக்கு அறிவுரை வழங்கவும், உதவவும் அமைச்சரவை இருந்தது. "மந்திரி பரிசத்" என அமைச்சரவையை அழைத்தனர். இங்கு தலைமை அமைச்சர், புரோகிதர், சேனாதிபதி, இளவரசர் ஆகிய நால்வரும் இடம்பெறுவர்.
iv) பிரதேச நிர்வாகம் அரச குடும்பத்தின் இளவரசர்களால் அல்லது அமைச்சர்களால் மேற்கொள்ளப்பட்டது.
v) நாடு பல மாநிலங்களாகவும் (இராஷ்டிரங்கள்) மாநிலங்கள் பல மாவட்டங்களாகவும் மாவட்டங்கள் பல ஊர்களாவும், (குறிப்பாக பத்து, நூறு, நாற்பது, இருபது ஊர்களாகவும்) பிரிக்கப்பட்டு ஆட்சி அதிகாரம் பரவலாக்கப்பட்டிருந்தது.
vi) மாவட்ட தலைமை அதிகாரிகளை "ஸ்தானிகர்கள்" என்றும் ஊர் (கிராமம்) அதிகாரிகளை "கோபாக்கள்" என்றும் அழைத்தனர்.
vii) நகரத்தை ஆட்சி செய்த குழு "நகராண்மைக் கழகம்" என அழைக்கப்பெற்றது.
viii) பாடலிபுர நகர நிர்வாகமானது சந்திரகுப்த மௌரியர் காலத்தில் ஆறு வாரியங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. குறிப்பாக கைத் தொழில் வெளிநாட்டு நடவடிக்கைகள், பிறப்பு இறப்பு, வர்த்தக நடவடிக்கை, உற்பத்தி நடவடிக்கை, வரிவருமானம் என்பன ஆறு வாரியங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன.
ix) நீதித்துறை செயற்பாடு அரசனைச் சார்ந்ததாக இருந்த போதிலும் அதனை செயற்படுத்தும் அதிகாரம் பல்வேறு நிலையிலிருந்த அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. குறிப்பாக கிராம மட்டத்திலிருந்து அரசன் வரையிலும் நீதித்துறை அதிகாரம் பரவலாக்கப்பட்டிருந்தது.

**18.மௌரியர் காலத்தின் பண்பாடு : முக்கிய அம்சங்கள்.**

i) **சமயம்.**
- சமயப்பொறைக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது.
- இந்து, பௌத்த, ஜைன மதங்கள் காணப்பட்டது.
- அசோகனது ஆட்சியில் மூன்றாவது பௌத்த மகாநாடு நடாத்தப்பட்டமை முக்கிய சமய நிகழ்வாகும்.

- இந்தியாவினுள்ளும் வெளிநாடுகளிலும் சமயம் பரப்பப் பட்டது

  உ+ம்: காஷ்மீர், காந்தாரம், சுவர்ணபூமி, இலங்கை

**ii) மொழியும் இலக்கியமும்**

- பிராகிருதம், மகதமொழி, சமஸ்கிருதம் போன்ற மொழிகள் வளர்ச்சியடைந்திருந்தன.
- சமஸ்கிருத, பிராகிருத மொழிகளில் இலக்கிய நூல்கள் எழுதப்பட்டன.

  உ+ம்: வேதநூல்கள்
- மௌரிய அரசவையில் மகத மொழி பயன்படுத்தப்பட்டது.

**iii) கலைநுட்பங்களும், கட்டடக்கலையும்**

- மௌரியர் காலத்தில் சிறந்து விளங்கிய கலைகளை அசோகனுக்கு முந்திய கலைகள், அசோகனுடைய கலைகள் என இரண்டாகப் பிரித்தறியலாம்.
- இன்றைக்கும் உலகப்புகழ் பெற்று விளங்குபவை பண்டைக் காலத்துக் கலைச்செல்வங்களுள் அசோகனது கட்டடங்களும் கற்றூண்களும் கல்வெட்டுகளுமாகும்.
- அசோகன் காலத்துக் கலைகளில் கருங்கற்களால் ஆக்கப்பட்டவை தவிர மற்றவை அழிந்துவிட்டன. அசோகனின் அரண்மனை, புத்த மடாலயங்கள் என்பன அழிந்தபோதிலும் "சாஞ்சிதூபி" மட்டும் எஞ்சியுள்ளது.
- அசோக மன்னனால் எழுதிவிக்கப்பட்ட கல்வெட்டுக்களைக் கொண்ட பல தூண்கள் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பாக நாற்பதடியிலிருந்து ஐம்பதடி உயரமான ஒரே கல்லினால் ஆன தூணின் உச்சியில் சிங்கம், யானை, எருது ஆகியவற்றின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.
- அசோக தூண்களுள் மிக அழகு வாய்ந்ததும், சிறப்பானதும் சாரநாத்திலுள்ள கற்றூண் ஆகும். இதன் உச்சியில் நான்கு சிங்கங்களின் உருவங்கள் காட்சியளிக்கும் அழகு இன்றும் உலகக் கலைஞர்களை வியப்படையச் செய்கிறது. மேலும் நடுவில் பொறிக்கப்பட்டுள்ள தர்மசக்கரம் அசோகனால் ஆணையிடப்பட்ட அறநெறியின் சின்னமாக விளங்குகின்றது.
- குகைகள் அமைக்கப்பட்டன. அதாவது கடினமான கற்களுக்கு மெருகிட்டு, அவைகளைப் பளிங்கு போல் காட்சியளிக்கச் செய்யும் கலைத்திறன் தான் அசோகனது குகைக் கல் வெட்டு களும் பாறைக் கல்வெட்டுக்களுமாகும்.

  உ+ம்:- காயாவுக்கு அண்மையிலுள்ள பராபர்க் குகைகள் கரடுமுரடான கற்களைக் குடைந்து ஆக்கப்பட்டிருந்தது. இங்கு காணப்படும் பளிங்கு போல் மெருகிடப்பட்ட பக்கச் சுவர்கள் அக்காலத்து கலைநுணுக்கங்களை வெளிக்காட்டுகின்றன.


சாஞ்சிதூபியின் நுழைவாயில்


அசோகனுடைய தூண்முடி.


அசோககாலத்து கற்றூண்


சாஞ்சி தூபி


சாஞ்சியின் கிழக்கு வாயில்

## 19. மௌரியப் பேரரசு வீழ்ச்சியடைதல்

i) அசோகனையடுத்து அவன் மகன் குணாளன் ஆட்சிப்பீடம் ஏறினான் என புராணக் கதைகள் கூறுகின்ற போதிலும் காஸ்மீர ஏடுகள் "ஜலௌகன்" என்பவனே அரச பதவிக்கு வந்தான் என கூறுகிறது. கடைசி மௌரிய மன்னனாக **பிருஹத்ரதன்** விளங்கினான்.

ii) எது எவ்வாறு இருந்தாலும் அசோகனுக்குப் பின்னர் பேரரசு படிப்படியாக வீழ்ச்சியுற்றது இதற்கான காரணங்கள் வருமாறு:

1. பேரரசு மிகப்பிரமாண்டமான விதத்தில் பரந்து விரிந்திருந்தமை.
2. அசோகனுக்கப் பின்பேரரசை ஆட்சி செய்யும் வல்லமை படைத்த மன்னர்கள் தோன்றாமை.
3. பலவீனமான ஆட்சியாளர் காலத்தில் பிரதேச ஆட்சியாளர்கள் சுதந்திரத்திற்காகப் போரிட்டமை.
4. அசோகனின் பௌத்தமதக் கொள்கையால் பிராமணியர்களின் எதிர்ப்பு.
5. அசோகனின் அகிம்சைக் கொள்கையால் படையதிகாரிகள் செயலிழந்தமை.

6. அரச சபையில் நிலவிய உட்பூசல்

7. குழப்பங்களை அடக்க ஆற்றல் படைத்த மன்னர்கள் இல்லாமை.

8. வடமேற்கில் ஏற்பட்ட அந்நியப் படையெடுப்புகள்.

**20. குஷாணர்களின் இராச்சியம் : முக்கிய அம்சங்கள்.**

i) மௌரியப் பேரரசு வீழ்ச்சியுற்ற பின்னர் இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்தில் கிரேக்கர்கள், சாகர்கள், பார்த்தியர்கள், குஷாணர்கள் போன்ற பிரிவினர் தமது ஆதிக்கத்தைச் செலுத்தினர்.

ii) இச்சிறுசிறு இராச்சியங்களில் "குஷாணர்களின் இராச்சியம்" முக்கியமானதாகும். இவ் இராட்சியத்தின் முக்கிய மன்னனாக "**கனிஷ்க மன்னன்**" திகழ்கின்றான்.

iii) இம்மன்னனின் ஆட்சி முக்கியத்துவம் வருமாறு.

- மகாயான புத்ததர்மத்தை ஆதரித்தமை.
- நான்காவது பௌத்தசங்க மாநாட்டை கூட்டியமை.
- முதன் முதலில் புத்தர்சிலைகளை செதுக்குவித்தமை.

iv) தென்இந்தியாவில் சேர, சோழ, பாண்டிய சுதந்திர அரசுகள் உருவாகியது.

**21. குப்தப்பேரரசு : முக்கிய அம்சங்கள்.**

i) மௌரியப் பேரரசின் வீழ்ச்சியின்பின் கங்கை, யமுனை சமவெளியை **(வடஇந்தியா)** மையமாகக் கொண்டு எழுச்சிபெற்ற பேரரசே குப்தப்பேரரசு ஆகும்.

ii) இதன் தலைநகரமாக பாடலிபுரம் விளங்கியது.

iii) கி.பி 4ம் நூற்றாண்டு முதல் கி.பி 6ம் நூற்றாண்டு வரை (320 - 530) நிலைத்திருந்த இப்பேரரசின் காலம் இந்திய வரலாற்றின் "**பொற் காலமாக**" கருதப்பட்டது.

**22. முதலாம் சந்திர குப்தனின் (கி.பி 320-335) ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) குப்தப் பேரரசிற்கு அடிகோலியவன் இவன் ஆவான்.

ii) கிழக்குத்தக்கணத்தில் காணப்பட்ட "கண" அல்லது "சங்க" என அழைக்கப்பட்ட இராச்சியத்தை பேரரசுடன் இணைத்துக் கொண்டான்.

iii) இதனால் மன்னர்களின்மன்னன் எனப்பொருள்படும் விதத்தில் "மகாராஜாதிராஜா" அல்லது "மாமன்னரில் தலைசிறந்தவன்" எனும் பட்டத்தை சூடிக்கொண்டான்.

iv) நேபாளப் பகுதி உட்பட பீகார் பிரதேசத்தில் ஆட்சி செலுத்திய "லிச்சவீ" அரச வம்சத்தைச் சேரந்த "குமாரதேவி" என்ற இளவரசியை திருமணம் செய்ததன் மூலம் பேரரசுக்கு பெரும்புகழையும் செல்வாக்கையும் தேடிக்கொண்டான்.

v) இவனது இறுதிக்காலத்தில் அழகாபாது (வத்சய), அயோத்தி

(கோசலை), தெற்கு பீகார் வரையிலும் இப்பேரரசு பரவிக் காணப்பட்டது.

vi) தான் இறக்க முன்னர் அரசவையைக்கூட்டி சமுத்திரகுப்தன் பேரரசைப் பெறுவதற்கு உரியவனாக நியமித்தான்

**23.சமுத்திரகுப்தனின் (கி.பி 335 - 380) ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) குப்த ஆட்சியாளர்களுள் மிகப்பலம் வாய்ந்தவன்

ii) இவனது காலத்தில் குப்த அரசு கிழக்கில் வங்காளம், மேற்கில் பஞ்சாப், வடக்கில் இமயமலை, தெற்கில் விந்திய மலை வரையிலும் பரவியிருந்தது.

iii) திக்விஜய கொள்கையை கடைப்பிடித்ததனால் இவன் **இந்தியாவின் நெப்போலியன்** அல்லது இராசசேடன் (அரசர்களை அழித்தோன்) எனவும் அழைக்கப்பட்டான்.

iv) இந்து சமயத்தவனான இவன் பிராமணர்களுக்கு பசுக்களைத் தானமாக வழங்கினான். அத்துடன் அஸ்வமேத யாகம் நிகழ்த்தினான்.

v) இவன் மகாணங்களிலிருந்த அவமுக்தாவின் நீலராஜன், வெங்கியின் ஹஸ்திவர்மன், காஞ்சியின் விஷ்ணுகோபன் போன்ற அரசர்களைத் தோற்கடித்தான்.

vi) அலகாபாத் என்ற இடத்தில் உள்ள அசோக தூண்ஒன்றில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு சமுத்திரகுப்தனின் சாதனைகளையும் அவனது மரபையும் வெளிப்படுத்தும் சிறப்பு வாய்ந்த சான்றாக உள்ளது (ஹரிசேனர் என்பவரால் எழுதப்பட்டது)

**24.இரண்டாம் சந்திரகுப்தனின் (கி.பி 380 - 414) ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) சமுத்திர குப்தனை தொடர்ந்து ஆட்சி செய்த மகனான 2ம் சந்திர குப்தன் காலத்திலும் பேரரசு மேலும் விரிவு பெற்ற நிலையிலிருந்தது.

ii) நாகர் வம்சத்து பெண்ணை (குபேர் நாகை) மணமுடித்து அரச உறவை வளர்த்தான். அத்துடன் தனது மகள் பிரபாவதி குப்தா என்பவளை வாகடக மன்னனுக்கு மணஞ்செய்து கொடுத்து உறவு கொண்டான்.

iii) குப்தப்பேரரசின் முக்கிய விரிவாக்கம் இவன் காலத்திலேயே நிகழ்ந்தது. குறிப்பாக மேற்கு இந்தியாவிலிருந்த சத்ரபர்களைத் தோற்கடித்தான். இதனால் வங்காளவிரிகுடாவிலிருந்து அரபிக் கடல் வரையிலான துறைமுகங்களை இவனால் கட்டுப்படுத்த முடிந்தது.

iv) இவனும் குப்தபேரரசின் மிகவும் பலம் பொருந்தியவனாக இருந்தமையால்"விக்கிரமாதித்தன்" (வெற்றிகொண்டபருதி/ விறல் ஒளிக்கதிரோன்/வீரசூரியன்) என்ற பெயரால் அழைக்கப்பட்டான்

v) இவனுடைய காலம் **குப்தர்களின் பொற்காலம்** எனக் கூறப்படுகின்றது.

vi) உஜ்ஜேனியை கலாச்சார தலைநகராக அமைத்தான்.

vii) இவன் காலத்திலேயே பாகியன் என்ற சீன யாத்திரீகர் இந்தியா வந்தான். இவர் பாடலிபுரத்தில் 3வருடம் வசித்தான் எனக் கூறப்படுகிறது.

viii) இக்கால பிரிவின் போது சிறந்த தோற்றப் பொலிவுடன் கூடிய தங்க நாணயங்கள் வெளியிடப்பட்டன.

**25. குமார குப்தனின் (கி.பி.414 - 455) ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) 2ம் சந்திரகுப்த மன்னனின் மகன் ஆவான்.

ii) இவனும் மன்னர்களின் மன்னன் என்ற பொருளைக் குறிக்கும் "மகேந்திர தாதித்தியன்" என்ற பட்டத்தை பயன்படுத்தினான்.

iii) இவனது காலத்தில் பெறுமதி மிக்க தங்க நாணயங்கள் வெளியிடப் பட்டமை அவனது காலத்து பொருளாதாரச் செழிப்பைக் வெளிப்படுத் துகிறது.

iv) இவன் காலத்தில் நாலந்தாவில் பெரும் கல்விக்கழகம் (பல்கலைக்கழகம்) நிறுவப்பட்டது.

v) இக்காலப்பிரிவின் போது குப்தபேரரசின் பலம் படிப்படியாக வீழ்ச்சி யடைந்து கொண்டிருந்தது.

குப்தர்காலத்து நாணயங்கள்



1. 1ஆம் சந்திரகுப்தனும் அவனரசி குமாரதேவியும்
2. யாழ் மீட்டும் சமுத்திரகுப்தன்
3. சிங்கத்தைக்கொல்லும் 2ஆம் சந்திரகுப்தன்
4. காண்டாமிருகத்தைக் கொல்லும் குமாரகுப்தன்

**26. ஸ்கந்தகுப்தனின் (கி.பி 455 - 467) ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) குமாரகுப்த மன்னனின் மகன் ஆவான்.

ii) வடமேற்கில் ஆக்கிரமிப்பு செய்த ஹீணர் என்ற கோத்திரத்தினரை வென்றதனால் "விக்கிரமாதித்தியன்" எனும் விருதை சூட்டிக் கொண்டான்.

iii) இவன் கி.பி 467ல் இறந்ததை தொடர்ந்து இப் பேரரசின்வீழ்ச்சி நெருங்கியது.

**27. குப்த பேரரசின் விழ்ச்சிக்கான காரணங்கள்.**

i) குப்தப்பேரரசு வீழ்ச்சியடைவதற்கு முக்கிய காரணம் அயல் நாட்டவரது படையெடுப்பாகும்.

உ+ம்: குமாரகுப்தன் காலத்தில் பாரசீகத்திலிருந்து புஷியமித்திரர் களும், ஸ்கந்தகுப்தன் காலத்தில் ஹீணர்களின் படையெடுப்புகளும் நிகழ்ந்தது.

ii) ஸ்கந்தகுப்தனின் பின் ஆட்சிக்கு வந்தோரின் திறமைக் குறைவு இதனால் ஹீணர் ஆதிக்கத்துக்குள் விரைவாக குப்தப்பேரரசு சென்றது.

iii) பிரதேச தலைவர்களின் எழுச்சி. குறிப்பாக மாளவத்தில் ஏற்பட்ட உள்நாட்டுப் புரட்சி ஹீணர்களுக்கு ஆதரவாக இருந்ததால் யசோதர்மன் மாளவத்தைக் கைப்பற்றியமை.

iv) அரச குடும்பத்தில் நிலவிய குழப்பநிலை. குப்தமன்னர்கள் பல பெண்களை மணந்ததால் அரசுரிமை தொடர்பில் பிணக்குகள் தோன்றியமை.

v) பௌத்த சமயக் கொள்கைகள். அதாவது குப்த மன்னர்கள் வைணவராக இருந்த போதிலும் இந்து மதம் இவர்கள் காலத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்திருந்தது. ஆயினும் பிற்கால மன்னர்கள் பௌத்த மதத்திற்கு ஆதரவு வழங்கியதால் குழப்ப நிலை தோன்றியது.

**குப்தர் காலம் பற்றிய பாகியனின் குறிப்புகள்**

- மக்கள் பெருமளவுக்கு சுகபோக வாழ்க்கை நடாத்தினர்
- தொழிலை அடிப்படையாகக் கொண்ட சமூக நிலை இருந்தமை
- தாழ்ந்த குலத்தவர் நகரத்திற்குள்ளேயும் சண்டாளர் (உயர்குலத்தவர்) நகரத்திற்கு வெளியேயும் வசித்தனர்.
- குப்தர்கள் இந்துக்களாக இருப்பினும் அனைத்து மதத்திற்கும் அனுசரணை வழங்கினர் . உதாரணம் : இலங்கை மன்னன் கீரத்தி ஸ்ரீ மேகவர்ணனின் வேண்டுகோளுக்கு இணங்க சமுத்திர குப்தன் இலங்கை யாத்திரிகர்களுக்கு தங்குமிடம் அமைத்தமை குறிப்பிடத்தக்கது

**28. குப்தர்கால நிர்வாகமுறை.**

i) அரசர்கள் விருதுப் பெயர்களைப் பயன்படுத்தியமை.
உ-ம்: மகா ராஜாதிராஜா, விக்கிரமாதித்தன்.

ii) அரச உதவிக்காக மந்திரிசபையும், மந்திரி, சேனாதிபதி போன்றோரும் இருந்தனர்.

iii) அமைச்சர்கள் நிர்வாகத்தின் உயர் அதிகாரிகளாக விளங்கினர்.

iv) மத்திய நிர்வாகம், பிரதேச நிர்வாகம் தொடர்பான அதிகாரிகளாக இராஜமத்தியர், ஆயுக்தர் ஆகியோர் இருந்தனர். ஆயுக்தர் நகரநிர்வாகத்திலும், திறைசேரி நிர்வாகத்திலும் ஈடுபட்டனர்.

v) பிரதேச நிர்வாக அலகு "புத்தி" என்ற பெயரால் அழைக்கப்பட்டது.

vi) நீதி தொடர்பான செயற்பாடுகளில் அரசன் பங்குபற்றினான் அமைச்சர் கள், நடுவர்கள் (நீதிபதிகள்), புரோகிதர்கள் என்போர் அரசனுக்கு உதவினர்.

**29. குப்பதர் கால பொருளாதார நிலை**

i) விவசாயமும் வர்த்தகமும் முக்கிய பங்கு வகித்ததால் நாட்டில் பொருளாதாரம் உயர்வடைந்தது.

ii) விவசாயம் முக்கிய தொழிலாக இருந்தது. குறிப்பாக நதிகளை அண்மித்த பகுதிகளில் கோதுமை, நெல், கரும்பு, பாக்கு, வெற்றிலை போன்றன பயிர் செய்யப்பட்டது.

iii) பரந்த அளவில் மேற்கொள்ளப்பட்ட கைத்தொழிலாகப் புடவைக் கைத்தொழில் விளங்கியது. அத்துடன் தச்சுத்தொழில், உலோகத் தொழில், மீன்பிடித்தொழில் போன்ற பல தொழில்கள் மேற்கொள்ளப் பட்டன.

iv) கைத்தொழில், வர்த்தகம், சிற்பம் என்பன இக்காலத்தில் ஒழுங்க மைக்கப்பட்ட நிலையில் இருந்தன.

v) யானைத்தந்தம், தங்கம், வெள்ளி, செம்பு, போன்றவற்றால் செய்யப்பட்ட ஆபரணங்களை மக்கள் அணிந்தனர்.

**30.குப்தர் கால சமூகநிலை**

- குப்தர் கால சமூக நிலைகளை பாகியனின் ஆவணங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

i) சமுதாயத்தில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு சாதிப் பிரிவினர் இருந்தனர். இதில் பிராமணர்கள் உயர்நிலையில் காணப்பட்டனர்.

ii) தத்தமது கோத்திரங்களுக்குள்ளே திருமணங்கள் நடைபெற்றன. திருமணம் மிக இளமைக்காலத்திலேயே நடைபெற்றது. அதாவது பெண்கள் வயதிற்கு வரும் முன்னரே திருமணம் செய்விக்கப்பட்டனர்.

iii) பெண்கள் சமூகத்தில் உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்பட்டனர். கணவனின் நன்னடத்தைக்கு வழிகாட்டியாக மனைவி விளங்கினாள். ஒரு பெண் இருவரை மணக்கும் பழக்கமும் வழக்கில் இருந்தது.

**குப்தயுகத்தின் கலாசார பணிகள்**

**31.குப்தர் யுகத்தின் சமயம், தத்துவம்: முக்கிய அம்சங்கள்**

i) குப்தர் காலத்தில் இந்து சமயம் மறுமலர்ச்சியடைந்தது. இதனால் இந்திய பண்பாடு மறுபிறவியெடுத்தது என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.

ii) குப்த மன்னர்களுள் பெரும்பாலானோர் பிராமணர்களென்றும், அவர்கள் வைணவ சமயத்தைப் பின்பற்றினார்களென்றும், ஆயினும் அமைச்சர்களுள் பலரும் பல்வேறு சமயங்களைப் பின்பற்றினார்கள்.

iii) விஷ்ணு வழிபாடும் சிவன் வழிபாடும் நிலவியது.

iv) புராணங்கள் முக்கிய சமய இலக்கியங்களாக விளங்கின.

v) விஷ்ணுவின் அவதாரக் கோட்பாடு பரவியது.

vi) இலக்குமி வழிபாடு சிறப்புற்று விளங்கியது.

vii) சக்திவழிபாடு, கணபதி வழிபாடு என்பன மக்களால் விரும்பி மேற் கொள்ளப்பட்டன.

viii) மகாயாண பௌத்தம் வளர்ச்சியடைந்தது.

ix. இக்காலத்தில் தக்கணத்தில் சமண சமயம் பரவியது.

**32. குப்தர் கால கல்வி நிலை பற்றிய குறிப்புகள்.**

i) பிராமணர், சத்திரியர், வைசிகர் ஆகிய முப்பிரிவினர்க்கு மட்டுமே கல்வியைப் பெறும் உரிமை இருந்தது.

ii) பிராமணர்களுக்கு மட்டுமே கற்கவும், கற்பிக்கவும் உரிமை இருந்தது.

iii) பிராமணர்களது கல்வி குருகுலக் கல்வியாக விளங்கியது.

iv) உலகில் புகழ்பெற்ற பௌத்த உயர் கல்வி நிலையங்களாக விளங்கிய கல்வி நிறுவனங்கள் இக் காலத்தில் வளர்ச்சி அடைந்தன.
உ+ம்: நாலந்த, வலஹி பல்கலைக்கழகங்கள்

v) பரந்த விடயப் பரப்புடன் கல்வியைப் பெறக் கூடியதாக இருந்தது.

vi) இலக்கணத்தைப் பிழையின்றிக் கற்றல் கல்வியில் அடிப்படையாக அமைந்தது.

vii) சாதாரண மக்களுக்கான கல்வி முறையும் இந்தியாவில் இருந்தது.

**33.குப்தர் கால இலக்கியம் பற்றிய குறிப்புகள்.**

i) குப்தப் பேரரசர் வீரத்தில் மட்டுமல்ல கலையிலும், அறிவிலும் சிறந்தோராய்த் திகழ்ந்தனர்.

ii) புராண நூல்களைப் பின்பற்றி எழுதப்பட்ட உபபுராண நூல்கள் 18 இருந்தன.

iii) "கவியரசன்" என்று போற்றப்பட்ட சமுத்திரகுப்தன் கவிஞர்களை ஆதரித்தான். அதேபோல் 2ஆம் சந்திரகுப்தனின் அரசவையில் "நவமணிகள்" (தனவந்தரி, சங்கு, வேதலம்கத்த, வரகமிகிர, காளிதாச, அமரசிங்க, கதகர்பர, கஷங்க, வரருட்சி) என அழைக்கப்பட்ட ஒன்பது புலவர்கள் கூடியிருந்தனர் எனக்கூறப்படுகிறது.

iv) தரும சூத்திரம், அரத்தசாஸ்திரம், மகாபாரதம், இராமாயணம் போன்ற நூல்கள் இன்று காணப்படும் வடிவில் எழுதப்பட்டன.

v) குப்தர் கால புலவர்களில் 5ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த "காளிதாசன்" மிகச்சிறந்த கவிஞராகத் திகழ்கிறான். இவனால் இயற்றப்பட்ட வடமொழி (சமஸ்கிருத மொழி) நூல்களில் மேகதூதம் (புகழ்பெற்ற காவியம்), சாகுந்தலம் (உலகப்புகழ்பெற்ற நாடகம்), ரகுவம்சம், குமாரசம்பவம் என்பன பிரசித்தி பெற்றனவாகும்

vi) குப்தர்கால இலக்கிய வளர்ச்சி இலங்கையையும் பெருமளவு பாதித்தது. எடுத்துக்காட்டாக காளிதாசனின் மேகதூதத்தைப் பின்பற்றி எழுந்தவையே "சந்தேசய" என்ற சிங்கள தூது இலக்கியங்களாகும்

vii) காளிதாசனுக்கு நிகராக "பாரவி" என்ற கவிஞனும் குப்தர் கால இறுதியில் வாழ்ந்தான். இவன் இயற்றிய பெரும் காப்பியம் "கிராதாரஜுனீயம்" ஆகும்.

viii) நாடகம், வர்ணனைகள், தத்துவம், கணிதம், தர்க்கநூல்கள் என்பன எழுதப்பட்டன.

**33. குப்தர்காலத்தின் கலைகள் பற்றிய குறிப்புகள்.**

i) **சிற்பக் கலை**

- இந்தியாவில் விக்கிரம வழிபாடு உயர்வு பெற்றதன் காரணத்தால் பாரிய புத்தர் சிலைகள் நிர்மாணிக்கப்பட்டன. இவை உயிர்த்துடிப்பு, அமைதி, தூய்மை முதலியவற்றை வெளிப் படுத்தியது.
- மதுரா மரபு முறையான சிற்பங்கள் செதுக்கப்பட்டது.
  உ+ம்: சாரணாத் புத்தர்சிலை
- இந்துக் கடவுளரின் சிலைகள் செதுக்கப்பட்டது
  உ+ம்: சிவன், பார்வதி சிலைகள்
- குப்த சிற்பமுறை இலங்கைக்கு வந்த காலத்திலிருந்தே கற்பாறை களில் உருவங்களை செதுக்கும் முறை ஆரம்பமானது.
- அனுராதபுரத்திலுள்ள இசுருமுனிய விகாரையிலுள்ள "காதலர் சோடி" வாயிற்படிகளில் காணப்படும் "சந்திர வட்டக்கல்" தியான (சமாதி) புத்தர்சிலை, தொழுவில் புத்தர் சிலை யாவும் இலங்கையில் குப்தர்கால சிற்பக்கலையின் உன்னத நிலையை எடுத்துக் காட்டு கிறது.

ii) **சித்திரக்கலை**

- இந்தியாவின் சித்திரக்கலை குப்தர்கள் காலத்தில்தான் முழுமை பெற்றது.
- இக் காலத்தைச் சேர்ந்த அஜந்தா, எல்லோரா குகை ஓவியங்கள் பிரசித்தி பெற்றவை ஆகும்.
- இக் காலத்துக்குரிய வாத்சல்யரின் காமசூத்திரத்தில் காணப்படும் சித்திரங்கள் ஒன்றாகக் காட்டப்பட்டுள்ளது.
- இலங்கையில் காசியப்ப மன்னனின் கலையார்வத்தை வெளிப் படுத்தும் சிகிரியாக் குகை ஓவியங்கள், அஜந்தா குகை ஓவியங்களை ஒத்திருப்பது இரு ஓவியங்களும் சமகாலத்திற்குரியன என்பது புலனாகிறது.

iii) **கட்டிடக்கலை**

- சமயக் கட்டடங்கள் அமைத்தல் இக் காலத்தில் வளர்ச்சி அடைந்திருந்தது. குறிப்பாக விஷ்ணு, சிவன் கோயில்கள் அமைக்கப்பட்டது.
- செங்கல், கற்றூண்களைப் பயன்படுத்தி கட்டடங்கள் நிர் மாணிக்கப்பட்டன.
- பௌத்த சமயக் கட்டடங்களின் பிரதான அங்கங்களான ஆராமை,

விகாரை, சைத்தியங்கள் அமைத்தல் என்பன வளர்ச் சியுற்றிருந்தது.

உ+ம்: அஜந்தா, எல்லோரா போன்ற குகை விகாரைகள்

- அலங்கார செதுக்கல் வேலைகள் செய்யப்பட்டமை

  உ+ம்: அஜந்தா குகைகளுக்கு 150 மைல் தொலைவில் வடமேற்கே அமைந்துள்ள பாக் குகைக் கோயில்

- பௌத்தஸ்தூபி, ஆராமைத் தொகுதி என்பன இக்காலத்தில் வளர்ச்சியடைந்திருந்தன.

  உ+ம்: புத்தகாயா, நாலந்த போன்ற இடங்களிலுள்ள விகாரைகள்.



சாரணாத்
புத்தர் சிலை



மதுரா
புத்தர்சிலை



காந்தார புத்தர் சிலை



சமாதிநிலை புத்தர் (அநுராதபுரம்)

# 3 வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து பொலன்னறுவைக் கால இறுதிவரை இலங்கையின் வரலாறு

**1. வரலாற்றுக்கு முற்பட்ட யுகம் என்றால் என்ன?**

i) இலங்கையில் ஆவணப்படுத்தப்பட்ட வரலாறு காணப்படுவது கி.மு 6ஆம் நூற்றாண்டு அளவிலாகும். இருப்பினும் அதற்கு முன்பிருந்தே இலங்கையில் மக்கள் வாழ்ந்தார்கள் என்பது தொல்பொருள் சான்றுகளிலிருந்து அறிய முடிகிறது.

ii) ஆவணப்படுத்தப்பட்ட ஆதாரங்கள் இன்றி, தொல்பொருள் சான்றுகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டு கட்டியெழுப்பப் பட்ட வரலாற்றுக்குரிய காலமே வரலாற்றுக்கு முற்பட்ட காலம் ஆகும்.

iii) வேறுவிதமாகக் கூறின் இலங்கையில் ஆரியக் குடியேற்றங்கள் (விஜயனின் வருகை) ஏற்படுவதற்கு முந்திய காலப்பகுதி வரலா ற்றுக்கு முந்திய யுகம் ஆகும்.

iv) வரலாற்றுக்கு முற்பட்ட யுகத்தை மூன்றாகப் பிரிக்கலாம்.

- புராதன கற்காலம் - வேடுவர் யுகம்.
- மத்திய கற்காலம் - இடையர் யுகம்
- புதிய கற்காலம் - விவசாய யுகம்.

**2. இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட யுகம் பற்றிய ஆதாரங்கள் கிடைத்துள்ள இடங்கள்**

- வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துக்குரிய மக்கள் வாழ்ந்ததாக அடை யாளப்படுத்தப்பட்டுள்ள பல இடங்கள் காணப்படுகின்றன.

i) இரத்தினபுரிப் பிரதேசத்தின் வண்டல் மண் படைகளுக்கிடையில் காணப்படும் பளிங்குக்கல், செம்மஞ்சள் படிவுகளால் தயாரிக் கப்பட்ட கல்லாயுதங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ii) புலத்சிங்கள, பாகியன் கலகுகை, பட்ட தொம்பகுகை, . அலுலென குகை, பெல்லன்பதிபெல்லச, கித்துல்கல பெலிபெல்லஸ்ஸ ஆகிய இடங்களில் தொல்பொருட்கள் கிடைத்துள்ளன.

iii) வரலாற்றுக்கு முற்பட்ட கால **மனித எச்சங்கள்** பாகியன்கல, பட்டதொம்பக்குகை, பெல்லன்பதி பெல்லச ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

iv) வரலாற்றுக்கு முற்பட்ட கால **மனிதனுடைய எலும்புத் துண்டுகள்** நில்கல, பெலிகல்கே, இராவணன் எல்ல ஆகிய குகைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

**3. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மனிதனின் வாழ்க்கை முறை**

- வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் வாழ்க்கை முறையை உணவு, இருப்பிடம், வேலைகளுக்கு பயன்படுத்திய ஆயுதங்கள் என்பவற்றி னூடாக அறியலாம்.

**i) உணவு**

- பலாங்கொடை மனிதன் முள்ளம்பன்றி, அணில், குரங்கு ஆகிய சிறிய விலங்கினங்களை அதிகமாகவும் காட்டுப்பன்றி, மரை போன்ற பெரிய விலங்கினங்களை அரிதாகவும் உணவிற்காகப் பயன் படுத்தினான்.
- நீரிலும் மரத்திலும் உள்ள நத்தை வகைகள் உணவில் பிரதான இடத்தினை வகித்தன.
- காட்டுவாழை, கெக்குனுவிதை, ஆசனிப்பலாவிதை, வள்ளிக் கிழங்கு போன்ற தாவர உணவுகளைப் பயன்படுத்தினான்.
- உப்புப் பயன்படுத்தப்பட்டது. இதற்கு பெலியன் குகையிலிருந்து சான்று கிடைத்துள்ளது.

**ii) இருப்பிடம்**

- இருப்பிடங்கள் அளவில் சிறியதாகக் காணப்பட்டது. இதிலிருந்து ஒன்று அல்லது இரண்டு குடும்பங்கள் வீடுகளில் வசித்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.
- கித்துல்கல அகழ்வின் போது கண்டெடுக்கப்பட்ட அடுப்புகள் சிறிதாகக் காணப்படுகின்றமை.
- கித்துல்கல அகழ்வின்போது ஒரு கட்டிடத்தின் இடிபாடு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**iii) வேலைகளுக்குப் பயன்படுத்திய ஆயுதங்கள்**

- பலாங்கொடை மனிதனால் பயன்படுத்தப்பட்ட கேத்திர கணித முறையில் அமைந்த கல்லாயுதங்கள் அகழ்வில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.
- யாதேனும் கேத்திர கணித வடிவத்தை (முக்கோண, அரை வட்ட, அரியம்) பெறும் நோக்குடன் ஆயுதங்களின் ஓரங்கள் மெதுவாக சீவப்பட்ட கல்லாயுதங்கள் பயன்படுத்தப்பட்டன.
- கல்லாயுதங்களை ஆக்குவதற்கு திருவாணக்கல் என்ற ஒரு வகை மஞ்சள் நிறக்கல் பயன்படுத்தப்பட்டது.
- மத்திய கற்காலத்தில் பயன்படுத்தப்பட்ட கோடரி, அம்மி, உரல், உலக்கை போன்ற உபகரணங்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

**iv) சம்பிரதாயங்கள்**

- இறந்தவர்கள் தொடர்பாக பல்வேறு விதமான சடங்குகள் நிகழ்த்தி இறந்தவர்களின் உடலைப் புதைத்தனர்.
- கித்துள்கலகுகை, பட்டதொம்பகுகை, பாகியன்கலகுகை என்பவற்றில் இறந்தவர்களுக்கான மரணச்சடங்கு சம்பிரதாயங்கள் தொடர்பான தகவல்கள் கிடைத்துள்ளது.


பலாங்கொட மனிதனின்
மண்டையோடு


எலும்பாயுதங்கள்
பலாங்கொடை


கல்லாயுதங்கள்
பலாங்கொடை


பலாங்கொட மனிதனின்
மண்டையோடு


பதியகம்பொல கல்நிர்மானம்

பலாங்கொட மனிதனின் உடற்தோற்றம்

1. முன்நோக்கிச் சரிந்த நெற்றிப் பரப்பு
2. பரந்த பலமான கன்ன எலும்புகள்
3. பின்வளைவான தாடை.
4. தட்டையான மூக்கு
5. தேய்வுற்ற பெரிய பற்கள்.



**4. இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்டகால தகவல்கள் கிடைக்கும்இடங்கள்.**

1. ஆனையிறவு
2. பரந்தன்
3. இரணைமடு
4. வில்பத்து
5. பொம்பரிப்பு
6. பெலிலென-கித்துல்கல
7. குருவிட்ட
8. இரத்தினபுரி
9. பலாங்கொடை
10. இராவணன்அல்ல
11. அம்பலான் தொட்டை
12. திஸ்ஸமகாராமை
13. அம்பாந்தோட்ட
14. புந்தல
15. பொத்துவில்
16. குருகே குகை
17. இப்பன்கட்டுவ
18. அலுலென
19. பெல்லனபதிபலஸ்ஸ
20. பதியகம்பளை




**ஆரியக்குடியேற்றங்கள் அமைக்கப்படுதல்.**

**5. ஆரியர்கள் இலங்கைக்கு வருகை தந்த வழிகள்.**

- ஆரியர்கள் வட இந்தியாவிலிருந்து மூன்று வழிகளுடாக வந்தனர்.
    - i) இந்தியாவின் மேற்கு பிரதேசத்திலிருந்து மாதோட்டத்தைச் சுற்றியுள்ள பிரதேசங்களுக்கு வந்த குழுவினர்.
      உ-ம்: விஜயன் குழுவினர் தம்மன்னாவை அடைந்தனர்.
    - ii) இந்தியாவின் கிழக்கு பிரதேசத்திலிருந்து இலங்கையின் கிழக்கு துறைமுகங்களை நோக்கி வந்தமை.
      உ-ம் பத்தகச்சானா குழுவினர் கோகர்னவை அடைந்தனர்.
    - iii) வட இந்தியாவிலிருந்து இலங்கையின் வடக்கு கரையோரத்துக்கு வந்த குழுவினர்.
      உ+ம் சங்கமித்தை குழுவினர் ஜம்புகோளப்பட்டினத்தை வந்தடைந்தமை.

### 6. ஆரியரின் வருகை தொடர்பான மூலாதாரங்கள்

i) மகாவம்சம், தீபவம்சம் போன்ற கர்ணபரம்பரைக் கதைகள்

ii) பாகியன், ஹியுங்சாங் என்பவர்களது அறிக்கை

iii) வலாகஸ்ஸ என்ற ஜாதகக் கதைநூல்

### 7.விஜயனின் இலங்கை வருகை பற்றிய தகவல்கள்.

i) இந்தியாவின் வட கிழக்கில், வங்கதேசம் என்ற பிராந்திய ராச்சிய மன்னனின் மகளான சுப்பாதேவியை சிங்கம் கவர்ந்து சென்று மணம் முடித்ததன் விளைவாக சிங்கபாகு, சிங்கசீவிலி என்ற ஆண், பெண் குழந்தைகள் பிறந்தன.

ii) 16வயதில் சிங்கபாகு தனது சகோதரி, தாய் ஆகியோருடன் குகையை விட்டு வெளியேறி லால என்ற இடத்திற்கு சென்று அங்கு சிங்கபுர என்ற நகரத்தினை அமைத்தான்

iii) சிங்கபாகு சகோதரியான சிங்கசீவிலியை மணந்து விஜயன் (பாளி நூல்களின்படி சிங்ஹளன்), சுமித்தன் இரு பிள்ளைகளுடன் மொத்தமாக 16 இரட்டைப் பிள்ளைகளை இவரகள் பெற்றனர்

iv) விஜயன் மிகவும் முரட்டுத்தன்மை வாய்ந்தவனாக இருந்தமையால் சிங்கபாகு விஜயனையும், அவனது 700 தோழர்களையும் நாடு கடத்தினான்.

v) விஜயன் தனது தோழர்களுடன் கப்பலேறி தெற்கு நோக்கி பயணம் செய்து பம்பாய்க்கு அருகேயுள்ள சுபராக்க துறைமுகத்தை அடைந்தான். பின்னர் துர்நடத்தை காரணமாக அங்கிருந்து துரத்தப்படவே கப்பலேறி இலங்கையை வந்தடைந்தனர்

vi) இளவரசன் விஜயன் உள்ளிட்ட குழுவினர் கி.மு483ல் புத்த பெருமான் பரிநிர்வாணம் அடைந்த தினத்திலேயே (விசாக தினம்) மன்னாருக்கு அருகிலுள்ள தம்பபண்ணியில்(தம்மன்னாவ) தரையிறங்கினர்.

vii) அக்காலத்தில் இலங்கையில் இயக்கர், நாகர் எனப்பட்ட இரு சுதேச மக்கள் வாழ்ந்தனர் இதில் விஜயன் இயக்கர் குலத்து அரசியான குவேனியை மணஞ்செய்து இராச்சியத்தை கைப்பற்றினான்.

viii) விஜயன் மன்னனாக முடிசூட்டிக் கொள்ளும் பொருட்டு பாண்டிய நாட்டிலிருந்து சத்திரியகுல இளவரசியை (மதுரை இளவரசி) வரவழைத்தமையால் குவேனி தனது பிள்ளைகளான ஜீவகத்த, திஸாலா ஆகியோருடன் மலைநாட்டுக்கு சென்றாள். இவர்களையே வேடர் பரம்பரை என நம்பப்படுகிறது.

### 8. இலங்கையில் குடியேறிய ஆரிய குழுவினரும், அவரகள் வந்திறங்கிய இடங்களும்

i) *1வது குடியேற்றம்: -* விஜயனும் 700 தோழர்களும் - தம்மன்னாவ.

ii) *2வது குடியேற்றம்: -* பாண்டிநாட்டிலிருந்துவந்த சத்திரியகுல இளவரசி குழுவினர் - உருவெல

iii) *3வது குடியேற்றம்:* - பண்டுவாசுதேவனும் பரிவாரத்தினரும்
- உபதிஸ்ஸகம

iv) *4வது குடியேற்றம்:* - பத்தகச்சானா இளவரசியும் குழுவினரும்
- கோகன்ன

v) *5வது குடியேற்றம்:* - மகிந்ததேரர், சங்கமித்தை குழுவினர்
- ஜம்புகோளப்பட்டினம்



9. ஆரியர்கள் குடியிருப்புக்களை அமைத்த இடங்களும் ஆற்றுப்பள்ளத் தாக்குகளும்.

| ஆரியர்கள் | குடியிருப்பு | நதி |
|---|---|---|
| 1. இலங்கையின் வடமேற்குப் பகுதியில் அமைந்தவை | | |
| விஜயன் | தம்மன்னாபட்டினம் | மல்வத்து ஓயா |
| உபதிஸ்ஸ | உபதிஸ்ஸ கிராமம் | கணதர ஓயா |
| அனுராத | அனுராத கிராமம் | மல்வத்து ஓயா |
| விஜித | விஜித கிராமம் | மல்வத்து ஓயா |
| உருவெல | உருவெல கிராமம் | கலா ஓயா |
| 2. இலங்கையின் வட கிழக்குப் பகுதியில் அமைந்தவை | | |
| பத்தகச்சானா | கோகன்ன | மகாவலி கங்கை |
| விஜிதன் | விஜிதபுரம் | மகாவலி கங்கை |
| ரோகண்ண | ரோகண | மகாவலி கங்கை |
| தீக்காயு | தீகவாவி | கல்லோயா |
| 3. இலங்கையின் தென் கிழக்கு பகுதியில் அமைந்தவை | | |
| | கதிர்காமம்(கஜரகாமம்) | மாணிக்க கங்கை |
| | சந்தனகாம | மாணிக்க கங்கை |
| | மகாகமம் | கிரிந்தி ஓயா |
| 4. இலங்கையின் மேற்குப் பகுதியில் அமைந்தவை | | |
| | கல்யாணி | களனி கங்கை |

**10. ஆரியர்களின் அரசியல் முறை (தலைமைத்துவம்).**

i) அரசன் இராச்சியத்தின் தலைவனாக ஏற்றுக்கொள்ளப்பட்டமை.

ii) அரசனின் தலைமையின் கீழ் அனைத்து நடவடிக்கைகளும் இடம்பெற்றது.

iii) கிராம நிர்வாகம் கம்சபா(கிராமசபை) மூலம் மேற்கொள்ளப்பட்டன. முதியோருக்கு தலைமைத்துவம் வழங்கப்பட்டது.

iv) கமிக அல்லது காமினி என்ற பிரதானி கம்சபாவுக்கு பொறுப்பாக இருந்து கிராமத்தை நிர்வகித்து வந்தார்.

v) முதியவர்களின் பெரும்பாண்மையோரின் விருப்பத்தின்பேரில் தீர்மானம் மேற்கொள்ளப்பட்டது.

vi) தந்தை மகன் என்ற அடிப்படையில் தலைமைப் பொறுப்பு வழங்கப் பட்டது.

vii) கிராம நிர்வாக அலகின் பணிகள்.

- அரசனுக்காக வரி சேகரித்தல்.
- கிராமத்திலுள்ள சிறு பிரச்சினைகளுக்கு தீர்வுகாணல்.
- விவசாய நடவடிக்கையின் போது தலைமைத்துவத்தை ஏற்றுக் கொள்ளல்.
- சிறிய நீர்ப்பாசனத்தை ஏற்படுத்துதல், கொண்டு நடாத்துதல்.

**11.ஆரியர்களின் பொருளாதார நடவடிக்கைகள்.**

i) விவசாயமே பிரதான ஜீவனோபாயமாக இருந்து வந்தது.

ii) ஆரம்ப நிலையில் சிறிய நீர்ப்பாசன அடிப்படையில் நெற்செய்கை மேற்கொள்ளப்பட்டது.

iii) மிருக வளர்ப்பு, மேட்டு நிலப்பயிர்ச் செய்கை மேற்கொள்ளப்பட்டது.

iv) தேவைகள் மட்டுப்படுத்தப்பட்டதும் சுயதேவைப் பூர்த்தியை அடிப்படையாகக் கொண்டதுமான பொருளாதாரம் காணப்பட்டது.

v) அன்றாட வாழ்க்கைக்கான தேவைகள் கிராமிய மட்டத்தில் உற்பத்தி செய்யப்பட்டது.

vi) பண்டமாற்று முறைப் பொருளாதாரம் காணப்பட்டது.

vii) வேட்டையாடுதல் மற்றும் கைத்தொழில்கள் என்பனவும் வளர்ச்சி யடைந்தன.

viii) வர்த்தகம் பொருளாதாரத்தில் உயர் இடத்தைப் பெற்றிருந்தது.

ix) கடற்பயணங்கள் ஊடாக வெளிநாட்டு வியாபார நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வந்தது.

x) ஜம்புகோளப்பட்டினம், மகாதித்த ஆகியன முக்கிய வர்த்தக துறைமுகங்களாக விளங்கின

**12.ஆரியர்களின் சமூக மற்றும் கலாச்சார அம்சங்கள்.**

i) கிராமத்தில் ஒரு சுயதேவை பொருளாதாரம் நிலவியது.

ii) கிராம மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதில் காமினி(கிராமசபை தலைவன்) முக்கியபங்கு வகித்தான்.

iii) சாதி முறையை அடிப்படையாக கொண்ட சமூகமுறை நிலவியது.

iv) அரசன், மற்றும் பிராமணர்கள் உயர் குலத்தினராக இருந்தனர்.

v) வைசிகர்கள் போர்நடவடிக்கைகளிலும், விவசாயத்திலும் ஈடுபட்டு உழைப்பை வழங்கினர்.

vi) சூத்திரர்கள் சமூகத்தில் அடிமட்டத்தவராக கருதப்பட்டனர். இவர்களே குப்பைகளை அகற்றல், பிரேதங்களை புதைத்தல் போன்ற வேலைகளை செய்தனர்.

vii) இலங்கையில் பருத்தி உடையை அணியும் பழக்கம், நெருப்பின் உபயோகம், வீடுகட்டி வாழும் முறை என்பனவற்றை ஆரியரே புகுத்தினர்.

viii) ஆரியர்களது சமயம் தெளிவாக தெரியாத போதிலும் வடஇந்தியாவில் பின்பற்றிய இந்து மதத்தையே இங்கும் தழுவியிருப்பர் என நம்பப்படுகிறது.

### அனுராதபுர காலம்

### 13.அரசுரிமை ஸ்தாபித்தல் முக்கிய விடயங்கள்

i) வம்சக் கதைகள், கல்வெட்டுக்களின்படி அரச பதவி இலங்கையில் முக்கிய அரசியல் முறையாகக் காணப்பட்டுள்ளது.

ii) இலங்கையின் ஆரம்ப ஆரியக்குடியேற்றங்களின் ஆட்சியாளர் "காமினி" என்ற பெயரால் அழைக்கப்பட்டான். அத்துடன் "அரசன்" என்ற விருதுப்பெயரையும் ஆட்சியாளர்கள் பயன்படுத்தினர்.

iii) பௌத்த சமயத்தின் செல்வாக்குடன் மக்கள் சம்மதத்துடன் மக்களின் பாதுகாப்பிற்கும், நலன் பேணலுக்கும் உதவும் பதவியாக அரசன் என்ற பதவி சமூகத்தில் அங்கீகரிக்கப்பட்டிருந்தது.

iv) தேவநம்பியதீசன் காலத்தில் இந்தியாவில் காணப்பட்ட முடி சூட்டு முறை இலங்கையில் பின்பற்றப்பட்டது. இதன்பின் முதன்மை அரசன் மகாராஜா எனவும் பிரதேச ஆட்சியாளர்கள் அரசன் எனவும் அழைக்கப்பட்டனர்.

v) மகிந்தரின் வருகையின் பின்னர் அரசன் கட்டாயமாக பௌத்த மதத்தைச் சேர்ந்தவனாக இருந்து வந்தான்.

### 14.பண்டுகாபயனின் வாழ்க்கை வரலாற்றின் சுருக்கம்.

i) பண்டுவாசுதேவன், பத்தகச்சனாவுக்கு பிறந்த "உன்மாதசித்திரா" தீககாமினி என்பவனுடன் கொண்டிருந்த தொடர்பின் விளைவாக பண்டுகாபயன் பிறந்தான்.

ii) இயற்பெயர் - பண்டுஅபய
பாளி நூல்களின்படி - பகுண்ட
பரம்பரை - மௌரியப் பரம்பரை.

iii) பண்டுகாபயனின் வாழ்க்கை வரலாறு இந்தியாவின் வீரபுருஷனான "கிஷ்ணனின்" வாழ்க்கை வரலாற்றை ஒத்ததாகவே இருக்கின்றது.

iv) மாமன்மாரிடமிருந்து காப்பாற்றும் நோக்கில் மிகுந்தலைக்கு அண்மையுள்ள துவாரமண்டலம் என்ற கிராமத்தில் சிறு பராயத்தில் ஒளிந்து வளர்ந்தான்.

v) அநுராதபுரத்துக்கு தெற்கே இருந்த பண்டுலகாமத்தில் வசித்து வந்த "பண்டுலன்" என்ற பிராமணனிடமிருந்து வில்வித்தைகள் கற்றுக் கொண்டான்.

vi) கிரிகந்தையை ஆண்ட மாமன் மகளாகிய சுவர்ணபாலியை திருமணம் செய்து கொண்டான்.

vii) மாமன்மாருடைய படையை வெற்றிகொண்டு அநுராதபுரத்தை தனது ஆட்சியின் நிலையமாக்கினான்.

**15.பண்டுகாபய மன்னனின் (கி.மு 377-307) சாதனைகள்.**

i) அனுராதபுரத்தை தலைநகராக தெரிவுசெய்தமை.

ii) வடமேற்கு, கிழக்கு பிரதேசங்களில் வாழ்ந்துவந்த ஆரியக் குழுக்களை ஒரு நிர்வாகத்தின்கீழ் கொண்டுவந்தமை.

iii) நகர நிர்வாக நடவடிக்கைகளுக்கென "நகரகுத்திக" என்ற அலுவலரை நியமித்தான்.
உ-ம்: அபயன் என்ற மாமனாரை "நகரகுத்திக" என்ற நகர காவலனாக நியமித்தான்.

iv) சண்டாளர் என்ற குலத்தை சேர்ந்தோரை நகர சுத்தியாளராக நியமித்து நகர துப்புரவுக்கு ஒழுங்குகள் செய்தான்.

v) பொருத்தமான இடங்களில் தேவாலயங்கள், ஆராமைகள் போன்றவற்றை நியமித்தான்.

vi) கிராம எல்லைகளைக் குறித்துக் காட்டுவதன் மூலம் இராச்சியத்தின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தியமை.

vii) நகரத்திற்கும் விவசாயத்திற்கும் தேவையான நீர் விநியோகம் சம்பந்தமாக சிறந்த ஒழுங்கு முறையைக் கையாண்டான்.
உ-ம்: வரலாற்றில் முதலாவது குளமாகக் கருதப்படும் அபயவாவியை நிர்மானித்தமை.

**16.மூத்தசிவன் (மூடசிவன்)**

i) பண்டுகாபயனின் ஆட்சியின்பின் மகனான மூடசிவன் ஆட்சிக்கு வந்தான்.

ii) இவனுடைய ஆட்சியிலேயே அனுராதபுரத்தில் "மஹாமேகவனம்" அமைக்கப்பட்டது.

iii) கி.மு 247ல் இறக்க இவனது இரண்டாவது மகனான தேவநம்பியதீஸன் ஆட்சிக்கு வந்தான்.

iv) இவனுக்கு அபயன், தீசன், உத்தியன், மகாசிவன், சூரதீசன், அசேலன், மகாநாகன், மத்தாபயன், கிரா எனும் குமாரர்கள் இருந்தனர்.

**17.தேவநம்பியதீஸன் (கி.மு 274 - 247)**

i) இயற்பெயர் - தீஸன்
பௌத்த மரபின்படி முடிசூடல் - வெசாக் தினம்
இரண்டாவது முடிசூடலின்பின் - தேவநம்பியதீஸன்
பௌத்த மதத்தைத் தழுவுதல் - பொசன் தினம்.

ii) தேவநம்பியதீஸனின் ஆட்சிக்காலம் முக்கியத்துவம் பெறக்காரணம்.
- இலங்கைக்கு பௌத்த சமயம் மகிந்ததேரரால் கொண்டு வரப்பட்டது.
- நாட்டில் சமய, கலாச்சார மறுமலர்ச்சி தோன்றியமை.

**18.தேவநம்பியதீஸனும் அசோகனும் கொல்டிருந்த உறவு.**

i) தேவநம்பிய மன்னனின் சமகால இந்தியரசனாக அசோகச் சக்கரவர்த்தி விளங்கினான்.

ii) இந்த இருவருக்குமிடையில் நீண்டகால நல்லுறவு இருந்தபோதும் நேருக்குநேர் சந்தித்துக் கொள்ளவில்லை.

iii) அசோகனுக்கு வெகுமதிகளுடன் அரிட்ட என்பவன் தலைமையில் தூதுக்குழு ஒன்றை இந்தியாவிற்கு அனுப்பினான்.

iv) இத்தூதுக்குழு மீண்டும் இலங்கை திரும்பிய போது அசோகன் முடிசூட்டு விழாவிற்கு தேவையான பெறுமதிமிக்க பொருட்களை யும் "தேவநம்பிய" என்ற பட்டப் பெயரையும் வழங்கினான். அத்துடன் தன்னைப்போன்று தீசனும் பௌத்த சமயத்தை தழுவுவதை தான் பெரிதும் விரும்புவதாக ஓர் ஆசிச்செய்தியையும் அனுப்பினான்.

v) திஸ்ஸ மன்னன் இரண்டாவது தடவையாக முடிசூட்டு விழாவை நடாத்தி அசோகனால் வழங்கப்பட்ட "தேவநம்பிய"(கடவுள்களின் அன்பன்) என்ற பட்டப் பெயரைச் சூட்டி **தேவநம்பியதிஸ்ஸன்** என அழைத்துக் கொண்டான்.

vi) அசோகச்சக்கரவர்த்தியின் வழிகாட்டலுடன் இந்தியப் பாரம்பரியத்திற்கேற்ப (மௌரிய மரபின்படி) முடிசூடிய முதலா வது இலங்கை மன்னன் என்ற சிறப்பைப் பெறுகின்றான்.

**19.மகிந்ததேரரின் வருகையும் தேவநம்பியதிஸ்ஸ மன்னன் பௌத்த மதம் தழுவுதலும்**

i) அசோகனின் மகன் மகிந்த தேரர் தனது பரிவாரத்தினருடன் கி.மு 247ல் இந்தியாவில் அவந்தி தேசத்து வேதியகிரி நகரிலிருந்து புறப்பட்டு பொசன்(ஆனி) மாதத்தில் பௌர்ணமி தினத்தன்று ஜம்புகோளப் பட்டினம் ஊடாக மிகிந்தலையை(மிஸ்ஸக்க மலை) அடைந்தான்.

ii) வேட்டையாடிக் கொண்டிருந்த தேவநம்பியதிஸ்ஸன் மகிந்த தேரரைச் சந்தித்துக் கொண்டான். இது இலங்கை வரலாற்றில் முக்கியமான சந்திப்பாக அமைந்தது.

iii) அரசனுக்கும் அங்கிருந்தவர்களுக்கும் "சுள்ளபக்தி பதோபம்" என்ற சுத்திரத்தைப் போதித்தார். தர்மபோதனையின் முடிவில் மன்னனும் ஏனையவர்களும் பௌத்த மதத்தை தழுவிக்கொண்டனர்.

iv) இலங்கை வரலாற்றிலே முதலாவது பௌத்த மன்னனாக தேவநம்பிய திஸ்ஸன் விளங்குகின்றான்.

v) இதன் பின்பே அரசாட்சி தொடர்பாக பௌத்த குருமார்களின் வழிகாட்டுதலைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றநிலை உருவாகியது.

தூபராம கட்டப்பட்டமை




- சுமன சாமனேரர் தலைமையில் இந்தியா (அசோகனிடம்) சென்று எடுத்து வரப்பட்ட புத்தருடைய வலது விலாஎலும்பை வைத்து அனுராதபுரத்திலுள்ள தூபராம தூபி இலங்கை வரலாற்றின் முதலாவது தூபியாக தேவநம்பியதிஸ்ஸனால் கட்டப்பட்டது.
- மௌரியக் கலை மரபைப் பேணி தானியக் குவியல்வடிவில் நிறுவப்பட்ட போது தற்போது மணிவடிவத்திலேயே காணப்பட்டது.

**20. சங்கமித்தை பிக்குணி இலங்கைக்கு வருகை.**



i) மகாமேகவனம் பௌத்த சங்கத்துக்கு அர்ப்பணிக்கப்பட்ட தினம் தேவநம்பியதீஸனின் சகோதரன் மகாநாக இளவரசனின் இராணி அனுலாதேவி பௌத்தபிக்குனியாக துறவறம் பூண மகிந்தனுக்கு விருப்பம் தெரிவித்தார்.

ii) இலங்கையில் பிக்குனிகள் கிளையொன்றை தாபித் துக்கொள்ளும் நோக்கில் சங்கமித்தை குழு இலங்கைக்கு வந்தது.

iii) சங்கமித்தை தன்னுடன் புத்தகாயாவிலிருந்து எடுத்து வந்த ஸ்ரீமகா போதி (வெள்ளரசுக் கிளை) விருட்சத்தின் கிளை மகாமேகவனத்தில் நாட்டப்பட்டது.

**குறிப்பு: பௌத்த சமயம் தொடர்பான முதன்மையான விடயங்கள்.**
- முதல் பிக்கு - அரிட்டன்
- முதல் பிக்குனி - அனுலாதேவி
- முதல் பௌத்தமத மன்னன் - தேவநம்பியதீஸன்
- முதல் தூபி - தூபராம
- முதல் ஆராமை - திக்சிய பிரிவெனாமனை.

**21. இலங்கையில் பௌத்த மதம் பரவியதால் ஏற்பட்ட அனுகூலங்கள்.**

i) மக்கள் மத்தியில் அமைதி, அரசியல், பண்பாடு, ஒற்றுமை என்பன ஏற்பட்டன

ii) பௌத்த மதத்தினதும், விவசாயப் பின்னணியிலான கலாச்சாரம் தோன்றி வாழ்க்கை முறையில் மாற்றம் ஏற்பட்டது.

iii) மக்களிடையே சீரிய மனிதப் பண்புகள் தோன்றின. அகிம்சைக் கொள்கையை மதிக்கின்ற நற்பண்புடைய சமுதாயம் தோன்றியது

iv) உயரிய இலக்கியங்கள் தோன்றின. குறிப்பாக சமய இலக்கியங்கள் உருவாகின

v) கட்டிடக்கலை, சிற்பக்கலை, செதுக்கற்கலை, ஓவியம் என்பன வளர்ந்தன.

**22."இலங்கையில் கலாசார மறுமலர்ச்சி ஏற்படுத்துவதில் தேவநம்பிய தீஸனின் காலம் முக்கியத்துவம் வாய்ந்தது" எனக் கூறப்படுவதற்கான காரணங்கள்.**

i) மகிந்ததேரரின் வருகையோடு பௌத்த சமயம் கொண்டுவரப் பட்டமை.

ii) பிக்குகள், பிக்குனிகளின் சாசனத்தைக் கட்டியெழுப்பியமை.

iii) அட்டசீலக் குழுவுடன் சங்கமித்தையின் வருகை, வெள்ளரசுக் கிளை கொண்டுவரப்பட்டமை.

iv) மௌரியக் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியம் என்பன வளர்ந்தமை.

v) பௌத்த இலக்கியங்கள் உருவாகியமை.

**23.சோழமன்னன் எல்லாளனின் தார்மீக ஆட்சியின் சிறப்பியல்புகள்**

i) தேவநம்பிய மன்னனின் இளைய சகோதரன் அசேலன் அனுராதபுரத்தை ஆட்சி செய்த போது கி.மு 205ல் சோழ இளவரசன் எல்லாளன் படையெடுத்து வந்து மன்னனை கொலை செய்து அரசாட்சியை கைப்பற்றி 44 ஆண்டுகள் நீதி தவறாது ஆட்சி செய்தான்

ii) எல்லாளன் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்ட நீதியான ஆட்சியை நடத்தினான் என மகாவம்சம், தீபவம்சம் போன்ற நூல்கள் கூறுகின்றன

iii) எதிரியையும் நண்பனையும் சமமாக மதித்து நீதி வழங்கினான்

iv) பௌத்த மதத்தை வளர்ப்பதற்கும் இவன் ஆதரவு வழங்கியதை சிங்கள காலவேடுகள் உறுதிசெய்கின்றன

v) அனுராதபுரத்திற்கு வடக்கே பேலிவாவி என்ற குளத்தை அமைத்தான் என மகாவம்சம் கூறுகின்றது தற்போது வவுனிக்குளம் என் அறிஞர்கள் அடையாளம் கண்டுள்ளனர்

vi) துட்டகைமுனுவுடன் நேரடியாக தனது வயது முதிர்ந்த வேளையிலும் போரிட்டு வீரமரணம் எய்தினான்.

**24.துட்டகைமுனு மன்னன்(கி.மு 161-137)**

i) உருகுனைப் பிரதேசத்தின் மகாகமவை ஆட்சி செய்த காவன்திஸ்ஸ மன்னனுக்கும் விகாரமகாதேவிக்கும் கைமுனு (காமினி - அபய), திஸ்ஸன் எனும் இரு புதல்வர்கள் இருந்தனர்.

ii) காவன் தீஸனுக்கு சமகால மன்னனாக எல்லாளன் அனுராதபுரத்தில் ஆட்சி செய்து வந்தான்.

iii) எல்லாளன் மக்கள் அபிமானத்தை பெற்று விளங்கியதால் அனுராதபுரத்தை அவனிடம் இருந்து மீட்பது கடினம் என்பதனை புரிந்து கொண்ட காவந்தீசன் தூரநோக்குடன் இராணுவ பலத்தையும் இணைத்து உருகுனையை வலுப்படுத்தினான் இதனாலேயே துட்டகைமுனுவால் பின்னர் எல்லாளனைத் தோற்கடிக்க முடிந்தது.

iv) துட்டகைமுனு சிறுபராயம் முதல் இராசரட்டையயை எல்லாளனிடம் இருந்து மீட்க வேண்டும் என்ற எண்ணம் இருந்த வந்த போதும் தந்தை எல்லாளனின் வலுவான ஆட்சிக்கு அஞ்சி மறுத்ததோடு சண்டை செய்வதில்லை எனவும் சத்தியம் தருமாறு மகனிடம் கேட்டபோதிலும் வெற்றியளிக்கவில்லை.

v) துட்டகைமுனு இளம்பருவத்தை அடைந்தபோதிலும் எல்லாளனுக்கு எதிராக போர்தொடுக்க தகப்பன் மறுப்பு தெரிவிக்கவே ஆத்திரம் அடைந்த துட்டகைமுனு பெண்களின் ஆடை, ஆபரணங்களை அனுப்பிவிட்டு கொத்மலைக்கு தலைமறைவாகினான்.

vi) தந்தையை இவ்வாறு அவமரியாதை செய்ததனாலேயே துட்ட (துஷ்டன்) என்ற சொல்லோடு துட்டகைமுனு (துட்டகாமினி) என அழைக்கப் பட்டான்

vii) காவந்தீசன் இறக்க திகாமடுல்லவில் (தீகவாவி) இருந்து வந்த சகோதரன் தாயையும், கடேர்ல் எனப்பட்ட பட்டத்து யானையையும் கொண்டு செல்லவே அவனுடன் போரிட்ட துட்டகைமுனு வெற்றியீட்டி உருகுனையை ஆட்சி செய்தான்.

viii) துட்டகைமுனு மாகமையிலிருந்து பெரும்படையுடன் புறப்பட்டு மகாவலிக்கு அண்மையிலிருந்த "விஜிதபுர" கோட்டையை கைப்பற்றிக்கொண்டு அனுராதபுரத்தை எல்லாளனிடமிருந்து வெற்றி கொண்டான்.

ix) போரில் இறந்த எல்லாளனுக்கு அவனது நீதி தவறாத ஆட்சியை போற்றும் விதத்தில் நினைவுத்தூபியை அமைத்து அதனைக் கடந்து செல்பவர்கள் மரியாதை செலுத்தவேண்டும் எனவும் துட்டகைமுனு கட்டளை யிட்டான் என மகாவம்சம் கூறகின்றது.

x) விஜிதபுர தோல்வியை அடுத்து எல்லாளனுக்கு உதவும் பொருட்டு இந்தியாவிலிருந்து வந்த பல்லுகனது படையையும் துட்டகைமுனு தோற்கடித்தான்.

---

**துட்டகைமுனுவின் பத்துத் தளபதிகள்**

- காவந்தீசனால் தனது படையில் சேர்த்துக் கொள்ளப்பட்ட பலம் வாய்ந்த பத்து இளைஞர்களே பத்துத் தளபதிகளாவர்.

1. நந்தி மித்ர
2. சுரநிமல
3. மகாசோன
4. கோதயிம்பர
5. தேரபுத்தாபய
6. பரண
7. வேலுசுமண
8. கஞ்சதேவ
9. புஸ்ஸதேவ
10. லபியவசப

## 25.துட்டகைமுனு புத்தசாசனத்துக்கு ஆற்றிய சேவைகள்

i) விகாரைகள் பலவற்றை கட்டுவித்தான்.
உ-ம் மிரிச வட்டிய தாதுகோபம், ருவான் வெலிசய

ii) பௌத்த பிக்குகளுக்கென "லோவமகாபாய" என்ற மடத்தை அமைத்தான். ஒன்பது மாடிகளைக்கொண்ட இக்கட்டடத்தின் கூரை செப்புலோகத்தகட்டினால் அமைக்கப்பட்டிருந்தது.

- துட்டகைமுனுவின் பணிகளைப் பலவைகைகளில் அவனது தம்பி சத்தாதீஸனே நிறைவுசெய்தான்.

| |
|---|
| குறிப்பு: சத்தாதீஸனுக்கு தூலத்தனன், லஞ்சதீஸன், கல்லாடநாகன், வட்டகாமினி ஆகிய புதல்வர்கள் இருந்தனர். |

## 26.வட்டகாமினி (வலகம்பாகு)

i) சத்தாதீஸனின் இளையமகனாவான்.

ii) சகோதரன் கல்லாடநாகனிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிய மகாரத்தகன் என்ற படைத்தளபதியிடமிருந்து ஆட்சியைப் பெற்றுக்கொண்டான்.

iii) இவனது ஆட்சிக்காலம் அரசியல், சமயம் ஆகிய துறைகளில் முக்கியத்துவம் பெற்றிருந்தது.

iv) இவனது ஆட்சியின் தொடக்கத்தில் தென்னிந்தியப் படையெடுப்பும் (ஏழு தமிழர்களின் படையெடுப்பு), உருகுணையைச் சேர்ந்த தீச என்ற பிராமணர் ஏற்படுத்திய கலகத்தையும் வெற்றிகரமாக எதிர்கொண்டு இழந்த அதிகாரத்தை உறுதிப்படுத்தினான்.

v) ஏழு தமிழர்களின் படையினருடன் ஏற்பட்ட தோல்வியை அடுத்து தனது குடும்பத்தினருடன் ஓர் ரதத்தில் தப்பியோடியபோது "பெரிய கருஞ்சிங்கம் தப்பியோடுகின்றதே" என கிரி என்ற சமணத்துறவி பரிகாசித்தான்.

vi) இவன் பாதுகாப்பிற்காக மலையரட்டைக்குச் சென்று ஒளிந்தான். அப்போது **கும்பிகல மகாதிஸ்ஸ** என்ற பிக்கு உதவி செய்தார்.

vii) பௌத்தபிக்குகளினதும் மலையக தேசத்தின் "தனசீவ" என்ற பிரதேச ஆட்சியாளரின் உதவியுடன் படைகளைத் திரட்டி கி.மு. 89இல் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றினான்.

viii) இவன் அரசை மீண்டும் கைப்பற்றிய பின் கிரியின் சமணப் பள்ளியை தரைமட்டமாக்கி அவ்விடத்திலே ஒரு விகாரையை கட்டினான். அதுவே அபயகிரி விகாரை ஆகும். இவ்விகாரையை குப்பிக்கல மகாதிஸ்ஸ பிக்குவிற்கு அர்ப்பணித்தான்.

ix) அபயகிரி விகாரையை இவ்வாறு அர்ப்பணம் செய்தமை பௌத்த சமயத்தில் முதலாவது பிரிவினைக்கு (நிகாயபேதம்) அடிப்படையாகியது.

x) இவன் காலத்தில் ஏற்பட்ட சமயக் குழப்பத்தை அடுத்து திரிபிடகம் என்ற பௌத்தக் கோட்பாடு **மாத்தளையிலுள்ள அலு விகாரையில்** கூடிய பிக்குகளால் நூல் வடிவில் எழுதப்பட்டது.

**27.வசபன்**

i) இலம்பகரண வம்சத்தின் முதல் மன்னர் ஆவான்

ii) இவனால் தொடக்கப்பட்ட இவ் அரச வம்சம் ஏறத்தாழ 370 வருடங்கள் அநுராதபுரத்தை ஆண்டன.

iii) வசப மன்னனின் ஆட்சி இலங்கை முழுவதிலும் பரவியிருந்தமைக்குப் பல சான்றுகள் உள்ளன.

உ+ம்: வடக்கில் யாழ்ப்பாணத்திலும், தெற்கில் சித்துள் பவ்வ, திஸ்ஸமகாராமவிலும், கிழக்கில் மட்டக்களப்பிலும், மேற்கில் குருணாகலிலும் கிடைத்துள்ளது.

iv) நீர்ப்பாசன விருத்திக்கும், புத்தசாசன வளர்ச்சிக்கும் பெரும் பணி யாற்றினான்.

**28.மகாசேனன்**

i) கோத்தாபய மன்னனின் இளைய புதல்வன் ஆவான்

ii) தென்னிந்தியாவிலிருந்து வந்த சங்கமித்திர என்ற வைத்துல்ய வாத (மகாயாணம்) பிக்கு கலைகளைக் கற்பித்தார்.

iii) இப் பிக்குவின் ஆதிக்கத்தினால் மகாயான பௌத்தத்தைப் பரப்பு வதற்கு இவன் அனுசரணை வழங்கினான்.

iv) மகாவிகாரைக்கு எதிராக அரசனை சங்கமித்திர பிக்கு தூண்டி விட்டதால் மகாவிகாரை பிக்குகளுக்குத் தானம் வழங்குவதற்கு மன்னன் தடைவிதித்தான்.

v) இதனால் மகாவிகாரை பிக்குகள் உருகுணை, மலய பிரதேசங்களுக்குச் சென்றனர்.

vi) அனுராதபுர மக்களுக்கு வழிகாட்டுவதற்கு எவரும் இருக்கவில்லை. இதனால் அரசுக்கு எதிராக மக்கள் கிளர்ச்சி செய்தனர்.

vii) கிளர்ச்சிக்கு தலைமைவகித்த மேகவர்ணாபய என்ற அமைச்சருக்கும் மன்னனுக்குமிடையே ஏற்பட்ட கலந்துரையாடலின் விளைவாக கிளர்ச்சி முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது. அத்துடன் மன்னனால் மகாவிகாரையையும் புனருத்தாரணம் செய்யப்பட்டது.

viii) மகாவிகாரை எல்லையினுள் ஜேத்தவனராம என்ற விகாரையை அமைத்து சாகலிக என்ற சமயப் பிரிவினருக்கு மகாசேனன் கையளித்தான்.

ix) ஜேத்தவனராமை, மின்னேரியாவிகாரை, கோகண்ண விகாரை, கலன்தகவிகாரை என்பன இவனால் கட்டப்பட்ட விகாரைகள் ஆகும்.

**29. தாதுசேனன்**

i) மித்தசேனனிடம் ஆட்சியைக் கைப்பற்றிய திராவிட ஆட்சியாளரைத் தோற்கடித்து கி.பி. 459இல் அரசனானான்.

ii) இவன் மௌரிய அரச வம்சத்தைச் சேர்ந்தவன், இளமைக் காலத்தில் எதிரிகளிடமிருந்து பாதுகாப்பை பெறுவதற்காக துறவியாக இருந்தான்.

iii) கலாவாவி, யோதஎல கால்வாய் என்பவற்றை அமைத்து நீர்ப்பாசன வளர்ச்சிக்குப் பெரும் சேவையாற்றினான்.

iv) இவனுக்கு முகலன், காசியப்பன் எனும் புதல்வர்கள் இருந்தனர்.

**30.காசியப்பன் ஆட்சியுரிமை பெற்ற விதம்**

i) தாதுசேனமன்னனின் இரண்டாவது மனைவியின் மகன் அவான்

ii) மிகார என்ற சேனாதிபதியின் ஆலோசனைப்படி செயற்பட்டான்.

iii) தாதுசேனன் தனக்குப் பின் ஆட்சியுரிமையைப் பட்டத்து இராணியின் மகன் முகலனுக்கு வழங்க முயன்றபோது காசியப்பன் தந்தையைக் கொலை செய்து முகலனை சிறைப்பிடித்து ஆட்சியைக் கைப்பற்றினான்.

**31.காசியப்பன் சிகிரியா கற்கோட்டையை அமைத்தமைக்கான காரணங்கள்**

i) அரசுரிமைக்கு உரித்தான முகலனுக்கு பயந்து.

ii) மன்னர்களுக்கு மக்கள் தெய்வாம்சத்தை வழங்கியமையால் தான் உயர்ந்தவன் என்பதனைக் காட்டுவதற்கு.

iii) தந்தையைக் கொலைசெய்ததால் மக்களின் எதிர்ப்பிற்குப் பயந்து.

**32.சிகிரியாவின் சிறப்பம்சங்கள்**

i) அநுராதபுரத்திலிருந்து தெற்கே 180 மீற்றர் உயரத்தில் சிகிரியாகுன்று உள்ளது. இது கி.பி 5ம் நூற்றண்டுக்குரியது.

ii) சிகிரியாக் குன்றின் உச்சியைச் சென்றடையும் பொருட்டு சிங்கத்தின் வாய் வடிவில் உருவாக்கப்பட்டிருந்த படிக்கட்டு ஊடாக பாதை அமைக்கப்பட்டிருந்தமையால் "சிங்ககிரி" எனப்பட்டது.

iii) சிகிரியா குன்றின் உச்சியில் மாளிகை, பொய்கை, ஏனைய கட்டிடங்கள் என்பவற்றின் இடிபாடுகளைக் காணமுடியும்.

iv) குன்றின் அடிவாரத்திலும் கட்டிடத்தொகுதி ஒன்றின் இடிபாடுகள் உள்ளன.

v) நீராடும் பொய்கைகள், நீர் விளையாட்டுக்களுக்கான பூங்காக்கள் என்பவற்றின் அடையாளங்களும் உள்ளன.

vi) அழகிய பெண் உருவங்கள் பெரும்பாலும் சோடிகளாக வரையப்பட்டுள்ளன. இவை இன்னும் பாதுகாப்பாக உள்ளமைக்கு வர்ணக் கலவையின் சிறந்த தரமே ஆகும்.

vii) இவ் ஓவியங்கள் சமகால அஜந்த குகை ஓவியங்களை பெரிதும் ஒத்துள்ளன.



சிகிரியா ஓவியம்

**33.நான்காம் மகிந்தன் பற்றிய குறிப்புக்கள்**

i) நான்காம் சேன மன்னனின் ஆட்சிக் காலத்தில் யுவராஜாவாக விளங்கினான்.

ii) இவனது ஆட்சியின் முக்கியத்துவங்கள் வருமாறு
- ஆட்சிக்கு வந்த போது ஏற்பட்ட கலகத்தினை அடக்கினான்
- பரந்தகன் என்ற சோழமன்னனின் ஆக்கிரமிப்பினை முறியடித்தான்.
- மூன்றாம் கிருஷ்ணன் என்ற இராஷ்டிர கூட அரசனின் ஆக்கிர மிப்பை முறியடித்தான்.

iii) அனுராதபுரக் காலத்தின் இறுதி அரைப்பகுதியில் ஆட்சிக்கு வந்த அரசர்களுள் சிரேஷ்ட ஆட்சியாளனாகக் கருதப்படுகின்றான்.

**34.சோழர் இலங்கை மீது கவனம் செலுத்தியமைக்கான காரணங்கள்.**

i) அநுராதபுரத்தின் பிற்பகுதியில் ஆட்சி செய்த சிங்கள மன்னர்கள் கடைப்பிடித்த வெளிநாட்டுக் கொள்கைகள்.

ii) இந்தியாவில் எழுச்சி பெற்ற சோழப் பேரரசுக்கு எதிரான இந்திய அரசர்களுடன் இலங்கை மன்னர்கள் தொடர்புகளைப் பேணி வந்தமை.
உ-ம்: 5ம் மகிந்தன் பாண்டியருக்கு உதவியமை.

iii) சோழப் பேரரசின் விஸ்தரிப்பு கொள்கை

iv) இலங்கையின் வர்த்தக நன்மைகளை பெறுவதற்காக.

v) இலங்கையின் செல்வச்சிறப்பினை அபகரிப்பதற்காக.

**35.5ஆம் மகிந்தனின் (கி.பி 982 - 993) காலத்தில் இடம்பெற்ற சோழப்படை யெடுப்புகள்.**

i) கி.பி 993ல் இராஜராஜசோழன் படையை அனுப்பி வடபகுதியை (இராசரட்டை) கைப்பற்றி தலைநகரை புலந்தி நகரம் என்று அழைக்கப்படும் பொலநறுவைக்கு மாற்றினான். தனது பட்டப்

பெயரான "ஜனநாதமங்களம்" என்பதனை புலந்தி நகருக்கு சூட்டிய தாக கூறப்படுகிறது.

ii) கி.பி 1017ல் இராஜராஜனுக்கு அடுத்து ஆட்சிபீடமேறிய மகன் இராஜேந்திரன் படையனுப்பி உருகுணை உட்பட இலங்கை முழுவதையும் சோழர் ஆட்சிக்கு உட்படுத்தினான். இதன் மூலம் இலங்கை "மும்முடிசோழ மண்டலம்" என்ற பெயருடன் சோழப் பேரரசின் பிராந்திய இராச்சியமாக இணைக்கப்பட்டது.

- **இந்தியாவுக்கு கைதியாக் கொண்டு செல்லப்பட்ட 5ஆம் மகிந்தன் அங்கே 1029ல் இறந்தான். பண்டுகாபயனால் தோற்றுவிக்கப்பட்டு தேவநம்பியதீஸன், துட்டகைமுனு முதலான பல மன்னர்களால் வளர்க்கப்பட்ட அனுராதபுரகால வரலாறு 5ஆம் மகிந்தனுடன் முடிவுக்கு வந்தது.**

**36.இராசரட்டை பகுதி சோழர் வசமானதற்கு செல்வாக்கு செலுத்திய காரணங்கள் (அனுராதபுர இராச்சியத்தின் வீழ்ச்சிக்குரிய காரணங்கள்).**

i) 2ஆம் சேனன், 4ஆம் மகிந்தன் போன்ற மன்னர்கள் சோழரின் ஆதிக்கத்தை எதிர்த்தாலும் அடுத்து ஆட்சிப்பீடமேறிய 5ஆம் மகிந்தனின் வலுவற்ற நிர்வாகம் சோழரின் ஆதிக்கத்தை அதிகரிக்க செய்தது.

ii) மக்களிடமிருந்து வரியை அறவிட முடியாதிருந்தமை.

iii) அரச திறைசேரி காலியாக இருந்தமை.

iv) படைவீரர்களுக்கு சம்பளம் கொடுக்க முடியாதிருந்தமை.

v) அகம்படியார் படையணியினரின் கிளர்ச்சியின் விளைவால் 5ஆம் மகிந்தன் கி.பி. 992இல் உருகுணைக்கு தப்பி சென்றான்.

**பொலநறுவை காலம்**

**37.சோழர் பொலநறுவையைத் தலைநகராக்கியமைக்குரிய காரணங்கள்.**

i) பொலநறுவை நாட்டின் மத்திய பகுதியில் அமைந்திருந்ததினால் இராசரட்டையையும், உருகுணையையும் ஆட்சி செய்வது இலகுவாயிருந்தது.

ii) பொலநறுவையின் அமைப்பு உள்நாட்டு, வெளிநாட்டு படையெடுப்புக் களின்று பாதுகாக்க வழிவகை செய்தது.

iii) பொலநறுவையை சூழவுள்ள பிரதேசங்கள் பொருளாதார ரீதியில் முன்னேறியிருந்தமை.

**38.பொலநறுவையில் சோழர் ஆட்சியை விழ்ச்சியடைச்செய்ய இயலாமல் போனமைக்குரிய காரணங்கள்**

i) சோழர்கள் ஆயுத பலத்தில் உயர்ந்திருந்தமை.

ii) சோழரிடம் போரிடும் ஆற்றல் மிகுந்த படை உருகுணை அரசிடம் இல்லாமை.

iii) கன்னட, கேரள, தமிழ் போர்வீரர்கள் இலங்கையில் சோழப்படைக்கு உதவியமை.

iv) உருகுணைத் தலைவர்களிடையே ஏற்பட்ட பதவிப் போட்டியால் உருகுணை பிளவுபட்டிருந்தமை.

**39.பொலநறுவைக்கு வழங்கப்பட்ட வேறு பெயர்கள்.**

ii) விஜிதகம - மகாவம்சம் கூறுகின்றது.
iii) விஜயராஜபுர - 1ஆம் விஜயபாகு இட்டபெயர்
iv) கலிங்கராஜபுர - 1ஆம் நிஸங்கமல்லன் இட்டபெயர்
v) புலஸ்திநகர் - பாளிமொழியில் அழைக்கப்பட்டது.
vi) ஜனநாத மங்கல - சோழர் இட்டபெயர்.

**40.கீர்த்தி இளவரசனின் இளமைப்பருவம் பற்றிய தகவல்கள்.**

i) தந்தை - மொக்கல்லான மகாமி
தாய் - லோஹிதா
புகழ் - விடுதலை வீரன்

ii) கீர்த்தி என்ற இளமைப்பெயருடைய இவன் அனுராதபுர அரச பரம்பரையின் ஒரு வழித்தோன்றல் ஆவான்.

iii) சிறுவயதிலிருந்தே வில் வித்தையில் தேர்ச்சி பெற்றிருந்தான்.

iv) சோழருக்கு பயந்தும், உருகுணைத் தலைவர்களிடையே ஏற்பட்ட பதவிப் போட்டியினாலும் பயந்து ஒளித்து வாழ்ந்தான்.

v) புத்தராஜன் என்னும் புதல்னாவ பிராந்திய மன்னன் தனக்கு உதவியதாக "பனாகடுவ" என்ற பித்தளைக் கல்வெட்டில் பொறித்துள்ளான்.

vi) புத்தராஜனின் உதவியுடன் கேசதாது காசியப்பனைத் தோற்கடித்து கி.பி. 1055 இல் கதிர்காமத்தை நிர்வாக மையமாகக் கொண்டு முதலாம் விஜயபாகு என்ற பெயருடன் உருகுணைக்கு ஆட்சியாளனானான்.

vii) சோழர்கள் விஜயபாகுவை அடக்கும் பொருட்ரு உருகுணையை ஆக்கிரமித்தபோது தந்திரமாக பின்வாங்கி நிர்வாகமையத்தை வேறுஇடத்திற்கு மாற்றினான்.

viii) சோழர்கள் மீண்டும் விஜயபாகுவிற்கு எதிராக ஆக்கிரப்பை மேற்கொண்டபோது (ரவிதேவ், சல எனும் வீரர்கள் சோழர்பக்கம் செல்லுதல்) பலுட்டகிரி என்ற இடத்திற்கு மன்னன் பின்வாங்கினான்.

ix) முதற் தடவையாக பொலநறுவைமீது தாக்குதல் தொடுத்தபோது தோல்வி அடைந்ததால் "வாக்கிரிகலை" க்கு தப்பிச் சென்று ஒளிந்து கொண்டான்.

ix) விஜயபாகு மீண்டும் படைகளை ஒழுங்கமைத்து உருகுணையில் மகாநாககூல எனும் இடத்திலிருந்து மூன்று வழிகளில் படைகளை அனுப்பி சோழரிடமிருந்து கி.பி. 1070 இல் பொலன்னறுவையைக் கைப்பற்றினான்.

x) பொலநறுவை யுகத்தின் முதலாவது சிங்கள மன்னன் ஆவான்.

xi) இவனது வரலாற்றை அறிய மகாவம்சத்தின் இரண்டாம் பாகம், பனாகடுவ செப்பேடு, அம்பகமுவ கல்வெட்டுப் போன்றன உதவுகின்றது.

**41.விஜயபாகு மன்னன் நாட்டின் பொருளாதார விருத்திக்காக எடுத்த நடவடிக்கைகள்.**

i) சோழராட்சிக் காலத்தில் அழிவுற்ற குளங்கள், கால்வாய்களை புனரமைப்பு செய்தான்.

ii) ஏலஹர கால்வாயைப் புனரமைத்து மின்னேரியா, கவுடுல்ல மற்றும் கந்தளாய் நீர்ப்பாசனக் கட்டமைப்புக்களை பழையநிலைக்கு கொண்டு வந்தான்.

iii) மாகல்கடவல, மகாகணதராவ, நாச்சதுவ ஆகிய குளங்களும் இவனால் புனரமைக்கப்பட்டது.

**42.விஜயபாகு மன்னன் சமயவளர்ச்சிக்கு மேற்கொண்ட சேவைகள்.**

i) புத்ததருமத்தை மேம்படுத்தும் பொருட்டு பர்மாவிலிருந்து புத்த பிக்குகளை வரவழைத்து உபசம்பதா விழாவை நடாத்தினான்.

ii) விகாரைகளைப் புனரமைப்பு செய்தான். எடுத்துக்காட்டாக அனுராத புரத்திலுள்ள போதிமரக் கோவில், ஜம்புகோள, மகாகமை, தம்புள்ள, மகியங்கனை முதலான இடங்களில் காணப்பட்ட விகாரைகளைப் புனரமைத்தான்.

iii) புனித தந்ததாதுகளை வைப்பதற்கென அட்டதாகய என்ற பெயரில் தலதா மாளிகையை அமைத்தான்.

iv) சிவனொளிபாத மலைக்குச் செல்லும் யாத்திரிகருக்கென தங்குமிடங் களை அமைத்தான் என "அம்பகமுவ கல்வெட்டு" குறிப்பிடுகிறது.

v) சைவ சமயத்தின் வளர்ச்சிக்கு உதவினான். இதற்கு சான்றாக கந்தளாயி லுள்ள "விஜயராஜஈஸ்வரம்" என்ற கோயிலிலுள்ள கல்வெட்டில் (கந்தளாய்க் கல்வெட்டு) இவனைப்பற்றி குறிப்பிடப் பட்டுள்ளது.

**43.விஜயபாகு மன்னனின் வெளிநாட்டுக் கொள்கை.**

i) தென்னிந்திய ஆக்கிரமிப்புக்களிலிருந்து நாட்டைப் பாதுகாக்கும் நோக்கில் வெளிநாட்டுக் கொள்கையை ஏற்படுத்தினான். தென்னிந்தி யாவில் படைதிரட்ட முயற்சியெடுத்தான் என "திருமுக்கூடல் கல்வெட்டு" குறிப்பிடுகிறது.

ii) சோழரால் முன்னர் கைதுசெய்யப்பட்ட அயோத்தி ஜகதீபாலனது மகளான லீலாவதியை தன் பட்டத்துராணியாக்கினான். பின்னர் கலிங்கநாட்டு இளவரசியான திரிலோகசுந்தரியை தனது இரண்டாவது அரசியாக ஏற்றுக்கொண்டான்.

iii) தனது சகோதரியான மித்தா இளவரசியை பாண்டியநாட்டு இளவரசனுக்கு திருமணம் செய்து வைத்தான்.

iv) பர்மாவுடன் தொடர்புகளை ஏற்படுத்தியதால் பர்மாவிலிருந்து வியாபாரப் பொருட்களை ஏற்றிக் கொண்டு கப்பல்கள் இங்கு வந்தன.

**44.விஜயபாகுவின் சாதனைகள்.**

i) சோழரிடமிருந்து நாட்டை மீட்டமை.

ii) சீர்குலைந்த நாட்டின் நிர்வாகத்தை கட்டியெழுப்பியமை.

iii) நீர்ப்பாசனத் துறைகளை புனரமைத்தமை.

iv) புத்த தர்மத்தை மேம்படுத்த பல முயற்சிகள் செய்தமை.

**45. முதலாம் பராக்கிரமபாகுவின் இளமைக் காலத்தின் முக்கிய நிகழ்வுகள்.**

i) விஜயபாகு மன்னனின் சகோதரி மித்தா இளவரசியின் மகனான "மானாபரன" என்பவனுக்கும் "இரத்னாவலி" இளவரசிக்கும் பிறந்தவனே பராக்கிரமபாகு ஆவான்.

ii) சிறுவயதிலேயே தந்தையை இழந்தமையால் சிறிய தந்தையார் களான கீர்த்திஸ்ரீ மேவனிடத்திலும் ஸ்ரீ பல்லவனிடத்திலும் வாழ்ந்து வந்தான்.

iii) கி.பி *1140*ல் கீர்த்திஸ்ரீமேவன் இறந்ததும் தக்கின தேசத்திற்கு அரசனானான்.



முதலாம் பராக்கிரமபாகு

iv) இவனது வரலாற்றை அறிய மகாவம்சத்தின் இரண்டாம் பகுதி, தெவனகலகல்வெட்டு, கல்விகாரை சுவர்க் கல்வெட்டு, சங்கமு விகாரைக் கல்வெட்டு போன்றனஉதவுகின்றன.

**46.பராக்கிரமபாகு நாட்டின் தென் பிரதேசத்தில் மேற்கொண்ட நடவடிக்கைகள்.**

i) குருணாகல் மாவட்டத்தில் ஹெட்டிப்பொல என்ற இடத்தை நிர்வாக மையமாக ஸ்தாபித்து அதற்கு பராக்கிரமபுர என பெயரிட்டமை.

ii) பராக்கிரமபுர (இன்றைய பண்டுவஸ்நுவர) என்ற இடத்தில் அரச மாளிகை கட்டியமை

iii) பண்டுவஸ்நுவரவிலிருந்த குளத்தை விரிவாக்கி அதற்கு பண்டுவாவி எனப் பெயரிட்டு விவசாயத்திற்கு நீர் வழங்கியமை.

iv) தெதுறு ஓயாவிற்கு குறுக்கே மூன்று இடங்களில் அணைகட்டி கால்வாயூடாக விவசாயத்திற்கு நீர் வழங்கியமை.

v) களுகங்கைக்கும், பெந்தரகங்கைக்கும் இடைப்பட்ட பஸ்துள் கோரளை (தற்போதைய களுத்துறை) சதுப்பு நிலத்தை அபிவிருத்தி செய்தமை.

vi) சிலாபம் கற்பிட்டி கொழும்புத் துறைமுகங்களை விருத்தி செய்தமை.



பராக்கிரம மாளிகை



குமார தாடகம்

**47.பராக்கிரமபாகு மன்னன் இலங்கையை ஐக்கியப்படுத்த எடுத்த முயற்சிகள்.**

i) தக்கினதேசத்திற்கு கி.பி 1140ல் கீர்த்திஸ்ரீமேவன் இறந்ததும் அரசனாகினான்.

ii) பொலநறுவையில் ஆட்சிசெய்த கஜபாகு மன்னனை கி.பி 1153ல் தோற்கடித்து பராக்கிரமபாகு ஆட்சிப் பீடம் ஏறினான்.

iii) உருகுணையிலிருந்து சுகலா அரசியின்(மனாபரனவின் தாயார்) தலைமையின்கீழ் வந்த எதிர்ப்பைத் தோற்கடித்தான்.

iv) சுகலாதேவியின் பொறுப்பிலிருந்து வந்த புனித தந்ததாதுக்களையும் பாத்திரதாதுக்களையும் பொலநறுவைக்கு கொண்டுவந்து தலைதாமாளிகைக்கு பிரதிஸ்டை செய்தான்.

v) கி.பி 1160ல் மகாபராக்கிரமபாகு உருகுணையை வெற்றிகொண்டு இலங்கையை ஐக்கியப்படுத்தினான்.

**சங்கமுவ விகாரைக் கல்வெட்டில் பராக்கிரமபாகு பற்றிய செய்திகள்.**

- **பொலன்னறுவ மன்னன் இரண்டாம் கஜபாகுவிற்கு எதிராக படையெடுத்த பராக்கிரமபாகு பௌத்த சங்கத்தின் தலையீட்டால் இருவருக்குமிடையில் சமாதான உடன்பாடு ஏற்பட்டது.**
- **இவ் உடன்பாட்டின்படி கஜபாகுவின்பின் பொலன்னறுவையின் ஆட்சியுரிமை பராக்கிரமபாகுவிற்கு உரித்தானதாகக் காணப்பட்டது.**
- **ஆயினும் உருகுணை மன்னன் மானாபரணன் இடையில் குறுக்கிட்டமையினால் அவனைத் தோற்கடித்துப் பராக்கிரமபாகு பொலன்னறுவையைக் கைப்பற்றினான்.**

**48. பராக்கிரமபாகு மன்னனின் நீர்ப்பாசன பணிகள்.**

i) பொருளாதார விருத்திநோக்கில் நீர்ப்பாசனத் திட்டங்களை மேற்கொண்டான்.

ii) பொலநறுவையுகத்தின் மாபெரும் சாதனையான பராக்கிரம சமுத்திரத்தை உருவாக்கியமை **(தோப்பாவாவி, தும்புலுவாவி, எலமுதுவாவி ஆகியன ஒன்றிணைந்தே பராக்கிரம சமுத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது).**

iii) அம்பன் கங்கை நதிக்கூடாக அங்கமெடில்ல என்ற இடத்தில் ஒரு அணையைக் கட்டி ஆகாசகங்கைக்கு ஊடாக பராக்கிரம சமுத்திரத்திற்கு நீரை எடுத்து வந்தமை.

iv) தெதுறுஓயாவில் மூன்று இடங்களில் அணைகளை அமைத்து நீர்ப்பாசன வசதியளித்தான்.

v) ஏலஹரக் கால்வாய் விரிவாக்கப்பட்டு அதன் மூலம் மின்னேரியாக் குளத்திற்கு நீர் திசை திருப்பப்பட்டது.

vi) "வானிலிருந்து விழுகின்ற ஒரு துளி நீரையேனும் பயன்படுத்தாது கடலில் விடக்கூடாது" என்ற உயரிய சிந்தனையில் செயற்பட்டான்.

**49.பராக்கிரமபாகு மன்னனால் பௌத்தசமய வளர்ச்சிக்கு மேற்கொண்ட பணிகள்.**

i) பௌத்த பிக்குகளுக்கென ஒழுக்கநெறிக் கோவையை திபுலாகல காசியப்ப தேரரின் தலைமையில் "பொலநறுவை கதிகாவத" என்ற பெயரில் அமைத்து அதனை கல்விகாரையில் ஒரு கல்வெட்டாக பொறித்தமை.

ii) பொத்தல் விகாரைய, உத்தராராமய, லங்காதிலகசிலைமனை என்பவற்றை நிர்மானித்தமை.

iii) பிரமாண்டமான புத்தர் சிலையை அமைத்தான்.
உ-ம்: லங்காதிலக புத்தர்சிலை.

iv) மன்னனின் அரசிகளான சுபத்திராவதியினால் கிரி விகாரையும் ரூபாவதியினால் பம்பலு விகாரையும் கட்டப்பட்டன.

v) புத்தபிக்குமார் தங்குவதற்கும், கல்வி கற்பதற்குமென "ஆலஹனபிரிவே" என்ற பெயரில் ஒரு நிலையத்தை உருவாக்கியமை.

vi) இந்நாட்டில் நிலவிவந்த மூன்று சமயப் பிரிவினரையும் ஒற்றுமைப்படுத்தினான்.

தென்னிந்திய போரில் பிடிக்கப்பட்ட கைதிகளைக் கொண்டு உருவாக்கிய தூபிக்கு அவர்களுடைய உழைப்பிற்கு மதிப்பளிக்கும் விதத்தில் 'தெமலமகாசாய" எனப் பெயரிட்டான்.

**50.பராக்கிரமபாகு மன்னனின் வெளிநாட்டுக் கொள்கைகள்.**

i) பர்மாவுக்கு எதிரான ஓர் ஆக்கிரமிப்பு மேற்கொள்ளப்பட்டது. இதற்கான காரணங்கள்.
- வர்த்தகக் கொடுக்கல் வாங்கல் தொடர்பில் எழுந்த பிணக்கு.
- கம்போடியாவிற்கு சென்ற சிங்கள இளவரசியை துன்புறுத்தியமை.
- சிங்கள வர்த்தகத் தூதுவர்களை பர்மா மன்னன் துன்புறுத்தியமை.

ii) தென்னிந்திய பாண்டிய இளவரசன் குலசேகரனுக்கு எதிராக ஓர் ஆக்கிரமிப்பு மேற்கொள்ளப்பட்டது. இதற்கான காரணங்கள்.
- பாண்டிய சிம்மாசனத்திற்காக போட்டியிட்ட பராக்கிரம பாண்டியனின் வேண்டுகோளின் பிரகாரம்.
- இலங்கையின் பாதுகாப்பை உறுதிப்படுத்த.

### 51.நிஸங்கமல்லனின் இளமைப் பருவக் குறிப்புக்கள்.


நிஸங்கமல்லனின் அரியணை

i) கலிங்க நாட்டின் சிங்கபுரம் என்ற பிரதேசத்திலிருந்து இலங்கைக்கு வந்தான்.

ii) இலங்கையில் சிம்மாசனம் ஏறிய மூன்றாவது கலிங்க இளவரசன்.

iii) இவனது தந்தை சிங்கபுர ஸ்ரீஜய கோக மகாராஜா எனவும் தாய் பார்வதி மகாதேவி எனவும் கூறப்படுகின்றது.

iv) முதலாம் பராக்கிரமபாகுவிற்குப் பின், ஆட்சி உரிமையைப் பெற மகன் அல்லது சகோதரன் இன்மையால் தங்கையின் மகன் இரண்டாம் விஜயபாகு அரசனானான். இவனிடமிருந்து ஒரு வருடத்தில் ஆட்சியைக் கைப்பற்றி ஐந்து நாட்கள் ஆட்சி புரிந்த கலிங்கவம்ச 6ஆம் மகிந்தனிடமிருந்து ஆட்சியை கைப்பற்றிக் கொண்டான்.

v) அரசாட்சிக்கு உரித்துடைய்வனாக இல்லாதபோதிலும்கூட நாட்டு மக்களின் அபிமானத்தைப் பெற்றுக்கொள்ள பல முயற்சிகளை மேற்கொண்டான்.

vi) கல்வெட்டுக்களின் ஊடாக கலிங்க அரசர்களின் உரிமைகளை வெளிப்படுத்தியதுடன் வேளாள குலத்தினருக்கு அரசுரிமை இல்லை என்பதை வெளிப்படுத்தினான்.

### 52. நிஸங்கமல்லனின் சமயப்பணிகள்.

i) பௌத்த மதத்திற்கு பேராதரவு வழங்கினான்.

ii) ரண்கொத்விகாரை, ஹட்டதாகய மற்றும் வட்டதாகய என்பவற்றை அமைத்தான்.

iii) மகியங்கனை, களனி மற்றும் சிவனொளிபாதமலை போன்ற புனித தலங்களுக்கு யாத்திரை செய்தான்.

iv) தம்புள்ள விகாரையை புனரமைத்து புத்தர் சிலைகள்மீது தங்க முலாம் பூசுவித்தான்.

v) நிஸங்கலதா மண்டபம் பொலநறுவையுகத்தின் தலைசிறந்த ஓர் கலைப்படைப்பாகக் கருதப்படுகிறது.

### 53.நிஸங்கமல்லனின் பொருளாதாரப்பணிகள்.

i) நாட்டு மக்களை வரிச்சுமையிலிருந்து விடுவித்தான்.

ii) வறுமையால் வாடிய மக்களுக்கு கால்நடைகள், உடைகள் ஆகியவற்றை நன்கொடைகளாக வழங்கினான்.

iii) வருடா வருடம் துலாபாரம் கொடைகளை வழங்கினான்.

iv) பாண்டிய விஜயகுளம்(தற்போது கல்மடியான குளம்) அமைத்து நீர்ப்பாசனத்தை வளர்த்தான்.

நிஸ்ஸங்கமல்லன் கால கட்டடங்கள்





**54.நிஸங்கமல்லன் ஆட்சியின் முக்கியத்துவம்.**

i) இலங்கை வரலாற்றில் அதிகளவு கல்வெட்டுக்களை உருவாக்கியவன் இவனாகும்.

ii) இதுவரை கண்டுபிடிக்கப்பட்டிருந்த கல்வெட்டில் மிக நீளமானது "கல்பொத்த" கல்வெட்டாகும். இது 8 மீற்றர் நீளமும் 4 மீற்றர் அகலமும் கொண்டது.

iii) ஒருவரின் உடல் எடைக்கு வழங்கப்படும் "துலாபாரம்" என்ற பெயரிலான தானத்தினை வழங்கிவந்தான்.

iv) மக்களுடன் நேரடியாகத் தொடர்புகொள்ள ருகுணு, மாயா மற்றும் பிகிட்டி ஆகிய பிரதேசங்களுக்கு பயணம் செய்தான்.

v) பொலநறுவை யுகத்தில் நாட்டில் ஒற்றுமை நிலவிவந்த இறுதிக்காலப்பிரிவு இவனது ஆட்சிக்காலமாகும்.

**55.இலங்கை தென்னிந்தியாவுடன் நிலவிய தொடர்புகள்.**

*1. நல்லுறவுகள்* *2. படையெடுப்புக்கள்*

**56.தென்னிந்திய படையெடுப்புக்கள் பற்றிய குறிப்புக்கள்**

i) **சேனன் குத்திகன் படையெடுப்பு.**
தேவநம்பியதிஸ்ஸனின் சகோதரரான சூரதிஸ்ஸன் காலத்தில் சேனன், குத்திகன் என்ற குதிரைவியாபாரிகள் மன்னனை கொலைசெய்து ஆட்சியைக் கைப்பற்றி 22 வருடங்கள் ஆட்சி செய்தனர். மகாவம்சத்தின்படி முதலாவது தென்னிந்திய ஆக்கிரமிப்பு இதுவாகும்.

ii) **சோழ இளவரசன் எல்லாளன் படையெடுப்பு.**
கி.மு. 205இல் அசேலனைத் தோற்கடித்து ஆட்சியைக் கைப்பற்றிய எல்லாளன் 44 வருடம் நீதி வழுவாது ஆட்சிசெய்தான். கி.மு. 161 இல் துட்டகைமுனு எல்லனனைத் தோற்கடித்தான்.

iii) **ஏழு தமிழர்களின் படையெடுப்பு.**
கி.மு 103ல் வட்டகாமினி(வலகம்பாகு) மன்னன் காலத்தில் பாண்டி நாட்டிலிருந்து 7 தென்னிந்திய தமிழ் தலைவர்கள் படையெடுத்துவந்து ஆட்சியைக் கைப்பற்றினர். இருவர் தாய்நாடு திரும்ப எஞ்சிய புலகத்தன், பாகியன், பணயமாறன், பிளையமாறன், தாடிகன் (பஞ்சதிராவிடர்) மாறி மாறி 14 வருடங்கள் ஆட்சி புரிந்தனர். கி.மு. 89இல் மீண்டும் வலகம்பாகு ஆட்சியைக் கைப்பற்றினான்.

iv) **பண்டு என்ற தமிழரின் படையெடுப்பு.**
தாதுசேனனின் ஆட்சிக்கு முன் மித்த சேன மன்னன்காலத்தில் பண்டு என்பவனின் தலைமையில் அவனது 5பிள்ளைகளும் (பரிந்த குட்ட பரிந்த திரிதரன், தாடிகள் பிட்டியன்) 27 வருடங்கள் மாறிமாறி ஆட்சி செய்தமை.

v) **ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் படையெடுப்பு.**
1ம் சேன மன்னன் காலத்தில் பாண்டிய மன்னன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் படையெடுத்த போது மலைநாட்டுக்கு தம்பியோடியவன் பின்னர் பாண்டியமன்னனுக்கும் திறை செலுத்தி மீண்டும் ஆட்சிக்கு வந்தான் இது இலங்கைக்கு ஏற்பட்ட மிகப்பெரும் அபகீர்த்தி என பிற்கால மன்னர்கள் கருதினர்.

vi) **இராஜராஜ சோழனின் படையெடுப்பு.**
கி.பி 993ல் 5ம் மகிந்தனின் ஆட்சியின் போது சோழர்களின் எதிரிகளான பாண்டியருடன் இலங்கை மன்னன் நட்பு கொண்டிருந்ததால் ஆத்திரமடைந்து இராஜராஜசோழன் இலங்கையின் வடபகுதியைக் கைப்பற்றினான்.

vii) **இராஜேந்திர சோழனின் படையெடுப்பு**
இராஜராஜ சோழனுக்கு பின் ஆட்சி பீடம் ஏறிய மகன் இராஜேந்திரன் கி.பி1017ல் இலங்கை முழுவதையும் சோழராட்சிக்குட்படுத்தினான்.

viii) **கலிங்க மாகனின் படையெடுப்பு**
கி.பி. 1215இல் பொலன்னறுவை இறுதி மன்னன் பராக்கிரம பாண்டியனைத் தோற்கடித்து ஆட்சியைக் கைப்பற்றினான்.

# 4 நீர்வள நாகரிகத்தின் எழுச்சியும் வீழ்ச்சியும்

**1. நீர்வள நாகரிகம் என்றால் என்ன?**

- நீர் நிலைகளை மையமாகக் கொண்டு எழுச்சியடைந்தால் அதனையே நீர் வள நாகரிகம் என்பர்.
- கி.மு. 6ஆம் நூற்றாண்டில் வட இந்தியாவில் இருந்து வந்து குடியேறிய ஆரியர்கள் நீர் நிலைகளைக் கொண்டு விவசாயம் செய்து வந்தமையால் அது நீர்வள நாகரிகம் என அழைக்கப்படுகிறது.

**2. இலங்கையின் நீர்வள நாகரிகத்தின் உருவாக்கத்திற்கு வழிகோலிய காரணங்கள்**

i) **பிரதான காரணங்கள்**

- ஆரம்பக் குடியேற்றவாசிகளின் தொழில் நெல்விவசாயமாக அமைந்தமை.
- சனத்தொகையில் ஏற்பட்ட வளர்ச்சி விவசாயத்தை விருத்தி செய்யவும் அதற்கு நீரைச் சேமிக்க வேண்டிய தேவையும் ஏற்பட்டது.

ii) **ஏனைய காரணங்கள்.**

- விவசாயத்திற்குத் தேவையான நீரப்பாசனத் தொகுதிகளிருந்தமை. உ-ம்: இயற்கையான கால்வாய்கள், குளங்கள்.
- சம தரையும், வளமான மண்ணும் காணப்பட்டமை.
- சிறந்த காலநிலை நிலவியமை.

**3. நீர்ப்பாசன முறையொன்றின் தேவைக்கான காரணங்கள்**

i) மக்களின் பிரதான ஜீவனோபாயமாக நெற்செய்கை விளங்கியமை.

ii) ஆற்றுநீர் நெற்செய்கைக்குப் போதாமை.

iii) மழை வீழ்ச்சி வருடத்தில் பருவகாலங்களில் மாத்திரம் கிடைத் தமை.

iv) கிடைக்கப்பெற்ற மழைவீழ்ச்சி போதியதாக இன்மை.

v) சனத்தொகை அதிகரிப்பினால் விவசாயநிலங்கள் விஸ்தரிக்கப் பட்டமை.

**4. நீர்ப்பாசனத் தொகுதியொன்றின் தோற்றத்திற்கு வித்திட்ட பௌதீகக் காரணிகள்**

i) உலர் வலயத்திற்குப் பொருத்தமான புவியியல் அமைப்பு காணப் பட்டமை.

ii) குறிப்பாக தொடரலை வடிவிலான நில அமைப்பும் அதனூடே ஓடும் ஆறுகளும் காணப்பட்டமை.

iii) உலர்வலயச் சமவெளியின் நிலச்சரிவுக்கேற்ப கால்வாய்களை நிர்மாணிக்க முடிந்தமை.

vi) சமவெளியூடாக ஆறுகள் பாயும்போது பின்னிய ஆறுகள், மியாந்தர் வளைவுகள் தோன்றுவதால் சிறு அணைகட்டுகளை அமைக்க முடிகின்றமை.

v) எச்சக் குன்றுகளும் அதனோடு இணைந்த சுவடுகளும் குளக்கட்டை அமைக்க உதவுகின்றமை.

## 5. நீர்ப்பாசனத்துறைக்குச் சேவையாற்றிய மன்னர்கள்.

### i) வசபன்.

- பாரிய குளங்களை அமைப்பதில் முன்னோடியாக விளங்கினான்.
- 11குளங்களையும் 12 கால்வாய்களையும் கட்டியதாக மகாவம்சம் கூறுகிறது.
- மகா விலச்சிய, மானாகெட்டிய, நொச்சிபொத்தான, கிரிவடுன்ன போன்ற குளங்கள் பிரதானமானவை.
- அம்பன் கங்கையில் எலகரவில் ஆரம்பித்து கிரிஓயாவரை செல்லும் 48 கி.மீ நீளமுடைய எலகர கால்வாயை அமைத்தான்.
- திஸாவாவிக்குளத்திலிருந்து அனுராதபுர ரன்மசு பூங்காவிலுள்ள பொய்கைகளுக்கு நீர் கொண்டுசெல்ல சுரங்க வழிக்கால்வாய்களை அமைத்தான்.

### ii) மகாசேனன்.

- 16குளங்களையும் 01 கால்வாயையும் அமைத்தான் என மகாவம்சம் கூறுகிறது.
- இவற்றுள் பெரியது மின்னேரியாக்குளம் (39சதுரகிலோமீற்றர்) ஆகும்.
- மகாவலி கங்கையிலிருந்து ஆரம்பிக்கின்ற பப்பதந்தக் கால்வாயை அமைத்தான்.
- இவனின் பாரிய நீரப்பாசன வேலைகளால் மக்கள் இவனை "மின்னேரியாத் தெய்வம்" என அழைத்தனர்.

### iii) தாதுசேனன்.

- 18 குளங்களையும் 1கால்வாயையும் கட்டுவித்தான் என சூளவம்சம் கூறுகின்றது.
- கலாஓயாவிலிருந்து நீரைப்பெறும் கலாவாவி முக்கியமான குளமாகும்.
- மாததுகம வாவி, மானாமதுவாவி, மகளுவாவி, பாணன்வாவி, மெத்தகட்டியவாவி என்பனவும் இவனால் அமைக்கப்பட்டது.
- கலாவாவியிலிருந்து திஸ்ஸவாவிக்குச் செல்லும் யோதகால்வாய் அல்லது ஜயகங்கை கால்வாய் (54மைல்) இவனாலேயே அமைக்கப்பட்டதாகும்.
- யோதகால்வாயின் சாய்வு ஒரு கிலோமீற்றருக்கு 95மில்லிமீற்றர் உள்ளமை அக்கால தொழில்நுட்ப சிறப்பை மேன்மைப்படுத்துகிறது.
- இளவரசன் காசியப்பன் தாதுசேனனிடம் மறைத்து வைத்துள்ள திரவியத்தைப்பற்றி கேட்ட போது கலாவாவியின் நீரை அள்ளி இதுவே என்னிடமுள்ள திரவியம்எனக் கூறியமை.

6. நீர்பாசன துறையில் ஆட்சியாளர்களின் சாதனைகள்.

| அரசர்கள் | நீர்ப்பாசன அமைப்பு |
|---|---|
| பண்டு காபயன் (கி.மு 377-307) | ▪ அபயவாவி (பசவக்குளம்), ஜயவாவி காமினிவாவி கட்டியதாக வரலாறு கூறுகின்றது.<br>▪ வரலாற்றில் முதற்குளமான அபயவாவி மாத்திரமே கண்டுபிடிக்கப்பட்டது. |
| தேவநம்பியதீசன் (கி.மு. 247 - 207) | ▪ திஸாவாவி |
| சத்தாதிஸ்ஸ (கி.மு. 137 - 118) | ▪ 18 குளங்களைக் கட்டுவித்தான் என மகாவம்சத்தில் குறிக்கப்பட்டுள்ள போதும் ஒன்றும் கண்டு பிடிக்கப்படவில்லை |
| வசபன் (கி.பி 67-111) | ▪ 11 குளங்களையும் 12 கால்வாய்களையும் அமைத்தான் என மகாவம்சம் கூறுகின்றது.<br>▪ மகாவிலச்சிய, மானாகட்டிய, நொச்சிபொத்தான, ஹிரிவடுன்ன குளங்கள், எலஹர கால்வாய் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. |
| மகாசேனன் (கி.பி 274 - 301) | ▪ 16 குளங்களையும் 1 கால்வாயையும் அமைத்தான் என மகாவம்சம் கூறுகின்றது.<br>▪ மின்னேரியா, கவுடுலு, குருளு, மகாகணதரா, மாமினியா, மாகல்கடவல, வாவிகளும், பப்பதந்த கால்வாயும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.<br>▪ எலஹர கால்வாயை விரிவுபடுத்தியமை. |
| உபதிஸ்ஸ (கி.பி. 365 - 406) | ▪ 6 குளங்கள் கட்டினான் என வரலாறு கூறுகின்றது.<br>▪ இவற்றில் 3 குளங்களைப் பெரிதாக்கியதே "தேப்பாவாவி" ஆகும். |
| தாதுசேனன் (கி.பி 455 - 473) | ▪ 18 குளங்களும் 1 கால்வாயையும் அமைத்தான் என சூளவம்சம் கூறுகின்றது.<br>▪ காலவாவி, மாததுகமவாவி, பாணன்குளம், மாணமதுவாவி, மெத்தகுட்டியவாவி, மகளுவாவி, குளங்களும் ஜயகங்கைக் கால்வாயும் அறியப்பட்டுள்ளது. |
| 2ஆம் முகலன் (கி.பி 535-555) | ▪ 3 குளங்களை அமைத்தான் என வரலாறு கூறுகின்றது.<br>▪ பதவியாக்குளம், பப்பதன்னக்குளம் (நாச்சதுவக் குளம்) என்பன அறியப்பட்டுள்ளது. |
| 1ஆம் அக்போ (கி.பி 571-604) | ▪ மாமடுவக்குளம், குருந்திக்குளம், சிறிவட்ட மானக்குளம் |
| 2ஆம் அக்போ (கி.பி 604-641) | ▪ கந்தலாய்க் குளம், கிரிந்தலைக் குளம் |
| 1ஆம் விஜயபாகு (கி.பி 1070 - 1110) | ▪ சோழர் காலத்தில் சிதைவடைந்த குளங்களை புனரமைப்புச் செய்தான். |
| 1ஆம் பராக்கிரமபாகு (கி.பி. 1153-1186 | ▪ 163 குளங்களையும், 3910 கால்வாய்களையும் அமைத்தான் என சூளவம்சம் கூறுகின்றது.<br>▪ பராக்கிரம சமுத்திரத்தை அமைத்தான்<br>▪ அங்கமதில்ல அணையை அமைத்தான் |
| நிஸங்கமல்லன் (கி.பி 1187-1196) | ▪ பாண்டிய விஜய குளம் ( கல்மடியான குளம்) |




**7. இலங்கையின் நீர்ப்பாசனத்தில் குளங்களின் நிர்மாணத்தில் காணப்பட்ட தொழிநுட்ப முக்கியத்துவங்கள்**

- நீரை அண்டிய நாகரிகக் காலத்திலே இலங்கையில் மேம்பட்ட நீர்ப்பாசனத் தொழிநுட்பம் இருந்துள்ளது. குறிப்பாக குளங்களின் நிர்மாணத்தில் பல எடுத்துக்காட்டுக்களைக் காணலாம்.

i) நிலத்தின் அமைவிடத்தை பரிசீலித்து அணைகட்டுவதற்கு பொருத்தமான இடத்தை தெரிவுசெய்தனர்.

- சமவெளி பிரதேசத்தில் எச்சக்குன்றுகள் ஊடாக நதி பாயும் போது குன்றுகளில் ஒடுங்கிய பகுதிகளின் இரு சுவடுகளையும் இணைத்து அணைகட்டி ஆற்றோட்டத்தை தடைசெய்து குளத்தை உருவாக்கியமை தற்கால பொறியியலாளர்களை வியக்க வைத்துள்ளது.

உ-ம்:-

| | |
|---|---|
| கலா ஓயா | - கலாவாவி |
| மல்வத்துஓயா | - திஸாவாவி, அபயவாவி |
| ஹூருளுஓயா | - ஹூருளுவாவி. |

- வளைந்துசெல்லும் ஆறுகளில் நீர்ச்சுழி உண்டாகும் போது நீரோட்டத்தின் வேகம் குறைவாக இருக்குமிடத்தில் அணை அமைத்து நீரைத் தேக்கி கால்வாய்கள் மூலம் தேவையான இடங்களுக்கு நீரை வழங்கினர். இதனை "அமுன" (சிறு அணைகட்டு) என்பர்.

- அம்பன் கங்கைக்குக் குறுக்காக அங்கமடில்ல எனு மிடத்தில் அணைகட்டி ஆகாய கங்கை என்ற கால்வாய் மூலம் பராக்கிரம சமுத்திரத்திற்கு நீர் வழங்கப்பட்டமை
  உ-ம்:
  - எலஹர எனுமிடத்தில் அம்பன் கங்கைக்கு குறுக்கே அணை கட்டி எலஹர கால்வாய் மூலம் கவுடுளு, மின்னேரியா, கந்தளாய் எனும் குளங்களுக்கு நீர் வழங்கப்பட்டமை
  - மகாவலிகங்கையில் - மினிப்பே அணைக்கட்டு
  - தெதுறுஓயாவில் - ரிதிபெந்தி அணைகட்டு
- உயரமான சிறு குன்றுகள் இல்லாதபோது உயரம் குறைந்த வில்வடிவமுள்ள அல்லது வட்டவடிவமுள்ள அணைக்கட்டுக்களை அமைத்து குளங்களை உருவாக்கினர்.
  உ - ம்: மன்னார் மாவட்ட யோதவாவி (இராட்சதக் குளம்)
  வட்டமாக ஏழு மைல் நீளமான அமைப்பில் கட்டப்பட்டுள்ளது.
- எச்சக் குன்றுகளின் சுவடுகளின் பாறை அமைப்புப் பற்றி அவதானம் செலுத்தப்பட்டு பலமான குளக்கட்டுகள் நிர்மாணிக்கப்பட்டது.
  உ+ம்:
  - மின்னேரியாக் குளத்தின் குளக்கட்டானது குவாட் சைட் பாறை பரந்துள்ள அமைப்பிலேயே நிர்மானிக்கப் பட்டிருந்தது.
  - சமவுயரக் கோடுகளின் பரலவலுக்கு ஏற்ப பராக்கிரம சமுத் திரக் குளக்கட்டு நிர்மாணிக்கப்பட்டிருந்தது.

ii) அணைகளைக் கட்டுவதற்கு கற்களை மிகநுட்பமான முறையில் பயன்படுத்தினர்.
உ-ம்: சொரபொரவாவியின் அணைக்கட்டானது கலிங்கலை அமைக்கும் போது வெட்டியெடுக்கப்பட்ட கருங்கற்களைக் கொண்டு அமைக்கப்பட்டது.

iii) குளத்திற்கான நேரடி நீரேந்து பிரதேசம் தவிர்ந்த வெளிவாரியான பகுதிகளிலிருந்து நீர் பெறப்பட்டது.
உ+ம்: மாகல்லவாவி - தெதுறு ஓயாவிலிருந்து
தப்போ வாவி - மீஓயாவிலிருந்து
பராக்கிரம சமுத்திரம் - அம்பன் கங்கையிலிருந்து.

iv. பிரதான குளத்தில் சேரும் வண்டல்களைத் தடுப்பதற்கு சிறிய குளங்கள் அமைக்கப்பட்டதுடன் அதற்காக தனியானதொரு கால்வாயும் அமைக்கப்பட்டது.
உ+ம்: எலஹர கால்வாய் மூலம் மின்னேரியா மற்றும் கிரித்தல குளங்களுக்கு நீர்வழங்கும் போது சிறுகுளங்கள் ஊடாக கால் வாய்கள் அமைக்கப்பட்டன.

v) ஒரு குளத்திலிருந்து மற்றொரு குளத்துக்கு நீரை வழங்குவதற்கும் கால்வாய்கள் அமைக்கப்பட்டது.
உ+ம்: கலாவாவியிலிருந்து ஐயகங்கை கால்வாய் மூலம் திஸா வாவிக்கு நீர் கொண்டு செல்லப்பட்டது.

**08. இலங்கையின் நீர்ப்பாசனத்தில் கால்வாய்களின் நீர்மாணத்தில் காணப்பட்ட தொழிநுட்ப முக்கியத்துவங்கள்.**

- கால்வாய்களின் நிர்மாணம் நீர்ப்பாசன தொழிநுட்பத்தின் சாதனை ஆகும்.

i) மிகவும் சாய்வான ஒரு பிரதேசத்தினூடாக கால்வாயை அமைக்கும் போது நீரின் வேகத்தைக் குறைப்பதற்காக கருங்கல்லினால் அத்திவாரம் அமைக்கப்பட்டமை.
உ+ம்; எலஹர அணையிலிருந்து மின்னேரியாக் குளத்திற்கு நீரைக் கொண்டுசெல்லும் எலஹர கால்வாய்

ii) கால்வாயின் நீரினளவு கூடும் சந்தர்ப்பங்களில் மேலதீக நீரை வெளியேற்றுவதற்காக கருங்கல்லினால் வான் கதவை அமைத் தமை.

iii) நிலத்தின் சரிவைப் பயன்படுத்தி நீளமான கால்வாய்களை நிர்மாணித்தமை.

iv) கால்வாயில் நுட்பமான சாய்வைக் கையாண்டு நீண்ட தூரத்திற்கு நீரைக்கொண்டு சென்றமை.
உ+ம்: கலாவாவியிலிருந்து திசாவாவிக்கு நிரைக் கொண்டு செல்லும் ஜயகங்கைக் கால்வாய் ஒருகிலோ மீற்றருக்கு 95 மில்லிமீற்றர் சாய்வைக் கொண்டிருந்ததால் நீரினால் நிலம் கழுவிச் செல்லுதல் தடுக்கப் பட்டது.

v) சுரங்கவழி நீர்ப்பாசன தொழிநுட்பம் காணப்பட்டது.
உ+ம்: வசபமன்னன் காலத்தில் அனுராதபுரத்திலுள்ள ரன்மசு உயன பூங்காவிற்கும், குட்டம்பொய்கைக்கும் திஸாவாவியிலிருந்து சுரக்கத்தினூடாக நீர் எடுத்துச் செல்லப்பட்டது.

vi) கால்வாய்களை நிர்மாணிக்கும் போது நிலம் நீரை உறிஞ்சும் தன்மை, கால்வாய் கட்டுக்களை உறுதியாகப் பேணல், வெள்ளப் பெருக்கின் போது மண்ணரிப்பைத் தடுத்தல் என்பன கவனத்தில் கொள்ளப் பட்டமை.

vii) சமவெளிகளூடாகப் பின்னிய ஆறுகள் மியாந்தர் வளைவுகள் தோன்றும் போது ஆற்றின் வேகம் குறையும். அவ்விடத்தில் சிறு அணையை அமைக்கும் போது மேலெழும் நீரை கால்வாய் மூலம் தாழ்நிலத்திற்குக் கொண்டு சென்றமை.
உ+ம்: எலஹர கால்வாய்

**9. குளத்தின் கூறுகள்.**

i) குளக்கட்டு - பவுபம்ப.
ii) அலைதாங்கி-சலபனாவ.
iii) கலிங்கல்-அலமார்க்ய.
உயர் கலிங்கல்-கொடஹொரவ்வ.
ஈரக்கலிங்கல்- மடஹெரவ்வ.



iv) சுருங்கை- சொரவ்வ. v) கலிங்கற்றொட்- பிசோகொட்டுவ

## 0.குளத்தின் கூறுகளும், நிறைவேற்றும் பணிகளும்.

i) **குளக்கட்டு:-** இரண்டு மலைச் சுவடுகளை இணைத்து நதியின் குறுக்காக கட்டப்படும் சக்திவாய்ந்த அணையே குளக்கட்டு ஆகும். அதாவது கால்வாயினூடாக நீரைக் கொண்டுசெல்வதற்கு ஆற்றுக்குக் குறுக்கே கற் குற்றிகளையிட்டு அமைக் கப்படும் தடுப்பே அணைக்கட்டாகும்.
**பணிகள்:** - குளத்தின் நீர் கொள்ளும் திறனைத் தாக்குப் பிடித்தல்.

ii) **அலைதாங்கி:** - குளக் கட்டின் உட்பாகத் தின் அடிப்பகுதியில் தட்டைக் கருங்கற் படையாக அமைக்கப்பட்டிருக்கும்.
**பணிகள்:-** குளக்கட்டை பலப்படுத்துவதால் அலைகளால் குளக்கட்டு அரிக்காமல் பாதுகாக்கப்பட உதவுகிறது.

iii) **சுருங்கை (வான் கதவு):-** குளத்தின் தாழ்ந்த மட்டத்தில் ஒரு இடத்தில் குளக்கட்டின் ஒரு முனையில் கற்கள் மூலம் அமைக்கப்பட்டிருக்கும்.
**பணிகள்:-** குளக்கட்டுக்கு சேதம் ஏற்படாத விதத்தில் மிகைநீரை வெளியேற்றுவதற்கு உதவுகிறது.

iv) **கலிங்கல் (மடைக்கதவு):-** குளத்தின் நீரை வெளியேற்றும் கதவு கலிங்கல் ஆகும். குளங்களில் இது ஒன்றேனும் பலவேனும் காணப்படும். குளத்தில் மேல் நீர்மட்டத்தில் அமைக்கப்படும் கலிங்கல் உயர்கலிங்கல் எனவும், குளக்கட்டின் கீழ்மட்டத்தில் அமைக்கப்படும் கலிங்கல் ஈரக்கலிங்கல் எனவும் அழைக்கப்படும்.
**பணிகள்:-** குளத்தின் நீர்மட்டம் உயர்ந்திருக்கும்போது நீரை வெளியேற்றவும், நீர்மட்டத்திற்கு உயர்ந்த பகுதிகளுக்கு நீரை வழங்கவும் உயர் கலிங்கல் உதவும். குளத்தின் நீர்மட்டம் குறைந்த வேளையில் நீரைப்பெறவும், திருத்த வேலைகளுக்கு குளத்து நீரை அப்புறப்படுத்தவும் ஈரக்கலிங்கல் உதவும்.

v) **கலிங்கற்றொட்டி:** குளக்கரையும் நீர்மட்டமும் இணையும் இடத்தில் ஆழமான ஒரு நாற்சதுரக் கிணற்றின் வடிவில் கருங்கற்களால் இது அமைக்கப்பட்டிருக்கும்.
**பணிகள்:-** பாரியதொரு குளத்திலிந்து கலிங்கல் ஊடாக நீர் வெளியே வேகமாகச் செல்லும்போது உண்டாகும் அமுக்கத்தினால் குளக்கட்டு பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்படுகிறது. தேவையான நேரத்தில், தேவையானளவு நீரைக் கால்வாய்க்கு வழங்குவதற்குரிய நீர்க்கட்டுப்பாட்டு உபகரணமொன்று கலிங்கல்தொட்டியினுள் உள்ளது. இதனை "மொஹல" என அழைப்பர். புராதனகால நீர்ப்பாசன தொழிநுட்பத்தின் பிரமிக்கத்தக்க நிர்மாணமாக இதுவுள்ளது.

vi) **உள்வான்கதவு:** குளக்கட்டின் ஒரு அந்தத்தில் உயர் அணையில் அமைக்கப்பட்டிருக்கும். இது வான்கதவு போன்று உறுதியான நிர்மாணம் அல்ல.
**பணிகள்:** . மேலதிக நீரை குளமொன்றுக்கு கொண்டு வருவதற்கு

உதவுகிறது. நீருடன் சேர்ந்து வண்டலும் சேறும் குளத்தில் படிவதைத் தடுக்கும்.

vii) **உயர் அணை (போட்டா அணை):** குளம் ஆரம்பிக்கும் இடத்தில் மேட்டு நிலம், மலைக்குன்றுகளின் அடிவாரத்தின் நெடுங்கிலும் 2 அல்லது 3 அடி உயரத்திற்கு மண்ணால் அமைக்கப்படுவது.
**பணிகள்:** குளத்தில் சேரும் வண்டலும் சேறும் தடுக்கப்படும் மேட்டுநிலத்தின் அடிவாரம் ஈரமாக இருப்பதுடன் மரங்கள் செழித்து வளர்வதால் நீர் ஆவியாதல் தடுக்கப்படுகிறது.

viii) **கலிங்கற்கட்டு:** குளத்தின் வான்கதவுக்கு முன்னால், குளத்தினுள்ளே குளக்கட்டுக்கு நேராக குளத்தின் குறுக்கே உயரம் குறைவான கருங்கல்லால் கட்டப்படும் அணை ஆகும்.
**பணிகள்:** வான்கதவு உடைப்பெடுக்கும் போது குளத்துநீர் முழுமையாக வெளியேறாமல் தடுத்தல். (பராக்கிரம சமுத்திரத்திலுள்ளது.)

### 11. சிறுகுளங்கள்: முக்கிய அம்சங்கள்

i) மலைச்சரிவுகளிலிருந்து ஊற்றெடுக்கும் பிரதான நதியின் கிளையாறுகளுக்குக் குறுக்காக அமைக்கப்படும் சிறு அணைக்கட்டுகள் மூலம் உருவாக்கப்படுவதே சிறுகுளங்கள் ஆகும்.

ii) சிறுகுளங்களுக்கு கலிங்கல், வான்கதவு போன்ற உறுப்புகள் காணப்படமாட்டாது. கருங்கல்லினால் உருவாக்கப்பட்ட சிறு இடைவெளிமூலம் பிரதான குளத்திற்கு நீர் வழங்கப்படும்.

iii) சிறுகுளங்கள் அமைக்கப்படுவதால் கிடைக்கும் நன்மைகள் வருமாறு:
- சிறுகுளங்களில் சேறும் வண்டலும் படிவதால் பிரதான குளத்தில் அவை சேர்வது தடுக்கப்படுகிறது.
- மழைகாலங்களில் பிரதான குளத்தில் மேலதிக நீர் சேர்வதைத் தடுக்கிறது.
- இங்கு நீர் சேமித்து வைக்கப்படுவதால் குளத்தின் மேல்பகுதியில் மரங்கள் செழித்து வளர்வதுடன் ஊற்று நீரும் அதிகரிக் கும்.
- பிரதான குளத்தில் நீர் குறைவடையும் போது சிறுகுளங்களில் சேமிக்கப்பட்ட நீரை பிரதான குளத்திற்கு வழங்கலாம்.

### 12. நீர்வள நாகரிக கால நிர்வாகக் கட்டமைப்பு

- நிர்வாக கட்டமைப்பு மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டிருந்தது.

i) மத்திய நிர்வாகம்

ii) பிரதேச நிர்வாகம்

iii) கிராம நிர்வாகம்

### 13. மத்திய நிர்வாகம்: முக்கிய அம்சங்கள்

i. மத்திய நிர்வாகம் நாட்டின் அரசனாலே மேற்கொள்ளப்பட்டது. அதாவது நாட்டின் ஈடிணையற்ற ஆட்சியாளனாக மன்னன் இருந்தான்.

ii. அரசுரிமை வாரிசுரிமை அடிப்படையில் அமைந்திருந்தது.

iii. அரச உரிமையைப் பெற்றுகொள்வதற்கு முடிசூட்டுவிழா நடாத்தப்பட்டது. அதாவது பட்டத்து ராணியுடன் நாட்டு மக்களின் முன்னிலையில் முடிசூட்டு விழா நிகழ்த்தப்பட்டது.

iv. மௌரிய அரச வம்ச மரபுப்படி தேவநம்பியதீச மன்னனால் முதலாவது முடிசூட்டு விழா நடாத்தப்பட்டது.

v. ஆட்சி நடவடிக்கைகளின் போது பௌத்த குருமாரினதும் புரோகிதர், சேனாதிபதி, அமைச்சர்களினதும் ஆலோசனைகளை மன்னன் பெற்றுக்கொண்டான்.

vi. அனுராதபுர காலத்தில் சில சந்தர்ப்பங்களின்போது மன்னன் போதிசத்துவராக மதிக்கப்பட்டதுடன் பொலன்னறுவைக் காலத் தில் மனிதவடிவிலிருக்கும் தெய்வமாகவும் மதிக்கப்பட்டான்.

**14. மத்திய நிர்வாகத்தில் அரசுரிமை தொடர்பான முக்கிய அம்சங்கள்**

i) அரசுரிமை மரபுவழி அடிப்படையில் உறவு முறையில் அமைந் திருந்தது.

ii) தந்தையிடமிருந்து மூத்த மகனுக்கு அரசுரிமை கிடைத்தது.
உ+ம்: பண்டுகாபயனின் பின் அவனது மூத்த மகனான மூத்த சிவனுக்கு அரசுரிமை கிடைத்தது.

iii) மூத்த சகோதரனுக்குப் பின் அவனது அடுத்த சகோதரன் அர சுரிமை பெறல்.
உ+ம்: தேவநம்பியதீசனுக்குப் பின் உத்தியன் அரசுரிமை பெற்றமை.

iv) இளைய சகோதரனின் பின்னர் ஆட்சியுரிமையானது மூத்த சகோதரனின் மகனுக்கு உரித்தானது.

v) சட்டரீதியான பட்டத்து இராணியின் பிள்ளைகளுக்கு மட்டுமே அரசுரிமை உரித்தானது.

vi) அரசன் இராசரட்டையைத் தனது ஆட்சி மத்திய நிலையமாகக் கொண்டிருக்க மாயரட்டையில் "மாபா" பதவி அரசனின் தம்பிக்கும் உருகுணரட்டையில் "ஏபா" பதவி மன்னனின் மகனுக்கும் வழங்கப்பட்டது.

vii) அரசன் இறந்தபின் "மாபா" பதவி வகித்த இளவரசன் மன்னனாக முடிசூட "ஏபா" பதவி வகித்த இளவரசன் "மாபா" பதவிக்கு அமர்த்தப்படுவான்.

**15. அரசனின் முக்கியமான பணிகள்.**

- நீர்வள நாகரிக காலத்தில் அதன் மத்திய ஆட்சியாளராகிய அரசனிடமிருந்து மக்கள் பல்வேறு சேவைகளை எதிர்பார்த்தனர்

i) **நாட்டுமக்களை பாதுகாத்தல்.**
உள்நாட்டிலிருந்தும் வெளிநாட்டிலிருந்தும் எழும் பிரச்சினைகளுக்கு முகம்கொடுத்தலும், நாட்டின் அமைதியைப் பேணுதலும்.

ii) **நீர்ப்பாசன வசதிகளை வழங்குதல்.**

விவசாய நடவடிக்கைகளுக்காக குளங்கள், கால்வாய்கள் என்பவற்றை அமைத்து தேவையான நீரை வழங்குதல்.

iii) பௌத்த மதத்தை பாதுகாத்தல்.
சமய, கலாச்சார நடவடிக்கைகளை மேம்பாடடையச் செய்தல், விகாரைகள் அமைப்பதன்மூலம் மக்களுக்கு உதவுதல், கலையாற்றல் உடையவர்களின் ஆக்கங்களுக்கு ஊக்குவிப்பை வழங்குவதன்மூலம் பௌத்த மதத்தைப் பாதுகாத்தல்.

iv) அரச தர்மத்தை நிலைநாட்டுதல்.
அரச செயற்பாடுகளின்போது பௌத்த துறவிகளினதும், புரோகிதர்கள், மந்திரிமார்கள், சேனாதிகளின் ஆலோசனைகளைப் பெற்று அரச தர்மங்களுக்கு ஏற்றவாறு நாட்டை நிர்வகித்தல்.

v) நீதி வழங்குதல்.
நீதித்துறையின் தலைவராகச் செயற்பட்டு பக்கச்சார்பற்ற முறையிலான நீதியை வழங்குதல்.

**16. மன்னனின் அரச சபையிலிருந்த தலைமைப் புரோகிதனது கடமைப் பொறுப்புகள்.**

- மன்னனுக்கு ஆதரவு வழங்கும் அதிகாரிகள் குழுவின் தலைவனாக இருந்தவனே தலைமை புரோகிதன் ஆகும்.

i) அரசனின் முடிசூட்டு விழா தொடர்பான நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

ii) அரச குடும்பத்தின் பிறப்புக்கள், திருமணவைபவங்கள், இறுதிச்சடங்குகள் என்பவற்றை நடத்தி வைத்தல்.

iii) அரச குடும்பத்தின் சமய நடவடிக்கைகளில் போது ஆசீர்வாதம் வழங்குதல்.

iv) கனவுகளுக்கு பலன் கூறுதல்.

**17. அநுராதபுரகால அரச அதிகாரிகள்: பணிகள்.**

| | |
|---|---|
| i) புரோகிதன் | :- சடங்குகள், நீதி பரிபாலனத்தில் பங்கு கொண்டவர். |
| ii). தோவரிக்க | :- வாயில் காப்போன் எனக் குறிப்பிடுகின்ற போதிலும் அதிகாரம்மிக்க மிக முக்கிய பதவியாகும். |
| iii). சேனாதிபதி | :- அரசனின் படைத்தலைவன் ஆவான். அரசனின் நெருங்கிய உறவினர்களுக்கு இப்பதவி வழங்கப்பட்டது. |
| iv) அசிக்காகிக் | :- போர் உபகரணங்களுக்கு பொறுப்பான அதிகாரி. |
| v) என்னக்காஹக | :- குடை, கொடிகள், பதாகைகள் போன்றவற்றிக்கு பொறுப்பான அதிகாரி. |

vi) மஹலே :- அரசனின் ஆவணங்களுக்குப் பொறுப்பான அதிகாரி.

vii) படகாரிக :- திறைசேரிக்குப் பொறுப்பான அதிகாரி.

viii) சபாபதினா :- அமைச்சரவையின் பிரதானி.

ix) நுவரலட்ட :- தலைநகர அதிகாரி.

x) நகரகுத்திக :- நகரின் பாதுகாப்பு அதிகாரி.

xi) சிட்டுனா :- வர்த்தக அதிகாரி.

xii) தெமளஅதிக்கார :- தமிழ் அதிகாரி.

xiii) அமதே :- அரசனின் அமைச்சரவை.

xiv) பஸ்லது :- மாகாண அதிகாரி.

xv) றட்டலது :- மாவட்ட அதிகாரி.

**18. பிரதேச நிர்வாகம்: முக்கிய அம்சங்கள்.**

i) அனுராதபுரக் காலத்தின் இறுதிப் பகுதியில் நாடு நான்கு நிர்வாகப் பிரிவு களாகப் பிரிக்கப்பட்டி ருந்தது.

1. இராஜரட்டை
2. உருகுணைரட்டை
3. தக்கிணதேசம்
4. மலையரட்டை




ii) அனுராதபுரக் காலத்தின் இறுதியில் இராசரட்டை சனத்தொகை யிலும் விஸ் தீரணத்திலும் அதிகரிக்கவே நிர்வாக வசதிக்காக அது நான்கு பகுதிகளிலும் "பஸ்ஸ" என்ற நிர்வாகப் பிரிவுகள் உருவாக்கப் பட்டமை.

1. உத்தரபஸ்ஸ (வட நாடு)
2. தக்கிணபஸ்ஸ(தென் நாடு)
3. பாச்சினபஸ்ஸ (கீழ் நாடு)
4. பஸ்சிமபஸ்ஸ(மேற்கு நாடு)

iii) பொலன்னறுவைக் காலத்தின் போது நாடு நான்கு அலகு களாகப் பிரிக்கப் பட்டிருந்தது.

1. இராசரட்டை
2. தக்கிணதேசம்
3. தொலஸ்தஹஸ் ரட்டை
4. அட்டதஹஸ் ரட்டை

iv) வசப மன்னனின் காலத்தில் "இஸிகிரி" எனும் அமைச்சர் வடபகுதிக்கான பிரதேச ஆட்சியாளராக செயற்பட்டார்.

**19. கிராம நிர்வாகம்: முக்கிய அம்சங்கள்**

i) பண்டுகாபய மன்னன் காலந்தொட்டு பொலன்னறுவைக் காலத்தின் முடிவுவரை கிராம நிர்வாகம் முறையாக மேற்கொள்ளப்பட்டதாக மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன.

ii) பண்டுகாபய மன்னன் நாடு முழுவதும் இருந்த கிராமங்களுக்கு நிர்வாக எல்லைகளை வகுத்ததாக வம்சக் கதைநூல்கள் குறிப்பிடுகின்றன.

iii) கிராமங்கள் நிர்வாகக் கட்டமைப்பின் சிறிய அலகாகவும் அதேவேளை முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் காணப்பட்டது.

iv) கிராமத்தில் சமாதானம், நீதி என்பவற்றைப் பேணுவதற்காக "கிராமசபை" எனும் அமைப்புக் காணப்பட்டது. இதன் தலைவர் **கமிக, பறுமக, கிராம போஜக** எனும் பெயர்களினால் அழைக்கப் பட்டான்.

v) கிராமத் தலைவருக்குரிய கடமைகள்.
- கிராமத்தில் சமாதானத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டல்.
- கிராமவாசிகளின் பழக்கவழக்கங்கள், சம்பிரதாயங்களுக்கு ஏற்ப நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.
- கிராமத்தில் வரி சேகரித்தல்.
- கிராமவாசிகளுடன் நல்லுறவைப் பேணும் வகையில் நடந்து கொள்ளுதல்.
- கிராம நிர்வாக விடயங்கள் தொடர்பாக அரசனுக்கு பொறுப்புச் சொல்லக் கடமைப்படுதல்.
- கிராமத்தில் நீதியை நிலைநாட்டல்.

**20. நீர்வள நாகரிகத்தின் பொருளாதார அமைப்பில் அடங்குபவை**

i. விவசாயம்

ii. கைத்தொழில்

iii. வர்த்தகம்

**21. விவசாயம்: முக்கியமான அம்சங்கள்**

i) நீர்வள நாகரிக பொருளாதார நடவடிக்கைகளின் அடிப்படையாக அமைந்தது விவசாயமாகும்.

ii) விவசாயத்திலும் நெற்செய்கையே முதலிடம் பெற்றது. ஏனெனில் நாட்டு மக்களின் பிரதான உணவாக நெல் அரிசிச் சோறு காணப்பட்டது.

iii) நெல்லைப் பெற்றுக் கொள்வதற்காக வருடத்தில் இரண்டு அல்லது மூன்று போகங்களில் நெற்செய்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

உ+ம்: தோணிக்கல் கல்வெட்டின் படி மூன்று போகம் இடம் பெற்றது.

iv) நெற்செய்கைக்குத் தேவையான உழைப்பு "அ(ந்)த" முறை (பிறரின் நிலத்தில் விவசாயம் செய்தல்), "அத்தம்" முறை (சிரமப் பரிமாற்றம்),

கூலி கொடுக்கும் முறை எனும் அடிப்படையில் பெற்றுக்கொள் ளப்பட்டது.

v) சேனைப்பயிர்ச்செய்கையும் முக்கிய இடம் வகித்தது உலர்வலய மும், நாட்டின் உள்ளார்ந்த பிரதேசங்களும் சேனைப் பயிற் செய்கைக்கு உட்படுத்தப்பட்டிருந்தது.

vi) கரைநெல், உழுந்து, பயறு, சாமை முதலிய தானியங்களும் கத்தரிக்காய், சுரக்காய், வெள்ளரிக்காய், பூசனிக்காய் முதலிய காய்கறிகளும் சேனைகளில் பயிரிடப்பட்டன.

vii) நெசவுத் தொழிலுக்குத் தேவையான பருத்தி வெற்றிகரமாகப் பயிரிடப்பட்டதுடன் கரும்புச் செய்கையும் முக்கியம் பெற்றிருந்தது.

viii) வீட்டுத் தோட்டங்களில் பலா, தென்னை, மா முதலிய மரங்களும் மலைப்பாங்கான பகுதிகளில் இஞ்சி, மிளகு, மஞ்சள், கிழங்கு வகைகளும் பயிரிடப்பட்டன.

---

- நெற்பயிர்ச்செய்கை போகங்கள் பற்றி சிறிமேகவர்ண மன்னனின் காலத்துக்குரிய தோணிகல கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்ற மூன்று போகங்கள்.

  1. சிறுபோகம் (மதஹச)
  2. பெரும்போகம் (பிட்டஹச)
  3. இடைப்போகம் (அகலஹச)

---

**22. நீர்வள நாகரிகத்தில் முக்கியத்துவம் பெற்ற கைத்தொழில்கள்**

i) சுயதேவைப்பூர்த்தியான ஒரு பொருளாதார முறையின் கீழ் விவசாய நடவடிக்கைகளுடன் இணைந்ததான கைத்தொழில்கள் இடம்பெற்றமைக்குப் பல சான்றுகள் காணப்படுகின்றது.

ii) நெற்பயிர்ச் செய்கைக்குத் தேவையான கலப்பை, நுகத்தடி, மட்டப்பலகை, கத்தி, அரிவாள், மண்வெட்டி போன்ற உபகரணங்கள் பற்றி "அட்டுவா" கதைகளிலும் சத்தர்மரத்னாவலிய எனும் நூலிலும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கொண்டு தச்சுத் தொழிலும், உலோகத்தொழிலும் வளர்ச்சியடைந்திருந்தது உறுதியாகிறது.

iii) படைவீரர்களுக்குத் தேவையான ஆயுதங்கள், அலங்காரமான புத்தர்சிலைகள், தெய்வச்சிலைகள், விளக்குகள் என்பன உலோகக் கைத்தொழிலை அடிப்படையாகக் கொண்டே மேற்கொள்ளப் பட்டது.

iv) பருத்திப் பஞ்சிலிருந்து நூல்நூற்றல், புடவை நெய்தல் எனும் நெசவுக் கைத்தொழில் வளர்ச்சியடைந்தது. குறிப்பாக விஜயன் வருகை தந்தபோது குவேனி நூல் நூற்றுக் கொண்டிருந்தாள் என மகாவம்சம் குறிப்பிடுகிறது.

v) மட்பாண்டக் கைத்தொழில் உயர்மட்டத்தில் காணப்பட்டது.

vi) கருப்பஞ்சாற்றிலிருந்து கருப்பட்டி (சர்க்கரை)தயாரித்தல் இடம் பெற்றுள்ளது.

vii) செங்கல், ஓட்டுக் கைத்தொழில் வளர்ச்சி பெற்றிருந்தது. ஏனெனில் கட்டிட நிர்மாணங்களின்போது கற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இக்கைத்தொழிலில் ஈடுபட்டவர்களை "ஓலுவடு" என அழைத்ததாக மகாவம்சம் கூறுகிறது.

viii) இரத்தின கற்களால் ஆபரணங்கள் தயாரிக்கப்பட்டதிலிருந்து சுரங்கக் கைத்தொழில் வளர்ச்சியடைந்தது புலனாகிறது. ஜேதவள அகழ்வில் 21 பூ வேலைப்பாடுகள் கொண்ட தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது.

**23. நீர்வள நாகரிக காலத்தில் நடைபெற்ற உள்நாட்டு வர்த்தகம்**

i) உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களும், வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களும் நாட்டின் பல்வேறு இடங்களில் விற்பனை செய்யப்பட்டது.

ii) பண்டமாற்று அடிப்படையிலேயே பெரும்பாலும் வர்த்தக கொடுக்கல்வாங்கல் இடம்பெற்ற போதிலும் "கஹவணு" "மஸ்ஸ" எனும் பெயர்களிலான நாணயங்கள் பயன்படுத்தப்பட்டமையானது நாணயப்புழக்கத்தை வெளிப்படுத்துகிறது.

iii) உள்நாட்டில் காணப்பட்ட சந்தைகள் "பதிய" எனும் பெயரால் குறிப்பிடப்பட்டன. எடுத்துக்காட்டாக மகியங்கனைக்கு அருகிலுள்ள ஹோபிட்டி - கமுவ பதிய என்ற சந்தைபற்றி பதுளைத் தூண் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

iv) வர்த்தக சந்தை நிர்வாகிகள் "பதிலத்தன்", எனும் பெயரால் அழைக்கப்பட்டனர்.

v) வர்த்தக நகரங்கள் "நிகம", "நியமத்தன", "நியம்கம" எனும் பெயரால் குறிப்பிடப்பட்டிருந்தது.

vi) உள்நாட்டு வர்த்தகத்தில் உப்பு, இஞ்சி, ஆடை, ஆபரணங்கள், நறுமணப் பொருட்கள் என்பவற்றுடன் வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட துணிவகைகள், பீங்கான்பொருட்கள் என்பனவும் இடம்பெற்றிருந்தது.

vii) தூரப்பிரதேச கிராமங்களுக்கு பொருட்களை "காவு" களில் கொண்டு சென்று விற்பனை செய்யும் வியாபாரிகள் காணப்பட்டனர்.

viii) உள்நாட்டு வியாபாரம் தொடர்பாக வர்த்தக சபைகள் உருவாக்கப்பட்டிருந்ததாகவும் வியாபாரச் சந்தைகளுக்கான வரிகளை விதித்தல், சந்தைகளில் நிகழும் ஊழல்களைத் தேடியறிதல் முதலிய நடவடிக்கைகள் அரசனால் மேற்கொள்ளப்பட்டதாக பதுளைத் தூண் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

ix) உப்பு, முத்து, இரத்தினம், மற்றும் யானைவர்த்தகம் என்பன அரசனின் தனியுரிமையாகக் காணப்பட்டது.

**24. நீர்வள நாகரிக காலத்தில் நடைபெற்ற வெளிநாட்டு வர்த்தகம்**

i) பிரதான நதிகள் கடலில் கலக்கும் இடங்களில் காணப்பட்ட ஓடத்துறைகளை அடிப்படையாகக் கொண்டு வர்த்தகத்துறை முகங்கள் வளர்ச்சியடைந்தன. இவை "பட்டுன்கம" (பட்டணம்) எனக் குறிப்பிடப்பட்டிருந்தது.
உ+ம்: மகாதித்த, சூகரதித்த, ஜம்புகோளத்தித்த, கோகண்ண தித்த என்பன.

ii) புராதன துறைமுகங்களில் ஒன்றான மகாதித்த துறைமுகப் பகுதியில் வெளிநாட்டு நாணயங்களும், சீன மட்பாண்டங்களின் சிதைவுகளும் தொல்பொருட்களாகக் கிடைத்ததைக் கொண்டு வெளிநாட்டு வர்த்தகம் வளர்ச்சியடைந்ததை அறியலாம்.

iii) யானை, யானைத்தந்தம், முத்து, மாணிக்கம், சங்கு, கடலாமை, ஓடு, பருத்தித்துணி என்பன வெளிநாடுகளுக்கு இலங்கையிலிருந்து கொண்டு செல்லப்பட்ட பொருட்களாகும்.

iv) தங்கம், வெள்ளி, செப்பு, வெண்கலம், கண்ணாடி, பீங்கான் பொருட்கள், உயர்தர துணிகள், குதிரைகள் என்பன வெளிநாடு களிலிருந்து இலங்கைக்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருட் களாகும்.

v) இந்தியா, கிரேக்கம், உரோம, சீனா, அரேபியா ஆகிய நாடுகளுடன் இலங்கை வர்த்தகத் தொடர்புகளைப் பேணியமைக்குச் சான்றுகள் காணப்படுகிறது.
உ+ம்: பிளினியின் இயற்கை வரலாறு என்ற நூலில் உரோம் தொடர்புகள் உள்ளது.

**சமயமும் கலாசாரமும்**

**25. நீர்வள நாகரிகத்தில் பௌத்த சமயம்**

i) தேவநம்பியதீசன், அசோகன் நட்புறவின் விளைவாக மகிந்த தேரரால் இலங்கைக்குப் பௌத்தசமயம் கொண்டுவரப்பட்டது.

ii) தேவநம்பியதீசனால் பௌத்தசமயம் ஏற்றுக் கொள்ளப்பட்டமை யானது இலங்கையில் பௌத்த சமயத்தின் ஆரம்பமாகும்.

iii) அரசனைத் தொடர்ந்து அரசகுடும்பத்தவர்களும் அரச பிரதானிகளும் பௌத்த சமயத்தைத் தழுவியதால் பொதுமக்களும் அவ்வாறே பௌத்தத்தைத் தழுவினர்.

iv) தேரவாதபௌத்தத்தின் மத்திய நிலையமாக மகாவிகாரை திகழ்ந்தமை அதாவது மிகிந்தலையிலிருந்து மகிந்ததேரர் தலைமையிலான

பிக்குமார்கள் அனுராதபுரத்திற்கு வரவழைக்கப்பட்டு மகாமேகவனம் (மகாமெங்னா) அர்ப்பணம் செய்யப்பட்ட பின்னர் அங்கு மகாவிகாரை அமைப்பதற்கான எல்லை குறிக்கப்பட்டமை.

v) தேவநம்பியதீசன் மக்களின் வழிபாட்டுக்காக புத்தபெருமானின் சர்வக்ஞ தாதுக்களைப் பிரதிஷ்டை செய்து தூபராமை விகாரையை அமைத்தமை.

vi) துட்டகைமுனுவின் ஆட்சிக்காலம் மகாவிகாரையினதும் தேரவாத பௌத்த சமயத்தினதும் பொற்காலமாக கருதப்படுகிறது. ருவன் வலிசாய, மிரிசவெட்டிய போன்ற விகாரைகளையும் பௌத்த பிக்குமார் வசிப்பதற்காக ஒன்பது மாடிகளைக் கொண்ட "லோவமஹா பாய" எனும் ஆயிரங்கால் மண்டபத்தையும் நிர்மாணித்தான்.

vii) பௌத்த சமயத்தின் வளர்ச்சியைப் போலவே அச்சமயத்தைப் பாதுகாப்பதற்கும் சிங்கள மன்னர்கள் நடவடிக்கை மேற் கொண்டமை.

- உ+ம்: வலகம்பாகு காலத்தில் வாய்மொழிக் கதையாக அதுவரை காலமும் செவிவழியாகப் பேணப்பட்டு வந்த திரிபிடகம் மாத்தளை அலுவிகாரையில் நூல்வடிவம் பெற்றது.
- மகாநாம மன்னனின் காலத்தில் "அட்டகதா" என்ற சமயக் கதைகளை பாளிமொழியில் புத்தகோசரின் உதவியுடன் மொழி பெயர்க்கப்பட்டமை.

**26. நீர்வள நாகரிக காலத்தில் பௌத்த சமயம் தொடர்பான கருத்து வேறுபாடுகள்.**

i) வலகம்பாகு மன்னன் தனக்கு உதவிய குப்பிகலதிஸ்ஸ தேரருக்கு அபயகிரி விகாரையை தனிப்பட்ட தானமாக வழங்கியதால் மகாவிகாரையிலிருந்து தேரர் வெளியேற்றப்பட்டமையானது பௌத்த சமயத்தில் "நிகாய" எனும் பிரிவுகள் தோன்றுவதற்கு காரணமாகின.

ii) வோஹாரிக திஸ்ஸ மன்னனின் ஆட்சிக் காலத்தில் வைதுல்யவாதி எனும் சமயப்பிரிவு பற்றிய சர்ச்சை எழுந்ததாக மகாவம்சம் குறிப் பிடுகிறது.

iii) கோதாபய மன்னன் வைதுஸ்யவாதி பிக்குமாரை நாட்டை விட்டு வெளியேற்றினான். இதனால் தேரவாத பௌத்த சமயத்திற்கு அரச அனுசரணை கிடைத்திருந்தது.

iv) ஆயினும் மகாசேனன் காலத்தில் மீண்டும் வைதுல்யவாதம் தலைதூக்கியது. ஏனெனில் சோழ நாட்டிலிருந்து வந்த சங்கமித்திர தேரரின் தூண்டுதலினால் மகாவிகாரைக்கு எதிராக நடிவடிக்கையை மகாசேனன் மேற்கொண்டான்.

v) மகாசேன மன்னனின் இச் செயற்பாடுகளினால் மகாயான கருத்துக்கள்

பரவின. அத்துடன் ஜேத்தவனராம விகாரையும் தேரவாதக் கருத்துக்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தன.

vi) மகாயான பௌத்த சமயப்பிரிவினரின் நம்பிக்கை கொள்ளும் அவலோகிதேஸ்வர போதிசத்துவரின் உருவம், குஸ்டராஜகல, புதுறுவகல எனுமிடங்களில் கண்டுபிடிக்கப்பட்டமை. மகாயான பௌத்தத்தின் கருத்துக்கள் பரவியதைக் காட்டுகிறது.

vii) பொலன்னறுவை காலத்தில் 1ஆம் பராக்கிரமபாகு மன்னன் திம்புலாகல மகாகாசியப்பதேரர் தலைமையில் நீதிமன்ற சபையை அமைத்து மூன்று நிகாயாக்களையும் (மகாவிகாரை, அபயகிரிவிகாரை, ஜேதவனராம விகாரை) கி.பி.1165இல் ஒற்றுமைப் படுத்தினான். அத்துடன் ஒழுக்கமற்ற பிக்குமாரின் காவியுடை களையப்பட்டு அவர்களுக்கு அரசதுறையில் பதவிகள் வழங்கப் பட்டது.

viii) பௌத்த சமயப் பிரிவுகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்ட பின்னர் பௌத்தபிக்குகள் கடைப்பிடிக்க வேண்டிய சட்ட திட்டங்கள் "பொலன்னறுவ கதிகாவத" எனும் ஒழுக்கநெறிக் கோவையாக கல்விகாரையில் ஒரு கல்வெட்டாகப் பொறிக்கப் பட்டது.

**27. நீர்வள நாகரிகத்தில் இந்து சமயம்**

i) இலங்கையில் பௌத்த சமயம் அறிமுகப்படுத்தப்பட முன்னர் மக்கள் கற்கள், மரங்களை வணங்கி வந்தவுடன் நெருப்பு, மழை, காற்று முதலிய இயற்கைப் பொருட்களுக்கு பூஜைகள் செய்தனர்.

ii) பேய்களையும், நாகத்தை வழிபடும் முறை காணப்பட்டது.

iii) மகிந்ததேரர் இலங்கைக்கு வந்த காலத்தில் பிராமணசமயம் (பிரமன், இந்திரன், சூரியன் போன்றவற்றை வழிபடுதல்) காணப்பட்டதுடன் வைரவர், சமன் கடவுள்களுக்கும் பூஜைகள் மேற்கொள்ளப்பட்டது.

iv) பண்டுகாபயன், வலகம்பாகு, மகாசேனன் போன்ற மன்னர்களின் காலத்தில் பிராமணிய சமயம் காணப்பட்டமை தொடர்பான தகவல்கள் கிடைத்துள்ளது.

v) குடியேற்றக் குழுவினராகவும் ஆக்கிரமிப்பாளராகவும் இலங்கைக்கு அடிக்கடி வந்த இந்தியர்கள் கரையோரத் துறைமுகப் பகுதிகளில் இந்து கோயில்களைக் கட்டினர் என நம்பப்படுகிறது.
உ+ம்: மகாசேனன் சிவிகசாலா என்ற சிவலிங்க கோயிலை கோகன்ன எனுமிடத்தில் இடிப்பித்தான் என மகாவம்சம் கூறுகிறது.

vi) H.C.P பெல் அநுராதபுரத்தில் மேற்கொண்ட அகழ்வுகளின் போது சிவலிங்க கோயில்களின் இடிபாடுகள் கண்டுபிடிக்கப் பட்டமை.

vii) விஜயனின் வருகைக்கு முன்னரேயே ஐந்து ஈஸ்வரங்கள் இருந்ததாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். குறிப்பாக மன்னார் திருக்கேதீஸ் வரம், திருகோணமலை திருக்கோணேஸ்வரம் போன்ற சிவ தலங்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பிரசித்திபெற்று விளங்கியது.

viii) பொலன்னறுவை சோழராதிக்கத்தின் கீழ் வந்த பின்னர் அங்கு பல சிவாலயங்கள் கட்டப்பட்டன.

உ+ம்: இல. 1, இல. 2, சிவன்கோயில்கள்.

ix) பொலன்னறுவைக் கால சந்திரவட்டக் கல்லில் எருதின் உருவம் நீக்கப்பட்டமையானது இந்து சமயத்தின் செல்வாக்கை எடுத்துக் காட்டுகிறது.

x) பொலன்னறுவைக் காலத்தில் கண்டு பிடிக்கப்பட்ட வெண்கலச் சிலைகள் சிவன், கணபதி, விஷ்ணு சிலைகளும் இந்து சமய செல்வாக்கை எடுத்துக் காட்டுகிறது.

**28.நீர்வள நாகரீகத்தில் இஸ்லாம் மதம்.**

i) கி.பி 9ம் நூற்றாண்டின் பின்னரே இஸ்லாம் மதம் தொடர்பான தகவல்கள் கிடைத்திருக்கின்றது.

ii) கி.பி 850ல் சுலைமான் என்ற வர்த்தகர் ஆதாமின் மலைக்கு ஏறியமை இப்னுஅபூபக்கர் என்ற முஸ்லிம் மதகுரு கி.பி 948ல் இங்கு வசித்ததாகவும் நம்பப்படுகிறது.

iii) 12ம், 13ம் நூற்றாண்டுகளில் கொழும்பு, பேருவளை, சிலாபம், மட்டக்களப்பு, வெலிகம, காலி துறைமுகங்களில் முஸ்லிம்களின் வர்த்தக ஆதிக்கம் நிலவியமை.

**29.நீர்வள நாகரீக கால மக்களின் வாழ்க்கை முறை.**

i) பௌத்த சமயம் மக்களிடையே சமாதான சகவாழ்வு ஏற்ப வழிசெய்தது. குறிப்பாக புத்தபெருமானின் போதனைகள் இதற்கு காரணமாகியது.

ii) அக்காலத்தில் நிலவிய விவசாயப் பொருளாதாரத்திற்கேற்ப வாழ்க்கைக் கோலம் அமைந்திருந்தது.

iii) பௌத்த சமயத்தின் பரவலுடன் சகல மக்களும் ஒரே தரத்தைச் சேர்ந்த பொதுச் சமூகமாகக் கருதப்பட்டதுடன் அங்கு பிக்கு, பிக்குணி, உபாசக (பக்தன்), உபாசிகா (பக்தை) எனும் பிரிவினர் காணப்பட்டனர்.

iv) அனுராதபுரக் காலத்தில் தந்தை வழிச் சமூக அமைப்பே காணப்பட்டது ஆயினும் பெண்களுக்கு சுயமாக செயற்படுவதற்கான சுதந்திரம் காணப்பட்டது.

v) புராதன சமூகத்தில் பல்வேறு விதமான சீவனோபாயக் கைத் தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன. விவசாயிகள், வியாபாரி கள், பொற்கொல்லர் எனத் தொழில் ரீதியாகக் காணப்பட்டனர்.

vi) பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனும் நான்கு சமூகப் பிரிவுமுறையில் வேணர், நேசாதர், இரதகாரர், புக்குசர், சண்டாளர் எனும் ஐந்துவகை சாதிகளைப் பற்றித் தகவல்கள் கிடைத்த போதிலும், பௌத்த மதத்தின் செல்வாக்கால் இந்தியா போன்று தீவிரசாதிப்பிரிவினை இங்கு காணப்படவில்லை.

vii) பொலன்னறுவைக் காலத்தில் சமூக அமைப்பு தென்னிந்தியச் செல்வாக்குக் காரணமாக பல வம்சங்களாகவும், குலங்களாகவும் பிரிந்து காணப்பட்டது.

viii) அரச வம்சம், பிராமணவம்சம், வர்த்தகசமூகம், விவசாய சமூகம் என நான்கு குலத்தினர் காணப்பட்டனர்.

ix) பொலன்னறுவைக் காலத்தில் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கைக் கோலம் மிகச்சிறப்பாகக் காணப்பட்டது.

x) இக் காலப்பகுதியில் பந்தாட்டம், நீர்விளையாட்டு, ஊஞ்சலாடு தல் முதலிய விளையாட்டுகள் காணப்பட்டதை இலக்கிய மூலாதாரங்கள் உறுதி செய்கின்றது.

xi) குருகுலம் அல்லது பிரிவெனா எனும் கல்வி நிலையங்கள் காணப்பட்டது. இங்கு பிக்குகள் உட்பட ஆண்பெண் இருபாலாரும் கல்வியறிவைப் பெற்றனர்.

xii) ஓய்வு நேரத்தில் மக்கள் கலைகள், இலக்கியங்கள் மீது கவனத்தைச் செலுத்தினர். எனவே புத்தசமயத்தையும் விவசாயத்தையும் கொண்ட கலாசார அமைப்பொன்று நீர்வளநாகரிகத்தில் தோன்றி வளர்ந்தது.

**30.நீர்வளநாகரிக கால கட்டிட கலை**

- இலங்கையில் பௌத்த சமயத்தின் பரவலுடன் கலைகளும் வளர்ச்சி கண்டன. குறிப்பாக கட்டிடக்கலையின் வளர்ச்சியை அவதானிக்கலாம்.

i) **விகாரைகள், தூபிமனைகள்,** கற்குகைகளிலும், வன ஆரணியங்களிலும் வாழ்ந்த பிக்குகளுக்கு ஆராமைகள் அமைத்து அர்ப்பணம் செய்யப்பட்டது. அத்துடன் பௌத்த மக்களின் வணக்க வழிபாட்டிற்காக விகாரைகளும் தூபிமனைகளும் அமைக்கப்பட்டது.

- விகாரைகளை கட்டும் போது உறுதிவாய்ந்ததும் பலம் வாய்ந்ததுமான அத்திவாரத்தை இடுதல், கோளவடிவிலான கோளாகாரகர்ப்பத்தை (அண்டம்) அமைத்தல் போன்றவற்றில் உயரிய தொழிநுட்பம் கையாளப்பட்டது.
- விகாரையின் "வாகல்கட" எனும் பகுதி மிகவும் அழகான செதுக்கல் வேலைப்பாடுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன.

ii) **வட்டதாதுமனை (வட்டதாகெய)**

- சிறிய விகாரைகளைச் சுற்றி தூண்களை எழுப்பி வட்ட வடிவிலான கூரையை அமைத்து உருவாக்கப்படும் கட்டிடங்களே தூபிமனை அல்லது வட்டதாதுமனை ஆகும்.
  உ+ம்: தூபராம, மெதிரிகிரிய வட்டதாது மனைகள்
- இங்கு தூண்கள் கருங்கல்லினால் அல்லது மரத்தினால் ஆனதுடன் செதுக்கல் வேலைகளினால் அலங்கரிக்கப் பட்டுள்ளது.

iii.) ஆராமைக் கட்டடங்கள்

- பௌத்த பிக்குகள் வசிப்பதற்காக ஆராமைகள் அமைக்கப் பட்டன. அனுராதபுரத்தில் காணப்படும் மகாவிகாரை, அபயகிரி விகாரை, ஜேத்தவனராம கட்டிடத் தொகுதிகள் சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும்.
- துட்டகைமுனு மன்னன் "லோவமகாபாய" எனும் ஒன்பது மாடிகளைக் கொண்ட ஆயிரங்கால் மண்டபத்தைக் கட்டி அதனைப் பிக்குமார் வசிப்பதற்காக அர்ப்பணஞ் செய்தமை.

iv) போயமனை, போதிமனை, தானசாலை, தியான மண்டபம், மருத்துவசாலை என்பனவும் கட்டிடக் கலையின் சிறந்த படைப்புகளாகும்.


நிஸ்ஸங்கலதா மண்டபம் (பொலநறுவை)


ஜெதவனராம


ருவன்வெலிசாய


அபயகிரி

**31. நீர்வளநாகரிக கால செதுக்கல் கலை**

i) செதுக்கல் கலைப்படைப்புக்களுள் சந்திரவட்டக்கல், கொற வக்கல், காவற்கல் என்பன முக்கியம் பெறுகின்றன.

ii) **சந்திரவட்டக்கல்:** அரைவட்ட வடிவிலான கருங்கல்லில் செதுக் கப்பட்ட ஒரு படிவரிசையின் முதல் படிக்கல்லே சந்திரவட்டக் கல்லாகும். மலர்ந்த தாமரைப் பூவின் பாதி உருவம் நடுப்பகுதியில் செதுக்கப்பட்டுள்ளது. அதனைச் சுற்றிவர பூங்கொடி உருவமும் அடுத்ததாக அன்னப்பறவையின் வரிசையும் அடுத்ததாக சிங்கம், யானை, குதிரை, எருது, உருவங்களும் முடிவில் பூவிதழ் அல்லது தீச்சுடர் உருவமும் செதுக்கப்பட்டுள்ளது.

iii) இசுறு முனிய விகாரையில் காணப்படும் குதிரைத்தலையும் மனித உருவமும், இசுறுமுனிய காதற்சோடி, நீராடும் யானைகள் என்பன அப்போதைய செதுக்கல் கலைப்படைப்பின் உயர் தரத்தினை வெளிப்படுத்துகின்றது.

iv) **புத்தர்சிலைகள்:** அனுராதபுர காலத்திற்குரிய புத்தர்சிலைகளுள் அதிகளவானவை அமர்ந்த நிலையிலுள்ள தியானச் சிலைகளாகும். இதற்கு சிறந்த எடுத்துக்காட்டாக அனுராதபுர குட்டம் பொக்குன எனும் இரட்டைத் தடாகத்தின் அருகே காணப்படும் சமாதி புத்தர்சிலையை குறிப்பிடலாம்.

v) கலாவாவிக்கு அண்மையில் காணப்படும் அவுக்கண சிலை, பொலன்னறுவை கல்விகாரையில் காணப்படும் சயனச்சிலை மற்றும் சஸ்ஸேறுவ, புதுறுவகல, மாளிகாவில முதலிய இடங்களில் காணப்படும் புத்தர்சிலைகளும் சிறந்த அக்கால கலைப் படைப்புகளாகும்.


கல்விகாரை புத்தர் சிலைகள்


அவுக்கண நிற்கும் புத்தர்சிலை

## 32. பொலன்னறுவைக் கால கட்டிடக்கலை

i) இந்துசமயக் கட்டடக்கலை பற்றிய தகவல்களும் காணப்படு கின்றன. குறிப்பாக சோழர்கால கட்டிடக்கலை பண்புகளுடன் கட்டப்பட்ட சிவாலயங்களை இன்னும் பொலன்னறுவையில் காணமுடிகின்றது.

ii) பொலன்னறுவையில் நிர்மாணிக்கப்பட்ட நிஸ்ஸங்கலதா மண்ட பம் மிகவும் சிரேஷ்டமானதொரு கலைப்படைப்பாகும்.

iii) பொலன்னறுவையில் காணப்படும் "சத்மஹல்பிரசாதய" எனும் ஏழடுக்கு மாளிகையும் சிறந்ததொரு கட்டிடக்கலைப் படைப் பாகும்

iv) பொலன்னறுவையில் காணப்படும் "நெலும் பொகுன" எனும் தாமரை வடிவிலான தடாகங்கள் சிறந்த நகர நிர்மானம் ஆகும்.


குட்டம் பொய்கை (அனுராதபுரம்)


சிவன்கோவில் (பொலநறுவை)


சத்மஹல்பிரசாதய


நெலும் பொகுன

**33. நீர்வளநாகரிக கால ஓவியக் கலை முக்கிய அம்சங்கள்**

i) இலங்கையின் ஓவியங்களில் சிகிரியா ஓவியங்கள் உலகப்புகழ் பெற்றவையாகும். கி.பி 5ஆம் நூற்றாண்டுக்குரிய இவ் ஓவியங்கள் சிகிரியாக் குன்றின் குழிவான சுவர்களில் அழகிய பெண்களின் உருவங்கள் வரையப்பட்டுள்ளது. இவை இந்தியாவின் குப்தர் காலத்துக்குரிய அஜந்தா குகை ஓவியங்களை பெரிதும் தழுவிய தாகக் காணப்படுகிறது.

ii) பொலன்னறுவைக் காலத்துக்குரிய ஓவியங்களை லங்காதிலக சிலைமனை, திவங்க சிலைமனை என்பவற்றில் காணலாம். அத்துடன் கல்விகாரையின் வித்தியாதரக் குகை ஓவியங்களும் பொலன்னறுவ ஓவியக்கலையின் வளர்ச்சியை வெளிப்படுத்து கிறது.

**34. நீர்வள நாகரிககால கல்விநிலை**

i) நீர்வள நாகரிக காலத்தில் கல்விநிலையானது மிகவும் உயர் மட்டத்தில் காணப்பட்டது.

ii) பிள்ளைகள் கல்வியைப் பெறுவதற்கு குருகுலத்திற்கு அல்லது கல்விநிலையமொன்றுக்கு அனுப்பப்பட்டனர். கல்வி நிலையங்களாக பன்சலைகள், பிரிவெனாக்கள் காணப்பட்டன.

iii) துறவு நிலை மாணக்கருக்குப் போலவே பொது மாணாக்கரும் கல்வி கற்பதற்கான வாய்ப்புகள் காணப்பட்டது.

iv) கற்றல் முறைகளாக ஆசிரியர் சொல்வதை செவிமடுத்தல் மற்றும் மனனம் செய்தல் என்பன காணப்பட்டது.

v) கணிதம், தர்க்கவியல், இலக்கணம், வானியல், வில்வித்தை என்பன பாளி, சமஸ்கிருதம், சிங்களம் போன்ற மொழிகளில் போதிக்கப் பட்டது.

**35. நீர்வள நாகரிக காலத்தில் மொழியும் இலக்கியமும்**

- பாளி இலக்கியம், சமஸ்கிருத இலக்கியம், சிங்கள இலக்கியம் என்பன நீர்வள நாகரிக காலத்தில் முக்கியத்துவம் பெற்றுக் காணப்பட்டன.

**i) பாளி இலக்கியங்கள்:**

- புத்த கோசரால் "ஹெல" மொழியில் எழுதப்பட்ட "அட்டுவா" எனும் நூல் பாளி மொழியில் மொழிபெயர்க் கப்பட்டது.
- புத்தகோசருடன் இணைந்து பலபண்டிதர்களால் எழுதப்பட்ட "அட்டகதா" எனும் இலக்கியம் முக்கியமானது.
- விசுத்திமார்க்கய, சமந்த பாசதிக நூல்கள் அட்டகதா மற்றும் திரிபிடகம் எனும் பௌத்த நூல்களைத் தழுவி பாளி மொழியில் எழுந்தவை ஆகும்.

**ii) சமஸ்கிருத இலக்கியம்**

- சாரார்த்த சங்கிரஹ, ஜானகிஹரண என்பன முக்கியமான சமஸ்கிருத நூல்களாகும்.
- 4ஆம் சேனமன்னால் எழுதப்பட்ட "சியபஸ்லகர" அனுராதபுர காலத்தில் எழுதப்பட்ட முக்கியமான சமஸ்கிருத நூலா கும்.

**iii) சிங்கள இலக்கியங்கள்**

- பௌத்த சமயம் இலங்கைக்குக் கொண்டு வரப்பட்ட பின்னர் அதனை சிங்கள மக்களுக்கு இலகுவாகப் புரியவைப்பதற்காக "ஹெலட்டுவா" எனும் பெயரில் பல நூல்கள் எழுதப்பட்டன.
- மகாஅட்டுவா, மகாபச்சரி அட்டுவா, குறுந்தி அட்டுவா எனும் பெயரிலான இந்நூல்களை இன்று காணமுடியா துள்ளது.
- ஐந்தாம் காசியப்பனால் எழுதப்பட்ட "தம்பியா அட்டுவா கற்தபதய" எனும் நூல் தம்மபதக் கதைகளில் வரும் கடினமான வசனங்களுக்கு சிங்களத்தில் எழுதப்பட்ட விளக்கவுரை யாகும்.

- முதலாம் அக்போ மன்னனின் காலத்தில் 12 மகாகவிகள் வாழ்ந்ததாக நிகாய சங்கிரஹய எனும் நூல் குறிப்பிடுகிறது.
- பொலன்னறுவைக் காலத்தில் எழுதப்பட்ட சசந்தாவத, முவதெவ்தாவத, அமாவதுற, புத்சரண, சிங்கள தூபவம்சம் எனும் சிங்கள நூல்கள் எழுதப்பட்டன.
- பொலன்னறுவைக் காலத்தில் புகழடைந்த இலக்கியமாக உரைநடை இலக்கியமான "சன்ன" எனும் இலக்கிய வடிவம் காணப்பட்டது. உ+ம்: அபிதம்மத்த சங்கிரஹ சன்னய, மேகதூதசன்னய, ஜானகிஹரண சன்னய, சசந்தா சன்னய,
- பொலன்னறுவைக் காலத்தில் "கற்றபதய" எனும் விளக்கவுரை நூல்களும் எழுதப்பட்டமை
  உ+ம்: மகாபோதிவஸ்ச கற்றபதய, ஜாதக அட்டுவா கற்றபதய

**வெளிநாட்டுத் தொடர்புகள்**

**36.நீர்வளநாகரிக காலத்தில் வெளிநாடுகளுடன் தொடர்புகளை மேற்கொள்வதில் அமைவிடத்தின் செல்வாக்கு.**

i) கீழைத்தேச, மேலைத்தேச கடல்மார்க்க பட்டுப்பாதையின் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த இடத்தில் இலங்கை அமைந்திருந்தமை.

ii) தென்மேல், வடகீழ் காற்றுக்குரிய நீரோட்டங்களுக்கு அருகில் இலங்கை அமைந்திருந்தமை

iii) இலங்கையைச் சுற்றிவர அமைந்திருந்த இயற்கைத் துறைமுகங்கள்

iv) இந்தியாவுக்கு மிக அருகில் ஆனால் இந்தியாவிலிருந்து கடலால் பிரிக்கப்பட்டு தனித்துவமாகக் காணப்பட்டமை.

**37.வெளிநாட்டுத் தொடர்புகள்**

**1. அரசியல் தொடர்புகள்**

i) குடிப்பெயர்வு → விஜயனும் அவனது பரிவாரத்தினரும் வருகை
→ பண்டுவாசுதேவன் பரிவாரத்தினதும் வருகை

ii) ஆக்கிரமிப்பு → பூலகத்த உட்பட ஏழு தமிழரின் ஆக்கிரமிப்பு
→ பண்டுவும் அவனது ஐந்து பிள்ளைகளது ஆக்கிரமிப்பு

iii) திருமணம் → விஜயன் மதுராபுரி இளவரசியை அழைத்தமை
→ பண்டுவாசுதேவன் பத்தகச்சானாவை அழைத்தமை

iv) நட்பு → அசோகன் தேவநம்பியதிஸ்ஸனது நட்பு
→ உரோம்குளோடியஸ் மன்னனும் பாதிகாபயனது நட்பு

v) அரசியல் உதவி → அபயநாகன் தமிழ் மன்னர்களிடம் உதவி பெறல்
→ முதலாம் முகலன் தென்னிந்திய உதவி பெறல்

**உ. கலாசாரத் தொடர்பு**

i) பௌத்தம் → பௌத்த மதம் அறிமுகமாகுதல்
→ பிக்குகள் பிக்குனி சாசனம் அமைக்கப் பட்டடல்

ii) இந்து → சோழர் காலத்தில் இந்துமதக் கோயில்கள் பொலன்னறுவையில் அமைக்கப்பட்டமை

iii) இஸ்லாம் → அரேபியருடனான வணிகத் தொடர்புகளால் அவர்களது மதம் இலங்கையில் பரவுதல்

iv.) சிற்பம் → குப்தகலைமரபு, அமராவதி கலைமரபுகள் பரவுதல்
(செதுக்கல்) → அவுக்கணபுத்தர்சிலை

v) ஓவியம் → அஜந்தா ஓவியம் - சிகிரியா ஓவியம்

vi) எழுத்து → பிராமிய எழுத்துவடிவில் சிங்கள அரிச்சுவடி

**38. நீர்வள நாகரிகம் வீழ்ச்சியடைந்தமைக்கான காரணங்கள்.**

- ஏறத்தாழப் பதினைந்து நூற்றாண்டுகளாக நிலவிய நீர்வள நாகரிகம் (ராஜரட்டை நாகரிகம்) சீரழிந்தமையில் செல்வாக்குச் செலுத்திய காரணிகள் வருமாறு.
  i) மையப்படுத்தப்பட்ட ஆட்சிமுறை பலவீனமடைந்தமை.
  ii) முதலாம் பராக்கிரமபாகுவின் வெளிநாட்டுப் படையெடுப்புக்கள்.
  iii) கி.பி 1215ல் மாகனின் படையெடுப்பு காரணமாக நீர்வளநாகரிகம் முற்றுமுழுதாக அழிவடைந்தது.
  iv) அரசுரிமை பற்றிய பிணக்குகளால் நீர்ப்பாசன திட்டங்களை ஒழுங்கு படுத்த முடியாது போனமை.
  v) இராசரட்டை மக்கள் தென்மேற்கு நோக்கி இடம் பெயர்ந்தமை.

# 5 13ஆம் நூற்றாண்டு தொடக்கம் 15ஆம் நூற்றாண்டு இறுதி வரை இலங்கை

**1. 13ம் நூற்றாண்டுமுன் இலங்கையின் அரசியல் வரலாறு**

i) இலங்கையின் முதலாவது தலைநகராக அநுராதபுரத்தை பண்டுகாபயன் அமைத்துக்கொண்டான்.

ii) கி.பி 993ல் சோழர் ஆக்கிரமிப்பை அடுத்துப் அநுராதபுர இராச்சியம் "ஜனநாதபுரம்" என்ற பெயரில் தலைநகர் பொலநறுவைக்கு கி.பி 1017ல் மாற்றப்பட்டது.

iii) கி.பி 1070ல் சோழரின் படையை வெற்றி கொண்ட "கீர்த்தி" என்பவன் 1ஆம் விஜயபாகு எனும் பெயருடன் ஆட்சிப்பீடம் ஏறி "விஜயராசபுரம்" என பொலநறுவைக்கு பெயரை மாற்றினான்.

iv) கி.பி 1215ல் கலிங்க மாகன் "பராக்கிரமபாண்டியனை" தோற்கடித்து அரசை கைப்பற்றியதை தொடர்ந்து பொலநறுவை இராச்சியம் வீழச்சியடைந்தது.

v) அதனை மீண்டும் கட்டியெழுப்பக்கூடிய அளவுக்கு துணிச்சலான தலைமைத்துவம் இல்லாததால் பிராந்திய ரீதியில் சில தலைவர்கள் குன்றுகளின் உச்சிகளில் கோட்டைகளை அமைத்து மக்களையும், பௌத்த சமயத்தையும் பாதுகாப்பதற்கு முயற்சித்தனர்.

vi) இவ்விதம் கிழக்கே கோவிந்தகல, சுபபவ்த(யாப்பகுவ), மினிப்பே, தம்பதெனியபர்வத பிரதேசத்தில் கோட்டைகளை அமைத்து பிராந்திய ஆட்சி இடம் பெறுகையில் வன்னியில் பலமான பிரதேச ஆட்சி இடம்பெற்றுவந்தது.

vii) மாகனின் கொடுங்கோல் ஆட்சியினால் இராசரட்டை சிங்கள மக்கள் தென் மேற்கு நோக்கி இராசதானிகளை காலத்துக்கு காலம் அமைத்த போது வடக்கே பலமான தமிழரசு ஒன்று ஆரம்பமாகிறது.

**2. தென்மேற்கே அமைந்த பிராந்திய அரசுகள்**

- பொலன்னறுவையின் வீழ்ச்சிக்குப் பின்னர் பாதுகாப்பு பிர தேசங்களைத் தேடிச் சென்றவர்கள் இயற்கை அரண்களால் சூழப்பட்ட பிரதேசங்களை நிர்வாக மையங்களாகத் தெரிவு செய்தனர்.

i. யாப்பகூவ - சுபதளபதி

ii. கோவிந்தமலை - புவனேகபாகு

iii. மினிப்பே - சங்கதளபதி

iv. தம்பதெனிய - மூன்றாம் விஜயபாகு

3. **நாகரிகம் தெற்மேற்கு திசை நோக்கி இடம்பெயர்ந்தமைக்குரிய காரணம். (பொலன்னறுவை ஆட்சியின் வீழ்ச்சிக்கு வழிகோலிய காரணங்கள்)**

i) கி.பி. 1215இல் கலிங்க மாகனின் படையெடுப்பு.

ii) பலவீனமுள்ள ஆட்சியாளர்கள் தோன்றியமை.

iii) அரசுரிமையில் பிணக்குகள் ஏற்பட்டமை (கலிங்க-பாண்டிய வம்ச பிரச்சினைகள்)

iv) இராசரட்டை நாகரிகத்தின் வளர்ச்சி க்கு அத்திவாரமாக இருந்த நீர்ப்பா சன நாகரிகம் சிதைவுற்றமை

v) பொருளாதாரத்தின் வீழ்ச்சி

vi) காடுகள் தோற்றம் பெற்றதுடன் இராசரட்டைப் பகுதியில் மலேரியா நோய் பரவியமை.

4. **புராதன தலைநகர்களும் தலைநகராக்கிய மன்னர்களும்.**

i) அநுராதபுரம் - பண்டுகாபயன்.

ii) பொலநறுவை - 1ஆம் விஜயபாகு

iii) தம்பதெனியா - 3ஆம் விஜயபாகு

iv) யாப்பகூவா - 1ஆம் புவனேகபாகு.

v) குருநாகல் - 2ஆம் புவனேகபாகு.

vi) கம்பளை - 4ஆம் புவனேகபாகு.

vii) கோட்டை -6ஆம் பராக்கிரமபாகு.




5. **தம்பதெனிய இராச்சியம்: முக்கிய அம்சங்கள்.**

i) தென்மேற்கில் அமைந்த முதலாவது இராச்சியம் ஆகும்.

ii) பிரதேசத் தலைவனாக உருவாகிய 3ஆம் விஜயபாகுவே இதன் முதல் மன்னன் ஆவான்.

iii) இவ் இராச்சிய மன்னர்கள் பின்வருமாறு.

1) 3ஆம் விஜயபாகு. 2) 2ஆம் பராக்கிரமபாகு.

3) 4ஆம் விஜயபாகு. 4) 1ஆம் புவனேகபாகு.

6. **3ஆம் விஜயபாகு (கி.பி 1232- 1236)**

i) சிவனொளிபாத காடுகளில் வசித்த தம்பதெனியாவை சேர்ந்த விஜயபாகு மக்களின் ஆதரவைப் பெற்று கி.பி 1232ல் மாயரட்டையில் தம்பதெனியாவை தலைநகராக்கி தம்பதெனியா குன்றில் இராச்சியத்தை அமைத்தான்.

ii) 3ஆம் விஜயபாகு வன்னியரசர்களை வெற்றி கொண்டதால் "வன்னிராஜா" என அழைக்கப்பட்டான்.

iii) மாயரட்டையின் பிராந்தியத் தலைவர்களைப் பணிய வைத்து "ஜம்புதோனி" எனப்பட்ட தம்பதெனியாவை தலைநகராக்கி னான்.

iv) பணிகள்

- பெலிகலையில் தலதா மாளிகையை அமைத்தமை
- பாதுகாப்புத் தேடி வெளியூர்களுக்குச் சென்ற பிக்குகளை மீள அழைத்தமை.
- தம்பதெனியாவில் விஜய சுந்தர ராமய என்ற பெயரில் விகாரை ஒன்றை அமைத்தமை
- உபசம்பதா சடங்குகளை மீண்டும் நடத்தி பௌத்த பிக்குகள் சங்கத்தில் சீர்திருத்தத்தை மேற்கொண்டமை
- களனி விகாரையை மறுசீரமைத்தமை
- பண்டைய பௌத்த நூல்களை மீண்டும் எழுதுவித்தமை
- வத்தளையில் விஜயபாகு விகாரையை அமைத்தமை

v) 3ஆம் விஜயபாகுவின் 4வருடகால ஆட்சியின் பின்னர் மகன் 2ஆம் பராக்கிரமபாகு தம்பதெனியாவை ஆட்சி செய்தான்.

**7. 2ஆம்பாரக்கிரமபாகு (கி.பி 1236 - 1270).**

i) 3ஆம் விஜயபாகுவின் மூத்த மகனாக இவன் தந்தை இறக்க 2ஆம் பராக்கிரமபாகு என்ற பெயருடன் ஆட்சிப்பீடம் ஏறினான்.

ii) பெலிகலையில் இருந்த தந்ததாதுவை தம்பதெனியாவில் பிரதிஷ்டை செய்து உன்னதமான தலதா வழிபாட்டை மேற்கொண்டு மாகனிட மிருந்து நாட்டை மீட்பதாக மக்கள் முன்னனியில் சத்தியப்பிரமானம் செய்தான்.

iii) இவன் மூன்று ஆக்கிரமிப்புகளுக்கு முகம் கொடுத்தான்

1. மாகனுடன் நடந்த யுத்தம்
2. சந்திரபானுவின் முதலாவது படையெடுப்பு
3. சந்திரபானுவின் இரண்டாவது படையெடுப்பு

iv) மலாயாவிலிருந்து படையெடுத்து வந்த சந்திரபானுவினது முதலா வது படையெடுப்பை தனது மருமகனான வீரபாகு இளவரசனை போருக்கு அனுப்பி கி.பி. 1247இல் தோற்கடித்தான்.

v. தென்னிந்தியாவிலிருந்த பாண்டிய மன்னனுடைய உதவியைப் பெற்று கி.பி 1255இல் கலிங்கமாகனை பொலனறுவையிலிருந்து விரட்டினான்.

vi. சந்திரபானு இரண்டாவது தடவை படையெடுத்து வந்தபோது பாண்டிய மன்னனின் உதவியைப் பெற்று கி.பி. 1261இல் சந்திரபானுவை கொன்றான். இதற்குக் கைமாறாக பாண்டிய அரசன் ஜாவகனின் மகனை வட இலங்கையின் பிரதிநிதியாக நியமித்தான் என கல்வெட்டுகள் கூறுகின்றன.

vii. பணிகள்

- பிக்குகளின் விகாரை நிர்வாகத்தை நெறிப்படுத்தவென "தம்பதெனிய கதிகாவத" என்ற நூலை எழுதவித்தமை
- உபசம்பதா சடங்கினை நடாத்தியமை
- வெளிநாடுகளிலிருந்து (சோழ நாட்டிலிருந்து) ஒழுக்க தர்மமுடைய பிக்குகளை அழைப்பித்தமை.
- கவிசிலுமின, விசுத்த மார்க்க சன்னய ஆகிய நூல்களை எழுதியமை

viii. மொழி, சமயம் தொடர்பான பாண்டித்தியத்தினால் "கலிகால சாகித்திய சர்வக்ஞ பண்டித" என்ற பட்டப்பெயரைப் பெற்றான்

**8. 4ஆம் விஜயபாகு (கி.பி 1270 - 1272).**

I இரண்டாம் பராக்கிரமபாகுவின் மகன் போசத் விஜயபாகு 4ஆம் விஜயபாகு என்ற பெயரில் கி. பி. 1271இல் அரசனானான்.

ii) தந்தையின் காலத்தில் அநுராதபுர, பொலநறுவைப் பகுதியில் புனரமைப்பு பணியில் ஈடுபட்டான்.

iii) தந்தையின் காலத்தில் பொலனறுவை தலதா மாளிகைக்கு புனித தந்ததாதுவை கொண்டு வந்தான்.

iv) தனது தந்தையின் முடிசூட்டு வைபவத்தை நடாத்தினான்.

v) தந்தை இறக்க அரசனான இவன் "மித்திரன்" என்ற தளபதியால் கி.பி 1272ல் கொலை செய்யப்பட்டான்.

**9. யாப்பகூவா இராச்சியம்: முக்கிய அம்சங்கள்.**

i) குருணாகல் மாவட்டத்திலுள்ள எச்சக் குன்றான யாப்கூவாவை 1ஆம் புவனேகபாகு தலை நகராக்கினான். இதற்கான காரணங்கள்,

- இயற்கை பாதுகாப்புடைதாக விளங்கி யமை.
- மாகனுடைய ஆக்கிரமிப்புக்கு பின் பாதுகாப்பான இடங்களை தேடிய சிங்களவருக்கு பாதுகாப்பானதாக இருந்தமை.
- வடபகுதி ஆட்சியாளர்களின் அச்சுறுத்தலுக்கும், வன்னி தலைவர்களின் கிளர்ச்சிகளுக்கும் பாதுகாப்பாக இருந்தமை.

ii) கலிங்க மாகனின் காலத்தில் சுப என்ற சேனைத்தலைவன் பாதுகாப்பு கருதி இக்குன்றில்


(யாப்பகூவா)

கோட்டையை அமைத்ததால் "சுபபவ்வத" என்ற பெயரில் அழைக்கப்பட்டது.

iii) போசத் விஜயபாகுவிற்கு பக்கபலமாக இருந்த வன்னிய தலைவர்களிடமிருந்தும் வடக்கின் ஆட்சியாளர்களிடமிருந்தும் வந்த அச்சுறுத்தல்களை இலகுவாக முறியடித்தான்.

iv) கி.பி 1284ல் குலசேகர பாண்டியனின் அமைச்சரான ஆரியச்சக்கரவர்த்தி 1ஆம்புவனேகபாகுவை தோற்கடித்து புனித தந்ததாதுவை தனது நாட்டுக்கு அபகரித்துசென்றமை இவ்ராச்சியத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தது.

---

- புவனேகபாகுவின் சகோதரன் 3ஆம் பராக்கிரமபாகு (கி.பி 1287 - 1293) பாண்டிய மன்னனுடன் நட்புறவை ஏற்படுத்தி புனித தந்ததாதுவை இந்நாட்டுக்குக் கொண்டு வந்து பொலநறுவையை சிறிது காலம் இராசதானியாகக் கொண்டிருந்தான்.
- இக்காலத்தில் 1ஆம் புவனேகபாகுவின் மகனாக 2ஆம் புவனேகபாகு புனித தந்ததாதுவையும், பாத்திர தாதுவையும் அபகரித்துச் சென்று சிறிது காலம் யாப்பகூவவில் ஆட்சி செய்ததைத் தொடர்ந்து குருணாகலை இராசதானியாக்கினான்.

---

**10. குருணாகல் இராசதானி: முக்கிய அம்சங்கள்.**

i) 1ஆம் புவனேகபாகுவின் மகனான 2ம் புவனேகபாகு கி.பி 1300ம் ஆண்டளவில் குருணாகலையிலுள்ள அத்துகல்புரத்தை இராசதானியாக்கினான்.

ii) 2ஆம் புவனேகபாகு (கி.பி 1293-1302) இறக்க அவன் மகன் 4ஆம் பராக்கிரமபாகு ஆட்சிக்கு வந்தான்.

**11. 4ஆம் பராக்கிரமபாகு (கி.பி 1302-1326).**

i) 2ஆம் புவனேகபாகுவின் மகனான இவன் "பண்டிதபராக்கிரமபாகு" என அழைக்கப்பட்டான்.

ii) இலங்கை வரலாற்றில் சிரேஸ்ட அரசனாகக் கருதப்பட்டான் ஏனெனில் கல்வி கற்ற ஓர் அறிஞனாகவும், தலைசிறந்த நிர்வாகியாகவும் திகழ்ந்தான்.

iii) 4ஆம் பராக்கிரமபாகு மன்னனின் பணிகள் வருமாறு
- குருணாகலில் தலதா மாளிகை அமைத்து புனிததந்ததாதுவை பிரதிட்டை செய்து பூஜை செய்தான். பூஜை நடாத்தும் விதத்தை விளக்க "தலதாசரித" என்ற நூலை எழுதினான்.
- தலதா மாளிகையின் பராமரிப்புக்காக கிராமங்களை (நிலங்களை) நன் கொடையாக வழங்கினான்.
- ஜாத கட்ட கத்தாவ என்ற பாளிநூல் இவனின் உதவியுடன் "பன்சியபணஸ்ஜாதகய" (ஐந்நூற்றைம்பது ஜாதகக்கதைகள்) என சிங்கள மொழியில் பெயர்க்கப்பட்டது.

- பிரசித்தி பெற்ற பிரிவேனாக்களுக்கு அரச ஆதரவை வழங்கினான்.

உ-ம்: தொட்டகமுவ விஜயபாகு பிரிவேனா
விதாகம ஸ்ரீகனாநந்த பிரிவேனா

- கண்டி அஸ்கிரிய விகாரையை ஆரம்பித்தமை
- சிங்கள போதிவங்ச, அநாகத்த வங்ச ஆகிய நூல்களை எழுதியமை
- ஸ்ரீபராக்கிரமபாகு வில்கமுவ சங்கராஜ தேரர் பௌத்த சமயத்துக்கு ஆற்றிய சேவைக்கு அரச உதவி வழங்கினான்.

iv) இவனது இறுதிக்காலத்தில் போதிமாபாவின் கிளர்ச்சியினால் ஆட்சியினை இழந்தான்.

v) இவனுக்குப் பின்னர் 3ஆம் புவனேகபாகு, சவுலு விஜயபாகு (5ஆம் விஜயபாகு) ஆகிய அரசர்கள் ஆட்சி செய்ததாக குறிப்பிடப்படுகிறது.

**12. யாழ்ப்பாண இராசதானி: முக்கிய அம்சங்கள்.**

i) 12ஆம் நூற்றாண்டின் இறுதி தசாப்தத்தில் தோன்றியது.

ii) வடக்கில் தனியான ஆட்சிக்கு அத்திவாரம் இட்டவன் சந்திரபாகு ஆவான் என செனரத் பரணவிதாரன குறிப்பிடுகிறார்.

iii) மார்க்கோபோலோ என்பவரின் அறிக்கையின்படியும் சந்திரபாகு வட இலங்கையில் ஆட்சி செய்துள்ளான் பின்னர் இந்தியாவின் இராமேஷ் வரத்திலிருந்து வந்த ஆரியச்சக்கரவர்த்தி பரம்பரைகள் யாழ்ப் பாணத்தைக் கைப்பற்றினர்.

iv) யாழ்ப்பாண இராச்சியம் தொடர்பான தகவல்களை அறிய உதவும் மூலாதாரங்கள் வருமாறு

1. யாழ்ப்பாண வைபவமாலை
2. செகரராஜசேகர மாலை
3. வையா பாடல்கள்
4. தேசசஞ்சாரிகளது அறிக்கைகள்

v) ஆரியச் சக்கரவர்த்தி பரம்பரையில் 12 முக்கிய மன்னர்கள் ஆட்சி செய்ததாக யாழ்ப்பாண வைபவமாலை குறிப்பிடுகிறது.

1. விஜய கூழங்கை
2. குலசேகர ஆரியன்
3. விக்கிரமசிங்க ஆரியன்
4. வரோதயன்
5. மார்த்தாண்டன்
6. குணபூசணன்
7. விரோதயன்
8. ஜயவீரன்
9. குணவீரன்
10. கனகசூரியன்
11. பரராஜசேகரன்
12. சங்கிலி

vi. வரோதய மன்னன் தமிழர்கள், சிங்களவர்கள் இடையே நல்லுற வுடன் செயற்பட்டு மக்கள் மத்தியில் பிரசித்தி பெற்றிருந்தான்.

vii. கி.பி. 1347இல் கம்பளை இராசதானி காலத்தில் ஆரியச் சக்கர வர்த்திகள் இரண்டு சந்தர்ப்பங்களில் படையெடுத்ததாக "நிகாய சங்கிரய, ராஜாவலியா" என்ற நூல்களில் குறிப்பிடப் பட்டிருக் கின்றது.

viii. கி.பி. 1360களில் புத்தளத்திலிருந்து பாணாந்துறை வரையான கடற்கரையோரத் துறைமுகங்களை ஆரியச்சக்கரவர்த்திகள் தமது ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்தனர். ஆயினும் நிஸங்க அழகக் கோனரால் அப்பகுதிகள் மீட்கப்பட்டது.

ix. கி.பி 1390 இல் வடக்கின் தரைப்பகுதியினூடாகவும், மேற்கின் வத்தளை கொழும்பு வரையான கடல்வழியாகவும் ஆரியச்சக்கர வர்த்தியின் படைகள் முன்னேறிய போதும் கம்பளை அரசின் உதவியுடன் அழகக் கோனாரின் படைகள் தோற்கடித்தன.

x. 15ஆம் நூற்றாண்டு ஆரம்பமாகும் போது தென்னிந்தியாவின் விஜயநகரப் பேரரசின் கீழ் யாழ்ப்பாண இராச்சியம் இருந்ததாகக் கூறப்படுகிறது. குறிப்பாக விஜயநகரப் பேரரசன் 2ஆம் ஹரிகரனால் இலங்கையின் வடபகுதி கைப்பற்றப்பட்டதாக "ஆலம்புரி சாசனம்" குறிப்பிடுகிறது.

xi. விஜயநகர அரசின் உதவியுடன் யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்து கொண்டிருந்த ஆரியச் சக்கரவர்த்திகளுக்கு எதிராக கோட்டை மன்னன் 6ஆம் பராக்கிரமபாகு சப்புமல் குமார என்பனவை அனுப்பி கி.பி 1449இல் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றினான். இதனால் கனகசூரிய சிங்கன் தென்னிந்தியாவிற்குத் தப்பியோடினான்.

xii. கனகசூரியசிங்கை ஆரியன் மீண்டும் படையெடுத்துவந்து யாழ்ப்பாணத்தை வெற்றி, கொண்டான் என யாழ்ப்பாண வைபவ மாலை குறிப்பிடுகிறது.

xiii. கி.பி. 1621இல் சங்கிலி மன்னனை தோற்கடித்து போர்த்துக்கேயர் யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்றிக் கொண்டனர்.

**13. கம்பளை இராச்சியம்: முக்கிய அம்சங்கள்.**

i) 5ஆம்விஜயபாகுவின் மகன் 4ஆம் புவனேகபாகு கி.பி 1341ல் ஆட்சியை கைப்பற்றி தலை நகரை கம்பளைக்கு மாற்றினான்.

ii) கங்கசிறிபுர(கங்காசிறிபுர) என இவ்ராச்சியம் அழைக்கப்பட்டது.

iii) அநுராதபுர யுகத்திலிருந்து கம்பளை ஒரு முக்கிய குடியிருப்பாக இருந்ததாக கல்வெட்டுக்கள் கூறகின்றன.

iv) கம்பளையை இராசதானியாகத் தெரிவு செய்தமைக்கான காரணங்கள்

1. தலைநகராகுவதற்கு முன்பு உபநகரமாக விளங்கியமை
2. பல மலைகளால் சூழப்பட்ட சமவெளிப் பிரதேசத்தில் அமைந்திருந்தமை
3. சிவனொலிபாதமலைக்குச் செல்லும் சந்தியில் அமைந்திருந் தமை
4. மகாவலிகங்கைக் கரையில் அமைந்திருந்தமை

v) கம்பளை இராச்சிய மன்னர்கள்,

1. 4ஆம் புவனேகபாகு
2. 5ஆம் பராக்கிரமபாகு
3. 3ஆம் விக்கிரமபாகு
4. 5ம் புவனேகபாகு

## 14. 4ஆம் புவனேகபாகு(கி.பி 1341-1351)


இலங்காதிலக

i) கம்பளை முதல் மன்னனான இவனின் காலத்திலேயே(கி.பி1344) இபன்பதுதா என்ற அராபிய தேசசஞ்சாரி இலங்கை வந்ததாக கூறப்படுகிறது.

ii) திரிசிங்கள ஆதிஸ்வர (வட, தென், மத்திய) என தன்னை குறிப்பிட்ட போதிலும் வட பகுதி இவனது ஆட்சியின் கீழ் இருக்கவில்லை.

iii) வடபகுதி ஆரியச்சக்கரவர்த்தி பலம் பொருந்தியவனாக விளங்கிய தோடு சிலாபம் வரையிலான முத்து தலங்களை கைப்பற்ற முயற்சித்தமை.

iv) சிங்கள பிரதேசங்களில் காலத்துக்குக் காலம் அத்துமீறிய ஆரியச் சக்கரவர்த்தியின் படைகள் வரிகளை அறவிட்டமை.

v) சேனாதிலங்காரா செனவிரத் என்ற அமைச்சரின் அதிகாரம் இக்காலத்தில் நிலவியது இவ் அமைச்சரின் ஆதரவில் கம்பளையில் 1351ல் புத்த குருபீடம் புனரமைக்கப்பட்டது.

vi) இம் மன்னனின் ஆட்சியின் போது கடலாதெனிய, இலங்காதிலக விகாரைகள் அமைக்கப்பட்டது.

## 15. 5ஆம் பராக்கிரமபாகு (கி.பி 1344 - 1359).

i) 4ஆம் புவனேகபாகுவின் சகோதரனாவான்.

ii) இரு சகோதராகளும் ஒரே நேரத்தில் இரு பிரதேசங்களை ஆட்சி செய்ததாகக் கூறப்படுகின்றது.

iii) கேகாலை மாவட்டத்தில் டெடிகமை என தற்போது அழைக்கப்படும் "டெடிகம்புர" என்ற இடத்தை ஆட்சி செய்தான்.

iv) புவனேகபாகு இறக்கவே கம்பளைக்கு அரசனான்.

v) இவனுடைய பிரதம அமைச்சராக சேனாலங்காதிகார செனர விரத் நியமிக்கப்பட்டதுடன் இவன் தெற்கில் சமய நிகழ்வுகளை நடாத்தி மன்னனுக்கு உதவியாக இருந்தான்.

## 16. 3ஆம் விக்கிரமபாகு (கி.பி 1358 - 1374)

i) முன்னைய இரு அரசர்களினதும் மருமகன் என குறிப்பிடப்படுகின்றது.

ii) சேனாதிபதி பதவியை வகித்த சேனாதிலங்கார பரம்பரையை நீக்கி அழகக்கோனார் பரம்பரையை அப்பதவிக்கு நியமித்தான்.

iii) நிஸங்க அழகக்கோனார் என்ற தளபதி இவனின் அமைச்சராக இருந்தான் இவன் மன்னனின் சகோதரியை மணந்தான்.

iv) இவன் ஆரியச்சக்கரவர்த்தியை தோற்கடிக்கவும் அதிகாரத்தை வீழ்த்தவும் நடவடிக்கைகளை திட்டமிட்டான்.

v) தியவன்னா ஓயாவைச் சூழவுள்ள பிரதேசத்தில் ஒரு கோட்டையை அமைத்தான். இதன் முலம் ஸ்ரீஜயவர்த்தனபுரவை ஸ்தாபித்த பெருமையை பெறுகிறான்.

**17.5ஆம் புவனேகபாகு (கி.பி 1374 - 1408)**

i) 3ஆம் விக்கிரமபாகுவின் பின் அழகக்கோனரின் மருமகனான இவன் ஆட்சிக்கு வந்தான்.

ii) இவனது காலத்தில் ஆரியச்சக்கரவர்த்தி கடல் மார்க்கமாகவும் தரை மார்க்கமாகவும் கோட்டை, கம்பளையை தாக்க முயற்சி செய்த போதிலும் தோல்வியே ஏற்பட்டது.

iii) 5ஆம் புவனேகபாகுவும், 6ஆம் புவனேகபாகுவும் சமகால மன்னர்களாவர்.

iv) இவன் இறக்க ரைகம பிரதேசத்தின் ஆட்சியாளராக இருந்த வீரபாகு அரசனானான்.

குறிப்பு :

- வீரபாகுவின் மூத்த சகோதரன் வீர அழகேஸ்வரன் ஆட்சியை பெற போரிட்டு தோல்வியடைந்து இந்தியாவுக்கு தப்பியோடினான். வீரபாகுவின் இறப்புக்கு பின்னர் இலங்கைக்கு வந்து ரைகமவை
- கேந்திர நிலையமாக கொண்டு 6ஆம் விஜயபாகு(1396-1410) என்ற பெயரில் முடிசூடிக்கொண்டான்.
- சீனாவின் யுங்லோ எனப்பட்ட பேரரசன் காலத்தில் செங்கோ என்ற தளபதி தலைமையிலான குழு கி.பி 1405 இலங்கை வந்தபோது வீரஅழகேஸ்வரன் அவனை உபசரிக்காது விட மீண்டும் கி.பி 1411ல் கடற்படையுடன் வந்து வீரஅழகேஸ்வரன் உட்பட பெருந்தொகை யான கைதிகளை சீனா கொண்டு சென்றனர்.
- இக்காலத்தில்தான் சீன அரசன், "யெஹியாநைனர்" என்பவரை இலங்கை பிரதிநிதியாக நியமித்தான்.
- அடுத்து பராக்கிரமபாகு எனப்பட்ட ஒருவன் கம்பளையை ஆட்சி செய்தான் என நம்பப்படுகிறது.

**18.கம்பளை இராசதானி காலத்தின் விசேட அம்சங்கள்.**

i) சமய வளர்ச்சி ஏற்பட்டது. அத்துடன் பிக்குமார் அமைப்புகள் இரண்டு சீர்திருத்தங்களுக்கு உட்படுத்தப் பட்டதோடு ஒழுங்கமைக்கப் பட்டது.

ii) கடலதெனிய, இலங்காதிலக, எம்பக்க தேவாலயங்களின் நிர்மானம் கலாசர சாதனையாக அமைந்தது.



எம்பக்கதேவலாய செதுக்கல்

iii) இக்காலத்தில் பல சிங்கள நூல்கள் எழுதப்பட்டன.
உ-ம்: சத்தம்மலங்காரய, ஹத்தவன கல்ல, விகாரவம்சம், புத்த சமயபிரிவு உபசாரம், மயூரசந்தேசய.

**9.கோட்டை இராச்சியம்: முக்கிய அம்சங்கள்.**

i) தியவன்னா ஓயா, சதுப்புநிலம் என்பவை அரணாக சூழப்பட்ட பாதுகாப்பான கோட்டையை நிஸங்க அழககோனர் என்ற தளபதியே முதலில் ஒரு பாது காப்பான பிரதேசமாக நிர் மானித்தான். இதற்கான கார ணங்கள்.




- யாழ்ப்பாணத்தில் பலம்பெற்ற ஆரியச் சக்கரவர்த்தியின் அதி காரத்தை வீழ்த்துதல்.
- மாத்தளைவரை அதிகாரத்தை ஆரியச் சக்கரவாத்தி விரிவு படுத்தியமை.
- எதிரிகளை பாதுகாப்பாக கோட்டையிலிந்து தாக்குவதற்கு.
- படைகளுக்கு தேவையான உணவுப் பொருட்களை வழங்குவதற்கும் அவற்றை களஞ்சிப்படுத்துவதற்குமான பாதுகாப்பான கட்டிடம் தேவைப்பட்டமை.

ii) 6ஆம் பராக்கிரமபாகுவினால் அமைக்கப்பட்ட அரச மாளிகை மிக முக்கியமான கட்டிடமாக அமைந்தது.

**20. 6ஆம் பராக்கிரமபாகு (கி.பி 1412-1467)**

- இலங்கை வரலாற்றில் இறுதியான செழிப்புமிக்க பொற்காலமாக இவனது ஆட்சிகாலம் விளங்கியது.
- இவனது அரசியல் நடவடிக்கைகள்,

I கி.பி 1412ல் ரய்கமவில் அரசனாகி கி.பி 1415ல் கோட்டையை "ஜெயவர்த்தனபுரம்" என்ற பெயரில் தலைநகராக்கி கி.பி.1467வரை ஆட்சி செய்தான்.

ii) தனது சகோதரியின் மகனான சப்புமல்குமார (செம்பகபெருமான்) தலைமையில் யாழ்ப்பாணத்துக்கு படை அனுப்பி ஆரியச்சக்கர வர்த்தியை முறியடித்து கி.பி 1450ல் தனது ஆட்சியின் கீழ்கொண்டு வந்தான்.

iii) வன்னிப் பிரதேசத்தை தனது ஆட்சிக்குட்படுத்தி அதன் அதிகாரிகளை தன் ஆணையின் கீழ் கொண்டு வந்தான்.

iv) கி.பி.1462 இல் மலையரட்டையில் "ஜோதிய" என்ற பிராந்திய தலைவன் கோட்டை இராசதானிக்கு செலுத்த வேண்டிய வரியை செலுத்தாது சுதந்திரமாக செயற்படும் நோக்கில் மேற்கொண்ட

கலகத்தை சப்புமலகுமாரவின் சகோதரனான அம்புலுகல என்பவனின் தலைமையில் படை அனுப்பி தனது அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்தான்.

v) இலங்கையிலிருந்து கறுவாவுடன் சென்ற கப்பலை இந்தியாவில் "மலவராயன்" கடத்தியதனால் தென்இந்திய விஜய நகர மன்னனுக்கு எதிராக படையனுப்பி சில துறைமுகங்களை கைப்பற்றி கப்பம் பெற்றான்.

vi) வியாபார கொடுக்கல் வாங்கலை அடிப்படையாகக் கொண்டு தென்னிந்தியாவின் அதி - வீரராம பட்டினத்தை ஆக்கிரமித்தான்.

vii) சோழர் ஆதிக்கத்துக்குட்பட்ட நான்கு கிராமங்களில் வரியை பெற்றான் என கூறப்படுகிறது.

**21. 6ஆம் பராக்கிரமபாகுவின் இலக்கியச் சேவைகள்.**

i) சிறந்த அறிஞனாகவும், பண்டிதனாகவும் விளங்கிய இவனது ஆட்சிக்காலத்தை சிங்கள இலக்கியத்தின் பொற்காலம் என்பர்.

ii) புகழ் பெற்ற கல்வியாளர்கள் காணப்பட்டமை.
உ-ம்: தொட்டகமுவே சிறிராகுல, வாத்தாவே தேரோ, விதாகமே தேரோ.

iii) இவனது காலத்தில் பல நூல்கள் எழுதப்பட்டன.
உ-ம்:- காவியசேகர, பரகும்பாசிறித, புதுகுணஅலங்காரய, குத்துலகாவியம், சலலிஹினி சந்தேசய, பரவிசந்தேசய, கோகில சந்தேசய.

iv) இவன் காலத்தில் புகழ் பெற்ற கல்வி நிலையங்கள் தோன்றின.
உ-ம்:- சுனேந்திராதேவி பிரிவேன (தாயரான சுனேந்திராதேவியின் ஞாபகார்த்தமாக) தொட்டகமுவ விஜயபாகு பிரிவேன.

v) வைத்திய நூல்கள் எழுதப்பட்டது.
உ-ம்:- வைத்திய சிந்தாமணி, யோகரத்னாகரரய.

**22. 6ஆம் பராக்கிரமபாகுவின் சமயச் சேவைகள்.**

i) கோட்டையில் தலதாமாளிகை கட்டுவித்தான்.

ii) பௌத்த சங்கத்திற்குரிய சீர்திருத்தங்கள் இவனது கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

iii) இந்து சமயத்துக்கு ஆதரவு அளித்தான்.
உ-ம்: தலைநகருக்கு அருகில் சிவன் கோவிலும் கதிர்காமத்தில் முருகன் ஆலயமும் அமைத்தான்.

குறிப்பு:

- கி.பி 1467இல் 6ஆம் பராக்கிரமபாகு இறக்க மகளின் மகனான ஜயபாகு கோட்டை அரசனானான். ஆயினும் யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்த சப்புமல் குமாரன் கோட்டை இராசதானிமீது படையெடுத்து ஜயபாகுவைக் கொன்று கி.பி. 1469இல் 6ஆம் புவனேகபாகு என்ற பெயரில் ஆட்சிக்கு வந்தான்.
- 6ஆம் புவனேகபாகுவின் ஆட்சிக்கு எதிராக பஸ்துள் கோரளையில்

கெக்குலத்தோல ஸ்ரீவர்த்தன பதிராஜ என்ற இளவரசனும் கேரகமபிக்கு போன்ற மக்கள் தலைவர்களும் கிளர்ச்சி செய்தனர். இது சிறு சிங்கள புரட்சி (சிங்கள சங்கய) என அழைக்கப்பட்டது. இப் புரட்சியை இவன் அடக்கினான்.

- 6.ஆம் புவனேகபாகுவின் பின் மகன் 7.ஆம் பராக்கிரமபாகு அரசனானான். இதனால் ஆத்திரமடைந்த அம்புலுகல குமாரன் 7.ஆம் பராக்கிரமபாகுவைக் கொன்று 8.ஆம் வீர பராக்கிரமபாகு என்ற பெயரில் கி.பி 1490 இல் அரசனானான்.

**23.13ஆம் நூற்றாண்டின்பின் பொருளாதார அமைப்பில் ஏற்பட்ட மாற்றங்கள்**

I இராஜரட்டை இராச்சியத்தின் வீழ்ச்சியையடுத்து ஏற்பட்ட உறுதியற்ற அரசியல் நிலை காரணமாக உள்நாட்டு பொருளாதாரத்தில் மாற்றங்கள் ஏற்பட்டன.

ii) புதிய புவியியல் சூழலுக்கு முகம் கொடுக்க வேண்டியதால் நீர்ப்பாசன நடவடிக்கைகளில் ஈடுபடாது மழையை நம்பியே விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

iii) பிரதான பயிர்ச்செய்கையாக நெற்பயிர் காணப்பட்டது. நீர்ப் பற்றாக்குறையான பிரதேசத்தில் சேனைப் பயிர்ச்செய்கையும் சற்று உயரமான பிரதேசத்தில் தெங்கு, பலா, பாக்கு, வெற்றிலை, மிளகு ஆகிய பயிர்களையும் பயிர்செய்தனர்.

iv) ஈரவலயத்தின் கரையோரத்தில் தெங்குச் செய்கை பரம்பிக் காணப்பட்டது. குறிப்பாக களுத்துறை, பெந்தோட்டை, தொட்டகமுவ, மொரட்டுவ, களனி, கேகாலை ஆகிய பிரதேசங்களில் தென்னை பயிரிடப்பட்டன.

v. ஈரவலயத்தில் கறுவா வர்த்தகப் பயிர்ச்செய்கையாகப் பிரசித்தி பெற்றது. பாக்கு, மிளகு, சாதிக்காய், ஏலம் போன்ற பயிர்கள் மேலதிகமான ஏற்றுமதிப்பயிர்களாகப் பயிரிடப்பட்டன.

vi. யானை, யானைத்தந்தம், முத்து, இரத்தினக்கற்கள் என்பன ஏற்றுமதி செய்யப்பட்ட ஏனைய பொருட்களாகும். எனவே நீர்வளநாகரிகத்தில் காணப்பட்ட விவசாயப்பொருளாதாரம் வர்த்தகப் பொருளாதாரமாக மாற்றம் அடைந்தது எனலாம்.

vii. இந்தியா, அராபியா, பராசீகம், சீனா, எகிப்து ஆகிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகள் காணப்பட்டது.

viii. வெளிநாட்டு வியாபாரம் அரசனின் ஏகபோக உரித்தாக இருந்தது.

ix. சீனாவிலிருந்து பீங்கான் பொருட்களும் இந்தியாவிலிருந்து காசி சால்வையும் இறக்குமதி செய்யப்பட்டது

x. உள்நாட்டு வியாபாரத்துடன் தொடர்புடைய கடைவீதிகள் இருந்ததாக குருணாகலின் "விபரம்" என்ற ஓலைச் சுவடியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

**24.13ஆம் நூற்றாண்டின் பின் மக்கள் வாழ்க்கையின் தனித்துவமான பண்புகள்.**

I) தொழில் அடிப்படையிலான சாதி முறைகள் காணப்பட்டன.

ii) திருமணச் சடங்குகளும், மரணச் சடங்குகளும் சாதிமுறையின் அடிப்படையில் இடம் பெற்றன.

iii) சமூகத்தில் தந்தை பிரதான இடத்தைப் பெற்றார்.

iv) ஒவ்வொருவரினதும் சமூக நிலைக்கு ஏற்ப வீட்டின் அளவு தீர்மானிக்கப்பட்டது.

v) சமயம், கல்வி ஆகிய நடவடிக்கைகளில் பெண்களும் ஈடுபட்டனர். உ+ம்: உலகுடையதேவி, பத்மாவதிதேவி

vi) மக்கள் பல்வேறு கிராமிய விளையாட்டுக்களிலும் வினோத விளையாட்டுக்களிலும் ஈடுபட்டனர். உ+ம்: பந்தாட்டம், ஊஞ்சல்

vii) பல்வேறு சமய விழாக்கள் இடம் பெற்றன.
உ+ம்: வெசாக், பொசன், எசல

viii) பாரம்பரிய பழக்கவழக்கங்கள் கடைப்பிடிக்கப்பட்டன
உ+ம்: பெயர்சூட்டும் வைபவம், சோறூட்டுதல், திருமணம்

**13ஆம் நூற்றாண்டு தொடக்கம் 15ஆம் நூற்றாண்டின் இறுதிவரையி சமயம், இலக்கியம் மற்றும் கலைகட்டிடக்கலை**

**25.சமயம் பற்றி குறிப்புகள்.**

i. மாகனின் கொடூரத்தால் சிதறுண்ட பௌத்த பிக்குகளை 3ஆம் விஜயபாகு தம்பதெனியாவில் நிர்மாணித்த விஜயசுந்தர விகாரைக்கு அழைத்து பிக்குகளின் ஒரு மாநாட்டை நடாத்தி புத்தசாசனத்தை வளர்த்தான்.

ii. 4ஆம் பராக்கிரமபாகு குருணாகலில் தலதாமாளிகை ஒன்றை நிர்மாணித்து புனித தந்ததாதுவை வைத்து பூஜை செய்தான். இதற்கென "தலதாசிரித" என்ற நூலை எழுதினான்

iii. 4ஆம் பராக்கிரமபாகுவின் ஆட்சியின் போது வீதாகம ஸ்ரீ கணானந்த பிரிவேனா அமைக்கப்பட்டு சோழ நாட்டிலிருந்து வந்த பிக்குகளுக்கு வழங்கப்பட்டது.

iv. பௌத்த விழாக்களுள் தலதா பெரகர நடாத்துதல் சிறப்புப் பெற்றிருந்தது. குறிப்பாக ஒவ்வொரு அரசனும் தலதா பெரகரா நடாத்தி பௌத்த சமயத்திற்கு சேவையாற்றினர்.

v. இந்துக்களின் தீபாவளி, தைப்பொங்கல் ஆகிய விழாக்கள் சிறப்புப் பெற்றிருந்தது.

**26. இலக்கியம் பற்றிய குறிப்புகள்**

i) மாகனின் கொடுமையான ஆட்சி இலக்கியத்துறையின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தது. இருந்தும் ஒவ்வொரு யுகத்திலும் இலக்கியத்துறை வளர்ச்சியடைந்ததைக் காணமுடிகிறது.

ii) தம்பதெனிய காலத்தில் புகழ்பெற்ற இலக்கியவாதியாக இரண்டாம் பராக்கிரமபாகு விளங்கினான். இவனது காலத்தில் தான் விசுத்திமாக்க சன்னய, கவிசிலுமின, சத்தர்மரத்னாவலிய, சமந்தக் கூட வர்ணனை ஆகிய நூல்கள் எழுதப்பட்டன.

iii) குருணாகல் காலத்தில் 4ஆம் பராக்கிரமபாகு காலத்திலும்

இலக்கியங்கள் வளர்ச்சி கண்டன. குறிப்பாக தலதாசரித, பன்சியபணஸ் ஜாதகய, சிங்கள போதி வங்ச போன்ற நூல்கள் தோன்றின.

iv) கம்பளை காலத்தில் தூது (சந்தேசய) இலக்கியங்கள் ஆரம்பமாகின மயூரசந்தேசய, திசரசந்தேசய, எலு அத்தனகலு, சங்சய சத்தர் மாலங்காரய, நிக்காய சங்கிரகய ஆகிய நூல்கள் இக்காலத்திலேயே தோன்றின.

v) கோட்டைகாலம் இலக்கியத்துறையின் பொற்காலமாகும். குறிப்பாக 6ஆம் பராக்கிரமபாகு இலக்கியவாதிகயாக காணப்பட்டமையால் அரச அனுசரனை இலக்கியத்துறைக்கு கிடைத்தது.

vi) கோட்டைகாலத்தில் தூதுகாவியம், பக்தி இலக்கியம், போர் இலக்கியம், புகழ்பாடும் இலக்கியம், அகராதி நூல்கள் என பல்வகைத் தன்மையைக் கொண்ட இலக்கியங்கள் தோன்றின.

vii) பரவிசந்தேசய, ஹிராசந்தேசய, செலலிகினி சந்தேசய, ஹன்சசந்தேசய, குத்தில காவியம், காவியசேகர, புதுகுண அலங்கார, பரம்கும்பாசிரித்த என்பன கோட்டைக் காலத்தில் எழுதப்பட்ட பிர தான நூல்களாகும்.

viii) 6ஆம் பராக்கிரமபாகு தயாரின் நினைவாக பெப்பிலியான சுனேத்ராதேவி பிரிவேனாவை அமைத்தான். அத்துடன் வெதாகம ஸ்ரீ கணானந்த பிரிவேனா, கேரகல பத்மாவதிபிரிவேனா, தெவிநுவர இருகல் குலதிலக பிரிவேனா என்பன கல்வி மத்திய நிலையங்களாக விளங்கியதால் பிரிவேனாக்கல்வி வளர்ச்சிய டைந்தது

**27. கட்டிடக்கலை பற்றிய குறிப்புக்கள்**

i) 13ஆம் நூற்றாண்டின் பின்னர் கட்டடக்கலை, கலைவடிவங்கள் ஆகியவற்றில் தென்னிந்தியச் செல்வாக்கைக் காணமுடிகிறது.

ii) மத்திய கால இலங்கை நகரங்களின் கட்டிடக் கலை அம்சங்களை யாப்பகூவாவில் காணமுடிகிறது. இங்கு எஞ்சியிருக்கும் அரச மாளிகையின் சிதைவு, படிக்கட்டு செதுக்கல் வேலைப்பாடுகள் தென்னிந்தியப் பண்புகளைக் காட்டுகிறது.

iii) கம்பளை கால கட்டடக் கலையின் விசேட பண்பாக காணப்படுவது. பௌத்த, இந்து கட்டடக்கலை அம்சங்கள் இணைந்த கட்டிடங்கள் காணப்படுதல் ஆகும்.

iv) கம்பளை காலத்தில் அமைக்கப்பட்ட கடலதெனிய விகாரை இந்தியாவின் ஆந்திரா தேசத்திலிருந்து வந்த கடேஸ்வர ஆச்சாரி உள்ளிட்ட கலைஞர்களினால் நிரமாணிக்கப்பட்டது.

v) கடலாதெனிய விகாரையின் சிலைமனை ஓரளவு இருள் சூழ்ந்த இயல்பினை கொணடுள்ளமை இந்துக்கோயில்களின் பண்புகளை பிரதிபலிக்கிறது

vi) கடலாதெனிய விகாரை தென்னிந்திய(விஜயநகர) கலைமரபில் கட்டப்பட்டுள்ளது.

vii) செனலங்காதிகார என்ற அமைச்சரின் ஆலோசனையில் எழுந்த லங்காதிலக விகாரையின் பெரும் பகுதி செங்கல்லால் கட்டப் பட்டுள்ளது.

viii) லங்காதிலக விகாரையில் பெரும்பாலும் பழைய சிங்கள கட்டட முறைகளுடன், தென்னிந்திய பர்மியகலைப் பண்புகளும் கலந்துள்ளது

# 6 மத்திய கால ஆசியா

## 1. இஸ்லாமிய சாம்ராஜ்யம் - முக்கிய அம்சங்கள்

i) மத்தியகால ஆசியாவில் மிகவும் பலம்பொருந்திக் காணப்பட்டது.

ii) கி.பி 570இல் மக்காவில் பிறந்த முகம்மது நபி இஸ் லாம் சமயத்தின் ஆரம்ப கர்த்தாவாக இருந்தார். கதீஜா என்ற பணக்கார விதவைப் பெண்ணைத் திருமணம் செய்தார்.

iii)இவர் இறைவனின் இறுதித் தூதுவர் எனத் தன்னைக் குறிப்பிட்டார். இறை வார்த் தையை அவர் போதனை செய் ததுடன் அவ் வாக்கியங்கள் அடங்கிய நூல் "புனித திருக் குர்ஆன்" எனப்படுகிறது.

iv)இவர் சிலைகள், உருவங்கள் வைத்து வழிபடுவதற்கு எதிர்ப்புத் தெரிவித்ததுடன் சாதி முறைமையையும் முற்றாக ஆட்சேபித்தார்.

v) "அனைத்து வல்லமையும் பொருந்திய அல்லாஹ்" மீது இஸ்லாமியர் நம்பிக்கை வைத்தனர்.

vi)பிற்காலத்தில் இஸ்லாம் சமயத்தில் "சியா" "சுன்னி" என்ற இரு பிரிவுகள் தோன்றின.

vii)முகமது நபியின் இறப்பின் பின் இஸ்லாம் சமயத்தின் பாதுகாவலராக இருந்தவர்கள் "கலிபா அபூபக்கரும்" அவரின் பின்னர் "உமர் கலிபாவும்" ஆகும்.

viii) இஸ்லாமியர்களின் அரசியல், சமயத்தலைவர்களாக கலிபாக்கள் கருதப்பட்டனர். இதனால் கலிபாக்களின் கண்காணிப்புடன் இஸ்லாமிய சமயம் பரவியது.

ix)சிரியா, ஈராக், எகிப்து (மிசிர்), பாரசீகம், என டோலியா, சின்னாசியா ஆகிய பிரதேசங்கள் இஸ்லாமிய ஆட்சிக்கு உட்பட்டது.

x) கிழக்குநோக்கி விரிவடைந்த இப்பேரரசு கைபர் கணவாய் ஊடாக இந்தியா நோக்கியும் விரிவடைந்தது.

## 2. இந்தியாவில் இஸ்லாமிய ஆட்சியின் பரம்பல்

i) ஆதிகாலம் முதல் அராபியர்கள் வியாபாரத்திற்காக இந்தியாவிற்கு வந்துள்ளனர். எடுத்துக்காட்டாக கி.பி 636 இல் பாருகச்சை துறை முகத்தில் தங்கியிருந்த முஸ்லிம்கள் விரட்டப்பட்டதாகக் கூறப் படுகிறது.

ii) கி.பி 636 - 664 வரையான காலப்பகுதிகளில் அராபியர்களின் தாக்குதல்கள் பல இந்தியாவில் இடம்பெற்றன. குறிப்பாக கி.பி 700களில் இடம்பெற்ற முஸ்லிம் தாக்குதல்கள் அரசியல் வடிவத்தைப் பெற்றது.

iii) கி.பி 711 - 712 இற்கிடையில் இந்தியாவை ஈராக் பிரதேசத்தைச் சேர்ந்த இஸ்லாம் ஆட்சியாளர் "அல்ஹஜ்ஜாஜ்" ஆக்கிரமித்தான். இதன்பின் "முகமது காசிம்" ஆக்கிரமிப்பை மேற்கொண்டான்.

iv) முகமது காசிம் மேற்கொண்ட ஆக்கிரமிப்பு

- ♦ இந்தியாவிலிருந்து பாரிய செல்வத்தை சூறையாடினான்
- ♦ சிந்து, முல்தான் நகரங்களில் படைகளை நிறுத்தி அந்நகரங்களை முஸ்லிம்களின் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருத்தல்.
- ♦ உண்மையான ஒரேசமயம் இஸ்லாம் என்பதை அங்கீகரித்தல், யூத, கிறிஸ்தவ சமயங்களைச் சேர்ந்தோரிடம் "ஜெசியா" என்றவரி அறவிடப்பட்டது.
- ♦ இந்து, பௌத்த சமயத்தவர்கள் சிலை வழிபாட்டைக் கொண்டிருந்ததால் அவற்றை அழிக்கும் நோக்குடன் விகாரை, கோயில் என்பன அழிக்கப்பட்டு பொருட்கள் சூறையாடப் பட்டது.

**3. இஸ்லாமியரின் இந்திய ஆக்கிரமிப்பு**

- ♦ கி.பி 11ஆம் நூற்றாண்டில் இந்தியாவின் உள்ளார்ந்த அரசியல் பலவீனமடைந்து காணப்படவே மக்ரன், கைபர் கணவாய் களைக் கைப்பற்றிக் கொண்டு இந்தியா நோக்கி இஸ்லாமியர் படை யெடுத்தனர்.



**கோரி முகமதுவின் ஆக்கிரமிப்பு**

**1. கஜனி முகமது**

i. ஆப்கானிஸ்தானின் கஸ்னி பிரதேச ஆட்சியாளராக விளங்கினான்

ii. இவன் கி.பி. 999 - 1027 வரையான காலப் பகுதியில் இந்தியா மீது 17 முறை படையெடுத்தான்.

iii. இவன் தனது ஆக்கிரமிப்புகளை ஸாகி கேர்ட்டையிலிருந்து மேற்கொண்டான்.

iv. தனது இராச்சியத்தைப் பலப்படுத்துவதற்குத் தேவையான செல்வங்களை இந்தியாவிலிருந்து பெற்றுக்கொள்வதே இவனது நோக்கமாக இருந்தது.

v. சோமநாதர் கோவிலை அழித்து சூரையாடிய பின் இவனது ஆக்கிரமிப்பு நிறைவு பெற்றது.

**2. கோரி முகமது**

i. இவன் முதன் முதலில் கி.பி 1775இல் இந்தியா மீது ஆக்கிரமிப்பை மேற்கொண்டான்.

ii. போவின் கணவாய் ஊடாக வந்து முலிதான்களை அழித்தான.

iii. இந்தியாவில் இஸ்லாமிய ஆதிக்கத்தை நிலைபெறச் செய்வதே இவனது படையெடுப்பின் நோக்கமாகும்.

iv. பக்தியார்கல்ஜி, ஐபெக் என்பவர்கள் இவனது ஆக்கிரமிப்பில் முக்கிய இடம் பெற்றிருந்தனர்.

**4. டில்லி சுல்தான் ஆட்சி (கி.பி 1206 - 1526)**

i) 13ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் துருக்கி, ஆப்கானிஸ்தான் ஆட்சியர்ள்கள் டில்லியை மையமாக கொண்டு நடாத்தப்பட்ட ஆட்சியே "டில்லி சுல்தான்" ஆட்சி எனப்படும்.

ii) 13ஆம் நூற்றாண்டு தொடக்கம் 16ஆம் நூற்றாண்டு வரையில் டில்லியில் இந்த ஆட்சி நிலவியது. 5 முஸ்லிம் வம்சங்கள் ஆட்சி புரிந்தன.

1. அடிமை வம்சம் 2. கில்ஜி வம்சம்
3. துக்ளக்வம்சம் 4. செய்யது வம்சம்
5. லோதி வம்சம்

**iii) அடிமை வம்சம் (கி.பி 1206 – 1290)**

- கோரி முகமதுவின் அடிமையாக இருந்து விடுதலை பெற்ற ஐபெக்கினால் இவ் வம்சம் ஆரம்பிக்கப்பட்டது.
- முக்கியமான ஆட்சியாளர்கள் வருமாறு
  1. ஐபெக் 2. இல்துத்மிஷ்
  3. பிரோஸ்ஷா 4. ரஷியாஅரசி

**iv) கில்ஜி வம்சம் (கி.பி 1290 – 1320)**

- முக்கியமான ஆட்சியாளர் வருமாறு
  1. ஜலாதுத்தீன் 2. பிரோஷ்கில்ஜி 3. அலாவுதீன் கில்ஜி
  4. முபாரக் ஷா கில்ஜி
- சிறந்த ஆட்சியாளனாக அலாவுதீன் கில்ஜி காணப்படுகிறார் இவன் தன்னை அலெக்சாண்டரின் பிரதி விம்பம் எனக் கூறினார். தனது நாணயங்களிலும் இதனைக் குறிப்பிட்டார்.
- இவனது மிகச் சிறந்த தளபதியாக மாலிக் கபூர் விளங்கினார்.

**v) துக்ளக் அரச வம்சம் (கி.பி 1320 – 1413)**

- இக் காலத்தில் இந்து, முஸ்லீம் ஆட்சிப் பிரிவுகள் தோன்றின.
- இந்தியாவில் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதற்கு முயற்சித்தமை இவ் வம்சத்தின் விசேட பண்பாகும்.
- விஜயநகர் போன்ற இந்துமத இராச்சியங்கள் இவ்வம்ச காலத்திலேயே தென்னிந்தியாவில் தோன்றியது.
- பிரதான ஆட்சியாளனாக "முகமது பின் துக்ளக்" காணப் படுகின்றான்

- இவ்வம்ச ஆட்சியாளர்கள் வருமாறு

1. கியாஸீத்தீன் துக்ளக்   2. முகமது பின் துக்ளக்
3. பிருஷ்துக்ளக்   4. 2ஆம் கியாஸீத்தீன்
5. துக்ளக்.

vi) **செய்யது வம்சம் (கி.பி 1414 – 1451)**

- ♦ அராபியாவிலிருந்து வந்த அரச வம்சமாக இதுவுள்ளது.
- ♦ 37 வருடங்கள் டில்லியை ஆட்சி செய்த போதிலும் அரசியல் பலம் வாய்ந்ததாகக் காணப்படவில்லை.
- ♦ இவ் வம்சத்தின் ஆட்சியாளர்கள் வருமாறு

  1. கிசர்கான்   2. முபாரக்ஷா
  3. மகமுத்ஷா   4. அலாம்ஷா

vii) **லோதிவம்சம் (கி.பி 1451 – 1526)**

- ♦ 75 வருட ஆட்சியின் பின் டில்லி சுல்தானின் ஆட்சியை மொகலாயர்கள் கைப்பற்றினார்கள்.
- ♦ இவ் வம்ச ஆட்சியாளர்கள் வருமாறு

  1. பகலோல் லோதி 2. சிக்கந்தர் லோதி   3. இப்ராஹிம் லோதி

## 05. டில்லி சுல்தான் ஆட்சியாளர்கள்

i) **குதுபுதின் ஐபெக்**

- "வஹல்" என்ற பரம்பரையைச் சேர்ந்த இவர் "டில்லி சுல்தான்" என அழைக்கப்பட்டார்.
- மகமுதினுக்கு (ஆப்கானிஸ்தான் மன்னன்) சொந்தமான இந்திய பிரதேசங்களுக்கு அரச பிரதிநிதியாக இருந்தான். மகமுதினின் இறப்பின் பின் கி.பி 1206 இல் முதலாவது டில்லி சுல்தானாக ஆட்சிக்கு வந்தான்.
- கஜனி நகரை வெற்றி கொண்டான்.
- தர்மம் செய்வதில் உலகப்பிரசித்தி பெற்றிருந்த இவன் குதிரை மீது அமர்ந்து பந்து விளையாடும் போது தவறிக் கீழே விழுந்து உயிரிழந்தான்.

ii) **இல்துத்மிஸ்**

- குதுபுதினின் மரணத்தின்பின் மருமகனான இவன் டில்லி சுல்தானாக முடி சூடினான்.
- இஸ்லாமிய ஆட்சியை இந்தியாவில் முதலில் ஸ்திரமாக நிறுவியவர்.
- மொகலாயர்கள் என்ற கோத்திரத்தார் மேற்குப் பஞ்சாப்பை இவனது ஆட்சிக் காலத்தில் கைப்பற்றினர்.
- சமயப்பற்றுமிக்க இவன் கலைத்துறையின் வளர்ச்சிக்கும் அனுசரணை வழங்கினான்.



குதுபுமினார் கட்டிடம்

- டில்லியிலுள்ள குதுபுமினார் கட்டிடம் இவனால் அமைக்கப் பட்டது.

iii) ரஷியா அரசி
- இல்துத்மிஸ் சுல்தானின் மகள். சிறிது காலம் சிறப்பான ஆட்சியை மேற் கொண்டாள்.
- பெண்ணாக இருந்து ஆட்சி அதிகாரத்தை தன்வசம் கொண்டிருந்தாலும் கோபமுற்ற மக்கள் இவளைக் கொன்றனர்.
- இவளது ஆட்சியின் பின் சுல்தான்களின் சாம்ராஜ்யம் மங்கோலியக் கோத்திரத்தவர்களினதும், தென் பகுதி மன்னர்களினதும் படையெடுப்புகளுக்கு உட்பட்டது.

  குறிப்பு: சுல்தான் சாம்ராஜ்யத்தின் இறுதி முஸ்லிம் அரச வம்ச மன்னவாக "பல்பன்" திகழ்ந்தான்.

iv) முகமது இபின்துக்ளக்
- இந்து மதத்திலிருந்து இஸ்லாத்தைத் தழுவினான். டில்லி சுல்தான் என்ற பெயரில் அரச வம்சம் ஒன்றைத் தொடங்கினான்.
- தக்கினத்தை முழுமையாக அடிமைப்படுத்தியவன் இவனது ஆட்சிக்கெதிராக குழப்பங்கள் ஏற்பட்டதால் ஆட்சிப் பலம் குறைந்தவனாக விளங்கினான்.
- டில்லி நகரை விட்டு தவுலதாபாத் (தேவகிரி) நகரத்திற்கு தலைநகரை மாற்றினான். இவனது தூரநோக்கற்ற ஆட்சி இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்கு காரணமாகியது.

**6. டில்லி சுல்தான் பேரரசு வீழ்ச்சியடைந்தமைக்கான காரணங்கள்**

i) **பிராந்திய அரசுகள் தோன்றியமை.** சிக்கலான தரைத் தோற்றத்தைக் கொண்டிருந்ததால் பிராந்திய அரசுகளைக் கட்டுப்படுத்த முடியா திருந்தமை.

ii) **டில்லியிலிருந்து தலைநகர் தேவகிரிக்கு மாற்றப்பட்டமை.** மக்கள் பல இன்னல்களை எதிர்கொண்டதோடு மக்களிடையே அமைதியின்மை தோன்றியமை.

iii) **திறமையற்ற மன்னர்கள் ஆட்சி செய்தமை.** பிராந்திய ஆட்சியாளர்கள் மக்களிடையே வரிகளைச் சேகரித்து தமது அதிகாரத்தை செலுத்தினர்.

iv) **கொடுங்கோல் ஆட்சி:** இஸ்லாம் மத நம்பிக்கை கொண்ட அரசர்கள் மேற்கொண்ட மதரீதியான ஆட்சி இந்துக்களிடையே வெறுப்புணர் வுகளை ஏற்படுத்தியது. இந்துக்களிடம் அதிக அளவு வரிகளை அறவிட்டுக்கொண்டமை மேலும் எதிர்ப்பு நிலையை அதிகரித்தது.

v) **பிரபுகளும், செல்வந்தர்களும் மன்னரை எதிர்த்து கிளர்ச்சி செய்தமை:** முஸ்லிம் அரச வம்சங்களிடையே அரசு கைமாறியமை அரச அதிகாரம் புறக்கணிக்கத்தக்க அளவுக்கு இழிவுற்றமை.

- துக்ளக் மன்னனின் செயற்பாடுகளே இவ் ஆட்சியின் வீழ்ச்சிக்கு பிரதான காரணமாகியது.

**7. மொகலாயப் பேரரசு:**

i) இந்தியாவுக்குப் படையெடுத்துச் சென்று மொகலாய அதிகாரத்தை அந்நாட்டில் நிலை நாட்டியவன் பாபர் என்பனாவர்.

ii) சாஹிருத்தீன் முகமது என்ற பெயருடைய பாபர் கி.பி. 1525 இல் 12000 வீரரை கொண்ட பெரும் படையுடன் காபூலிலிருந்து புறப்பட்டு பனிப்பட்டு எனும் இடத்தில் நடந்த கடும்யுத்தத்தில் "இப்ராகிம் லோடியை" தோற்கடித்து 1526 இல் டில்லியை கைப்பற்றினான்.

iii) பாபரிடம் காணப்பட்ட செல்வவளம், ஆட்பலம், ஆயுதபலம் என்பன டில்லி சுல்தானியப் பேரரசை தோற்கடிக்க உதவியது.

iv) தனது வாழ்க்கைக் காலத்தில் நீண்ட காலத்தினை போர்களில் கழித்தான். கட்டுப்பாடு மிகுந்த இவர் மதவெறியற்றவராகவும் கலைகள், இசை, ஓவியம் என்பவற்றில் ஈடுபாடு கொண்டவராக இருந்தார்.

v) பாபர், தன் மகள் (ஊமாயூன்) தீராத நோயினால் துன்பப்பட்ட போது ஆண்டவனிடம் உயிர்ப்பிச்சை வேண்டி தனது உயிரைத் தியாகம் செய்தார்.

vi) பாபருக்கு அடுத்து மகள் உமாயூன் ஆட்சிக்கு வந்த போதிலும் அவளது ஆட்சி நீடிக்கவில்லை. மகன் அக்பர் காலத்தில் பேரரசு வளர்ச்சியடைந்திருந்தது.

vii) அக்பரின் பேரன் ஷாஜகான் ஆட்சியில் பேரரசு வளர்ச்சி பெற்றது. பின்னர் மகன் அவுரங்கசீப் ஆட்சி செய்தான். இவனுக்குப் பின் படிப்படியாக அழிவுப்பாதையில் பேரரசு சென்றது.



13 வயதில் ஆட்சிக்கு வந்த அக்பர்

**8. அக்பர் (கிபி 1556 - 1605)**

i) மொகலாய அரசிற்கு அச்சுறுத்தலாக இருந்த பஞ்சாப் பகுதி அரசனை அடக்குவதற்கு உமாயூன் அக்பரை அனுப்பியிருந்தார்.

ii) உமாயூன் இறக்க மகன் அக்பர் (13வயதில்) மொகலாயச் சக்கரவர்த்தியாக "பைராம்கான்" எனும் குழுவினால் பிரகடனம் செய்யப்பட்டார்.

iii) மொகலாய அரச வம்சத்தின் சிரேஷ்ட ஆட்சியாளனாக விளங்கி னான்.

iv) இஸ்லாமிய ஆட்சியாளராக இருந்த போதிலும் ஏனைய சமயங்களையும் ஆதரித்து சமய சகிப்புத் தன்மையைக் கடைப் பிடித்தமை இவனது சிறப்பம்சமாகும்.

v) அக்பர் கடைப்பிடித்த கொள்கைகள் பின்வருமாறு

- ராஜபுத்திரப் பெண்களை அந்தப்புரத்திற்குக் கொண்டு வருவதை நிறுத்தினார்.
- ஏனைய சமயத்தவர்களிடமிருந்து அறவிட்ட ஜெசியா என்ற வரியை ஒழித்தார்.
- சமயங்களைக் கடைப்பிடிக்கும் உரிமையை வழங்கினார்.
- வரி அறவிடுவதையும் நிர்வாகத்தையும் சிறந்த முறையில் நடாத்திச் சென்றமை.
- "மன்சத்தார்" முறையை அறிமுகப்படுத்தினான். அதாவது எல்லா அரச ஊழியரும் வேறுபாடின்றி இராணுவ வீரர்களாகக் கடமையாற்ற வேண்டும்.

"நான் மாமிசம் சாப்பிடாதது எனது இரைப்பை ஏனைய உயிரினங்களின் புதைகுழியாக மாறாமல் இருப்பதற்காகும்"
- மாமன்னர் அக்பர்.

**9. ஜகாங்கீர் ( கி.பி. 1605 - 1627)**

i) அக்பரின் பின் மகன் சலீம், ஜகாங்கீர் (உலகப் பேரரசன் என்று பொருள்படும்) என்ற பெயரில் மன்னனானான்.

ii) நூர்ஜகான் (அழகின் ஒளி), ஜகத் கோசைன் போன்ற பல பெண்களை மணந்தான்

iii) அக்பரின் ஆட்சி போல் இவனின் ஆட்சி அமையவில்லை.

iv) ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வந்து சூரத் எனுமிடத்தில் கோட்டை ஒன்றை அமைத்தனர்.

**10. ஷாஜகான் (கி.பி 1628 - 1658)**

i) ஜகாங்கீரின் பின் மகன் குர்றம், ஷாஜகான் (உலகை ஆழ்பவன்) என்ற பட்டப் பெயரில் ஆட்சிக்கு வந்தான்

ii) தக்கணப்பகுதியை கைப்பற்றி தனது மகன் அவுரங்கசீப் என்பவனை மகாதேசாதிபதி ஆக்கினான். இவன் காலத்தில் மொகலாய வம்சம் மேலும் பொற்காலமாக இருந்து வந்தது

iii) உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மஹாலை மனைவியின் ஞாப கார்த்தமாக 1648இல் அமைத்தான்.

**தாஜ்மஹால்**



- டெல்லியை அடுத்த ஆக்ராவில் யமுனை நதிக்கரையில் மொகலாய மன்னன் ஷாஜகான் தன் காதல் மனைவிக்கு எழுப்பிய பளிங்கு மாளிகை தாஜ்மஹால் எனப்படுகிறது.
- ஷாஜகான் மன்னராகு வதற்கு முன்பே மும்தாஜ்ஜை காதலித்து திருமணம் செய்தார்
- 14வது குழந்தை பிரசவத்தின்போது மும்தாஜ் மரணமடைந்தாள். அருமை மனைவியின் மறைவு ஷாஜகானை ஆறாத்துயரத்தில் மூழ்கச் செய்தது.
- தன்மனைவிக்கு உலகத்தில் எங்கும் இல்லாத அழகிய நினைவுச் சின்னம் எழுப்ப தீர்மானித்து 1632இல் தாஜ்மஹாலைக் கட்டும் வேலையை தொடங்கினான்.
- இந்தியா, பாரசீகம் ஆகிய நாடுகளைச் சேர்ந்த 20 ஆயிரம் தொழிலாளர்கள் பணியில் ஈடுபடுத்தப்பட்டனர். முழுவதும் பளிங்குக் கற்களால் கட்டப்பட்டன.
- 1653 இல் கட்டி முடிக்கப்பட்ட தாஜ்மஹால் உலக அதிசயமாகத் திகழ்கிறது. இச்சிறப்க் களஞ்சியம் மனைவி மீதான ஆழமான காதலை வெளிப்படுத்துகிறது.

**11. தக்கனத்தின் பாமினி இராச்சியம்: முக்கிய அம்சங்கள்**

i) டில்லிசுல்தான் பேரரசின் வீழ்ச்சிக்குபின் தோன்றிய சிறிய இராச்சியங்களில் பலம்வாய்ந்த முஸ்லீம் இராச்சியமாக பாமினி இராச்சியம் விளங்கியது.

ii) தக்கணத்திலிருந்த முஸ்லிம் ஆட்சியாளர்கள் முகமது பின் துக்ளக்கின் பல்வேறு இன்னல்கள் அச்சுறுத்தல்கள் என்பவற்றைப் பொறுக்க முடியாது கி.பி 1347 இல் கிளர்ச்சியை ஏற்படுத்தி தௌலதாபாத்தைக் கைப்பற்றி "ஸ்மாயில் முக " என்ற ஆட்சி யாளரை நியமித்தனர்.

iii) இஸ்மாயில்முக வயதாகிவிட்டதால் ஆட்சியை திறமையும் இளமையுமுடைய **அபுல் முசாபர் அலாவுதீன் பகமன் ஷாவிடம்** ஒப்படைத்தான்.

iv பாமினி இராச்சியத்தின் தலைநகராக "குல்பர்க்கா" விளங்கியது. ஆயினும் அகமது ஷா மன்னன் தலைநகரமாக பீதாரைத் தெரிவு செய்தான்.

v) பாமினி இராச்சியத்தையும் அயலிலிருந்து விஜயநகர இராச்சியத்தையும் கிருஷ்ணநதி பிரித்திருந்தது. பஹமன் ஷா விஜயநகர் இராச்சியத்துடனும் வரங்கல் இராச்சியத்துடனும் அடிக்கடி போர்

நிகழ்ந்ததால் உள்நாட்டுக் குழப்பங்களும் வெளிநாட்டு படை யெடுப்புகளால் நாட்டில் அமைதி நிலவவில்லை.

vi) தென் இந்தியாவில் இஸ்லாமிய ஆட்சி நிலைத்திருந்தமைக்குப் பாமினி இராச்சியமே காரணமாகும்.

vii) பாமினி இராச்சிய அரசர்கள் பின்வருமாறு

1. பஹமன் ஷா
2. முகம்மது ஷா
3. அலாவுத்தீன் முஜாகித்
4. முகம்மது ii
5. ஹஜ் - உத் - தீன் மீருஷ்ஷா
6. அகமதுஷா
7. அலாவுதீன் அஹமத் ஷா
8. ஹுமாயுன்

viii) பீருத் ஷா பாமினியின் திறமையும் பலமும் வாய்ந்த ஆட்சியாளன் ஆவான்.

**12. இஸ்லாம் சமயத்தின் பரவலினால் இந்தியாவில் ஏற்பட்ட விளைவுகள்**

i) **பாரசீகச் செல்வாக்கு**

மொழி, இலக்கியம், சமயம், கலைகள் போன்ற துறைகளில் பாரசீகச் செல்வாக்கை காணமுடிகின்றது.

உ-ம்:- இராமாயணம், மகாபாரதம், ராஜதரங்கனி, ஹரிவம்சம், பஞ்சதந்திரம் போன்ற இலக்கியப் படைப்புகள் பாரசீக மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.

ii) **கட்டிடக்கலையில் வளர்ச்சி**

கலந்த கட்டிடங்கள்,தூண்கள், செதுக்கல் வேலைப்பாடுகள், போன்றவற்றை உள்ளடக்கிய கட்டிடக்கலை தோன்றியது.

உ-ம்:- தாஜ்மஹாலில் பாரசீகக் கட்டிடக்கலை அம்சங்கள் வெளிப்படுத்தப்படுகின்றது.

iii) **ஓவியக்கலை வளர்ச்சியடைந்தது**

குப்தர்காலம் முதல் இந்திய ஓவியக்கலை நன்கு வளர்ந்தபோதிலும் அரேபியர்களின் தாக்கத்தால் இதன் வளர்ச்சி மங்கிச் சென்றது. எனினும் மொகலாயர் ஆட்சியில் ஓவியக்கலை வளர்ச்சி யடைந்திருந்தது.

iv) **இசைத்துறையில் வளர்ச்சி**

தேசிய இசையுடன் பாரசீக இசையும் கலந்து ஓர் இசை பிரபல்ய மடைந்து தேசிய வெளிநாட்டு இசைக்கருவிகள் பயன்படுத்தப் பட்டது.

**13. விஜய நகரப் பேரரசு வளர்ச்சி**

I) தென் இந்தியாவில் துங்கபத்திரா நதிக்கரையில் தோன்றிய சுதந்திர இந்து இராச்சியமே விஜயநகரப் பேரரசு ஆகும்.

ii) ஹரிஹரன், புக்கான் என்பவர்களால் இவ்வரசு தோற்றுவிக்கப்பட்டது.

iii)ஹரிகரன் கி.பி 1336ல் அஸ்தினபுரத்தை தலைநகராகக் கொண்டு விஜயநகர இராச்சியத்தில் அரசனானான். பின்னர் வித்தியாதாரண்ய என்ற அறிஞரின் பேரில் வித்தியாநகர் எனப்பட்டது. இதுவே விஜயநகரானது.

iv)விஜயநகர் இராச்சியம் கி.பி 1336ல் உதயமாகி 1576 வரை நிலைத்திருந்தது.

v) ஹரிகரனை அடுத்து சகோதரன் 1ம் புக்கர் கி.பி 1356ல் அரசனாகி பேரரசை வலுப்படுத்தவும், விரிவாக்கவும் பலமுயற்சிகளை மேற்கொண்டார். இவனுடைய காலத்தில் பாமினி அரசுடன் பலத்த போர் இடம்பெற்றது.

vi)கி.பி 1379ல் 2ஆம் ஹரிஹரர் காலத்தில் விஜயநகர பேரரசு மேலும் விரிவடைந்தது. இவன் மகள் விருபாட்சன் இலங்கை மீது படையெடுத்து வடபகுதியை கைப்பற்றினான். விஜயநகர அரசர்கள் யாழ்ப்பாண இராச்சியத்தினரிடம் திறை பெற்றுக்கொண்டனர்.

vii)விஜயநகர மன்னனான 2ஆம்தேவராஜவுக்கும் இலங்கை மன்னன் 6ஆம் பராக்கிரமபாகுவிற்குமிடையே வர்த்தக பிணக்குகள் நிலவியதால் இலங்கைமீது ஒரு படையை அனுப்பினார்.

viii)விஜயநகர பேரரசின் புகழை உயர்த்தியவர் 1509ல் பதவிக்கு வந்த கிருஷ்ண தேவராயர் ஆகும்.

ix)தென் இந்தியாவில் இஸ்லாமியரின் ஆட்சி ஏற்படாமல் தடுத்தமை இப்பேரரசின் முக்கிய பணியாகும்.

**14. விஜய நகரப் பேரரசின் சில அம்சங்கள்**

I விஜயநகர அரசர்கள் இந்துமதத்தை காப்பதையும் வளர்ப்பதையும் இலட்சியமாக கொண்டிருந்தனர். தென்னிந்தியாவிலும் இந்துமதத்தில் மறுமலர்ச்சி ஏற்பட்டது.

ii) பொருளாதாரத்தில் வேளாண்மையே முக்கிய தொழிலாக இருந்தது மன்னர்கள் நீர்ப்பாசனத்துறையின் வளர்ச்சியில் அக்கறை செலுத்தினார்.

iii)வர்த்தகத்தின் மூலம் பெருமளவு வருமானத்தை இவ்இராச்சியம் பெற்றுக்கொண்டது. குதிரைகள், பட்டுப்புடவை வகைகள், வாசனைத்திரவியங்கள் இறக்குமதி செய்யப்பட்டது. அரிசி, தேங்காய், முத்துக்கள், சாயவகைகள் ஏற்றுமதி செய்யப்பட்டது.

iv) பேரரசர்கள் பல்வேறு மொழிகளில் இலக்கியம் வளர வகை செய்தனர். வடமொழி, தெலுங்கு, தமிழ், (உயர்நிலை பெற்றிருந்தது) கன்னடம் ஆகிய மொழிகள் அவர்களது ஆதரவைப் பெற்றன.

உ-ம்: - கிருஷ்ண தேவராயரின் அவையில் பட்டுமூர்த்தி, மாதய்யகாரி போன்ற புலவர்கள் இருந்தனர்.

v) கட்டிடக்கலை நிர்மாணம் விசேட இடத்தைப் பெற்றிருந்தது. குறிப்பாக தென் இந்தியாவில் வரதராஜர் கோயில், கல் இரதக் கோயில் என்பன சிறந்த எடுத்துக் காட்டுகள் ஆகும்.

vi) இஸ்லாமிய மதம் தென் இந்தியாவில் பரவவிடாமல் தடுக்கும் அதேவேளை இந்து மதத்தினை வளர்ப்பதையும் நோக்கமாக கொண்டிருந்தது. ஆனாலும் வைணவ, சமண சமயத்தவர் களும் ஒற்றுமை யுடன் வாழ்ந்தனர்.


விட்டல கோவில் (விஜயநகர்)

vii) கட்டிடக்கலையில் திராவிடப் பண்புகளே அதிகம் கையாளப் பட்டன. கோயில்களிலுள்ள பிரமாண்டமான தூண்கள் செதுக்கல் வேலைப்பாடுகள் பேரரசுகாலகட்டிடக்கலையின் சிறப்பை வெளிப்படுத்துகின்றது.

உ-ம் :- சிதம்பரம், காஞ்சிபுரம் இடங்களிலுள்ள கோபுரங்கள் கிருஷ்ண தேவராயரால் கட்டப்பட்டது.

**15. புத்தசமயமும் இந்துசமயமும் ஆசியாவில் ஏற்படுத்திய தாக்கம்**

I) பௌத்தம், இந்து ஆகிய இரண்டு சமயங்களுமே இந்தியாவில் உருவாகியது.

ii) தொல்பொருள்ச் சான்றுகளின்படி மத்திய ஆசியப் பிரதேசத்தில் பௌத்த சமயம் காணப்பட்டது. குறிப்பாக இஸ்லாமிய சமயப் பரம்பல் இடம்பெறுவதற்கு முன்பு சமர்கண்ட், போகோஸ் கோய் ஆகிய பிரதேசங்களில் பௌத்த சமயம் நிலவியது.

iii) ஆப்கானிஸ்தானில் இஸ்லாம் பரவமுன்னர் புத்தகுருமாரும், பிரா மணர்களும் வாழ்ந்து வந்தனர். இதற்கு சான்றாக ஆப்கானிஸ்தானி லுள்ள பாமியன் புத்தர் சிலைகளை குறிப்பிடலாம்.

iv) சிவ வழிபாடு, விஷ்ணு வழிபாடு என்பன மத்திய ஆசியப் பிரதேசத்தில் நிலவியமைக்கான சான்றுகள் கிடைத்துள்ளது.

v) இந்தியாவிற்கு வந்த வர்த்தகர்கள் மூலம் மத்திய ஆசியாவில் இந்து சமயமும் பௌத்த சமயமும் பரவியிருக்கலாம் என நம்பப்படுகிறது.

**16. சீனாவில் பௌத்த மதச் செல்வாக்கு**

i) சீனாவில் பிரதானமாக கொன்பியூசியஸ் சமயம், தாவோவின் சமயம், பௌத்த சமயம் ஆகிய மூன்று சமயங்கள் காணப்பட்டன.

ii) காசியப்ப மாதங்க தேரர் அல்லது சூ பாலன் என்ற மத்திய ஆசிய பௌத்த பிக்குகளால் பௌத்த சமயம் சீனாவிற்கு அறிமுகப்படுத் தப்பட்டதாக நம்பப்படுகிறது.

iii) சீனாவை ஹங் அரச வம்சம் ஆட்சி செய்த காலத்தில் பௌத்த சமயம் சீனாவிற்கு கொண்டுவரப்பட்டதாகவும் அப்போது கொன்பியூசியஸ் சமயம் பிரபல்யம் பெற்றதால் பௌத்த சமயம் முக்கியத்துவம் பெறவில்லை.

iv) ஆயினும் கி.பி 4ஆம் நூற்றாண்டில் ஆட்சிக்கு வந்த "செய்" அரச வம்சத்தினர் பௌத்த மதத்தவராகையால் பௌத்தசமயத்திற்கு ஆதரவு கிடைத்தது.


பௌத்த கட்டடக்கலைச் சிறப்பை பிரதிபலிக்கும் "கன்ரொன் லூயுங்" (சீனா)

v) நந்தி என்ற கப்பல் உரிமையாளர் தேவராசா பிக்குணி தலைமையில் பிக்குணிகள் குழு ஒன்று சீனாவிற்கு அழைத்துச் செல்லப்பட்டு பிக்குணிகள் சாசனத்தை நிறுவினர்.

vi) புண்ணிய சார, தர்மருசி, புத்தயசஸ், சங்கபத்ர ஆகிய தேரர்கள் சீனாவிற்குச் சென்று தர்மசாஸ்திர நூல்களை சீன மொழியில் மொழிபெயர்த்தனர்.

vii) பாகியன், ஹியுங்சாங், இத்சிங் ஆகிய சீனப் பிக்குகள் இலங்கை, இந்தியா போன்ற நாடுகளுடன் பௌத்த தொடர்புகளைப் பேணியமை.

viii) கோட்டை காலத்தில் செங்கோ என்ற சேனாதிபதி இலங்கைக்கு வந்து பௌத்த சமய நடவடிக்கைகளில் பங்கு பற்றியமை.

**17. பர்மாவில் (மியான்மார்) பௌத்தமதச் செல்வாக்கு**

i) அசோகச் சக்கரவர்த்தி "சுவர்ணபூமி" எனப்பட்ட பர்மாவிற்கு சமயத் தூதர்களாக பிக்குகளை அனுப்பியமை.

ii) சோன, உத்தர எனும் தேரர்கள் பர்மாவிற்கு சமயச் செய்திகளைக் கொண்டு சென்றனர்.

iii) தற்கால போம், ஹமங்சா நகரங்களில் கிடைக்கப்பெற்ற தொல்பொருள் களிலிருந்து பர்மா பிரபல்யமான பௌத்தநாடு என்பது நிரூபிக்கப் பட்டுள்ளது. அதேவேளை தென் பர்மாவில் "சீஹல சங்க நிக்காய" என்ற மதப்பிரிவும் காணப்பட்டது.

iv) பொலநறுவை கால 1ஆம்விஜயபாகு, மகாபராக்கிரமபாகு மன்னர்கள் பர்மாவுடன் வர்த்தக கலாசார தொடர்புகளை கொண்டிருந்தனர் என சூளவம்சம் கூறுகிறது.

v) மகாவிஜயபாகு மன்னனுக்கு கப்பல் நிறையப் பொருட்களை பர்மா அனுப் பிய அதேவேளை உபசம்பதா சடங்


பர்மிய சாம்பி விகாரை

கினை நடாத்த பர்மாவிலிருந்து பிக்குகள் இலங்கை வந்ததாகவும் கூறப்படுகிறது.

vi) இலங்கை வந்த பர்மியதேரர் அந்நாட்டு அரசனின் ஆலோச னைப்படி பிக்குமார் சங்கத்தில் சீர்திருத்தங்களை மேற்கொண்ட தாக பர்மாவின் கல்யாண கல்வெட்டு கூறுகிறது.

vii) கி.பி 1527இல் ஆவா நகரில் இருந்து வந்த தோஹன்பவா அரசன் 3000 பிக்குகளை கொலை செய்தமையால் அமைச்சர் ஒருவரால் மன்னன் கொலைசெய்யப்பட்டான்.

viii) கி.பி 1605இல் மகா தர்மராஜ அரசன், விகாரைகளை அழித்த போர்த்துக்கேயரைக் கொலை செய்தான்.

ix) இலங்கையிலிருந்து பர்மா சென்ற பிக்குமார்கள் கி.பி 1807 இல் அமரபுர கல்யாண வங்ஸ நிக்காயவையும், கி.பி 1810 இல் அமரபுர ஸ்ரீ தர்மரக்கித்த நிக்காயவையும் நிறுவியதாகக் கூறப்படுகிறது.

**18. சீயம் (தாய்லாந்து)**

i) கங்காரதேசம் என அழைக்கப்பட்ட தாய்லாந்தில் பௌத்த, இந்துமத செல்வாக்கை காணமுடிகின்றது.

ii) பர்மா தேசத்திலிருந்து தாய்லாந்திற்கு பௌத்த சமயம் பரவியதாக நம்பப்படுகிறது.

iii) தாய்லாந்தின் ரோச்சராஜ மன்னன் தம்பதெனியா யுகத்தில் புத்தர் சிலைகளை பெற்றதாக "ஜினகாலமாணி" என்ற நூல் குறிப்பிடுகின்றது (இலங்கையிலிருந்து எடுத்துச்செல்லப்பட்ட புத்தர்சிலை புத்தசீல சியங்மென் விகாரையில் வைக்கப்பட்டுள்ளது).

iv) இலங்கையிலிருந்து சென்ற சுமணதேரர், ஆனந்ததேரர் ஆகிய இருவராலும் தாய்லாந்தில் பௌத்த சமயத்திற்கு சேவைகள் ஆற்றப்பட்டது.

v) அநுராதபுர புனித வெள்ளரசுக்கிளை ஒன்று தாய் லாந்தின் சுகோதய விகாரையில் நடப்பட்டது.

vi) கி.பி 1425 இல் களனியில் இடம்பெற்ற உபசம்பதா சடங்கிற்கு தாய்லாந்து தேரர்கள் வருகை தந்ததாக "ஜினகாலமாலி" என்ற நூல் கூறுகிறது.

vii) கி.பி 1753இல் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனுடைய காலத்தில் வருகை தந்த உபாலிதேரர் உட்பட பிக்குகள் வெலிவிட்ட சரணங்கரா தேரர் உட்பட பல பிக்குகளுக்கு உபசம்பதா சடங்கனை நடாத் தியமை.

viii) தற்போதும் சங்கராஜ பதவி தாய்லாந்தில் நிலவுகின்றமை குறிப் பிடத்தக்கது.

**19. ஜாவா. சுமாத்திரா**

i) இந்தோனேசிய தீவுக் கூட்டத்தில் இந்து, பௌத்த சமயங்கள் செல்வாக்கு பெற்றிருந்தன.

ii) தேரவாத பௌத்தம் இங்கு பிரபல்யம் பெற்றதாக இத்சிங் தேரரின் அறிக்கை கூறுகிறது.

iii) ஜாவாத்தீவில் "போரோ புதூர்" விகாரை பௌத்தர்களின் புனிததலமாகவுள்ளது. இது இயற்கைச் சிறுகுன்றை முற்றாக மூடுமாறு அமைக்கப்பட்ட பெரிய பௌத்த விகாரை ஆகும்.

iv) போரோ புதூர் விகாரையில் புத்தரின் முற்பிறவி பற்றிய தகவல்கள் செதுக்கல்கள் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது.



போரோ புதூர் விகாரை



அங்கோர்வாட் தலம்

**20. கம்பூச்சியா**

I அங்கோர் அரசர்களின் காலத்தில் மகாயான பௌத்தம், இந்து சமயம் என்பன பரவியிருந்தன.

ii) கற்களைக் குடைந்து கோவில்களை அமைத்தனர்.

iii) முதலில் விஷ்ணுவுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட அங்கோர் வாட் எனப்படும் இந்து மதக் கட்டிடங்கள் வியப்புத்தரும் சிறந்த கட்டிடங்களாகும்.

**21.இலங்கை தென்கிழக்கு ஆசியாவுடன் கொண்டிருந்த தொடர்புகள்**

i) மகாவிஜயபாகு, மகாபராக்கிரமபாகு போன்ற பொலனறுவ கால மன்னர்கள் தென்கிழக்கு ஆசிய நாடுகளுடன் தொடர்புகளைப் பேணிவந்தனர்.

ii) மகாவிஜபாகு காலத்தில் உபசம்பதா விழாவை நடாத்த பிக்குகள் பர்மாவிலிருந்து வருகை தந்தனர்.

iii) மகாபராக்கிரமபாகு பர்மாவுக்கு எதிராக படையெடுத்தபோது "நகரகிரி கீர்த்தி" என்ற படைவீரனுக்கு நிலம் அன்பளிப்பு செய்யப்பட்டதாக தெவனகல கல்வெட்டில் கூறப்பட்டது.

iii) சுமத்திராவில் பலெங்கே என்ற இடத்தில் பெறப்பட்ட அவலோகி தேஸ்வர சிலை, சித்துல் பவ்வ சிலையை ஒத்ததாகக் காணப்படுகிறது.

iv) போரோபுதூர் விகாரையை அமைக்கும் போது இலங்கையின் கலைச் செல்வாக்கு பெறப்பட்டதாக நம்பப்படுகிறது.

v) ஜாவா நாட்டில் அபயகிரி விகாரையின் கிளை நிறுவப்பட்டதாக குறிப்பிடப்படுகின்றமை.

# 7 மத்திய கால ஐரோப்பாவின் அரசியல், பொருளாதார கலாசார வளர்ச்சி

**1. மேலைத்தேய அறிஞர்கள் ஐரோப்பிய வரலாற்றை வகைப்படுத்திய முறைகள்.**

i) புராதனகாலம்: - நாகரிகம் தோன்றியது முதல் கி.பி 5ஆம்நூற்றாண்டு வரையிலான காலப்பகுதி.

ii) மத்தியகாலம்: - கி.பி 5ஆம் நூற்றாண்டு முதல் 15ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதி.

iii) நவீன காலம்: - கி.பி 15ஆம் நூற்றாண்டுக்கு பிற்பட்ட காலப்பகுதி.

**2. மத்திய காலத்தின் முற்பகுதியானது இருண்ட காலம் என அழைத்தமை.**

- மத்திய காலத்தின் முற்பகுதியில் உறுதியற்ற ஆட்சி நிலவியதோடு, கல்வி, விஞ்ஞான துறைகளில் முன்னேற்றம் அடையாதிருந்தமை காரணமாகவே "இருண்டகாலம்" என அழைத்தனர்.

**3. மானிய முறை என்றால் என்ன?**

I) மன்னர் தொடக்கம் கீழ்மட்ட நில உடைமையாளர் வரை எல்லோராலும் நில உரிமைக்காக நிறைவேற்ற வேண்டிய பொறுப்புக்கள் அனைத்தையும் ஒன்றிணைத்த சமூக அமைப்பே மானிய முறையாகும். - "ஸ்டப்ஸ்" என்ற வரலாற்றாசிரியர் கூறியது.

ii) வேறுவிதமாகக் கூறின் நிலத்தை அனுபவிப்பதற்காக சேவையை வழங்குவதனை அடிப்படையாகக் கொண்ட அரசியல், சமூக, பொருளாதார, கலாசார அமைப்பு முறையே மானிய முறையாகும்.

**4. மானிய முறையின் பொதுப் பண்புகள்**

i) நில உடைமையாளனுக்கும் பண்ணை அடிமைகளுக்கும் இடையிலுள்ள தொடர்புகள்.

ii) தனி நபர்களை அடிப்படையாகக் கொண்ட ஆட்சி முறை.

iii) நிலத்தை அனுபவிப்பதற்காக சேவைகளை வழங்குதல்.

iv) பிரதேச ஆட்சியாளர்களிடம் தனிப்பட்ட படைப்பிரிவு காணப் படல்

v) நில அடிமைகளுக்காக ஆற்ற வேண்டிய ஏராளமான பொறுப் புகள் நில உடைமையாளர்களுக்கு இருந்தல்.

**5. மானிய முறையின் தோற்றத்துக்கான காரணங்கள்.**

i) **மிலேச்சர்களின் ஆக்கிரமிப்புக்கள்.**
கி.பி 5ஆம் நூற்றாண்டு முதல் நாகரிகமற்ற முரட்டு இனத்தவர்களின்

படையெடுப்புக்களால் குறிப்பாக ஜேர்மனியிலிருந்து மேற்கொண்ட மிலேச்சர்களின் (கொத்து, விசித்கொதி, வண்டல்கள், பிராங்கு, ஒஸ்ரோகொத், கூணர்) ஆக்கிரமிப்புகளால் நிலைத்து நின்ற உரோமப் பேரரசு விழ்ச்சியடைந்தமை.

ii) **கரோலிஞ்சியப் பேரரசின் வீழ்ச்சி.**
கி.பி 9ஆம் நூற்றாண்டளவில் மேற்கு உரோமானியப் பேரரசின் பரவலான அதிகாரத்தை கொண்டிருந்த கரோலிஞ்சியப் பேரரசின் புகழ் பெற்ற மன்னன் "சார்லமேன்" இறந்ததை தொடர்ந்து நாட்டில் உள்நாட்டுப் போர்கள் ஏற்பட்டன. இதனால் **வடக்கிலிருந்து வைகிங்குகளும், கிழக்கிலிருந்து ஹன்களும், தெற்கிலிருந்து முஸ்லீம்களும்** ஆக்கிரமிப்புகளை மேற்கொண்டமை இப்பேரரசின் வீழ்ச்சிக்கு வழி வகுத்தது.

iii) **பிரபுக்களின் ஆதிக்கம்.**
மத்திய நிர்வாக முறையில் உறுதியற்ற தன்மை ஏற்பட்டதனைத் தொடர்ந்து பிரபுக்கள் அதனை சாதகமாக பயன்படுத்தி தமது செல்வாக்கினை பெருக்கினர். மன்னரும் பிரபுகளின் உதவியினை நாடினர்.

iv) **அடிமைகளின் தோற்றம்.**
கரோலிஞ்சிய மன்னர் சார்லமேனின் மறைவுடன் உள்நாட்டில் ஏற்பட்ட குழப்பங்களால் நிலங்கள் பறிக்கப்பட்டன. மக்கள் பாதுகாப்பற்றவர்களாக மாறினர். இதனால் அடிமைகளின் தோற்றம் இடம்பெற்றது.

## 06. மானிய முறையின் பண்புகள்

### 1. அரசியல்

i) சமூகத்தில் எல்லா நபர்களும் ஏதோ ஒரு விதத்தில் அதிகாரி ஒருவருக்கு கட்டுப்பட்டிருந்தனர்.
உ-ம்: அரசனுக்கு அடுத்து பிரபுக்களும் அவர்களுக்கு அடுத்து நைட்டுகளும் நைட்டுகளுக்கு கீழ் குடிமக்களும் கட்டுப்பட்டு இருந்தனர்.

ii) அதிகாரப் பரவலாக்கல் இடம் பெற்றிருந்தது.

iii) அரசாங்கத்திற்கு என இராணுவப்படை ஒன்று இல்லாமை.

iv) பிரபுக்களும் பிரதேச ஆட்சியாளர்களும் சுதந்திரமாகச் செயற்பட்டமை.

v) நீதி அதிகாரங்கள் பிரபுக்களிடமே காணப்பட்டது.

vi) பிராந்திய ஆட்சியாளர்களிடம் சொந்த இராணுவப்படை காணப்பட்டமை.

vii) பிரபுக்களிடையே ஆதிக்கப் போட்டி நிலவியமை.

### 02. பொருளியல்

i) சுயதேவைப் பூர்த்திப் பொருளாதார முறை நிலவியமை.

ii) விவசாயமே பிரதான முயற்சியாகக் காணப்பட்டமை.

iii) விவசாயத்தில் நிலமாற்று முறையும் பயிர்மாற்று முறையும் மேற்கொள்ளப்பட்டமை.

iv) மானிய நிலத்தைக் கூறுகளாக்கி நில அடிமைகளிடம் பகிர்ந் தளித்தமை.

v) பண்ணை அடிமைகள் தமது நிலத்தில் சீவனோபாயத்தில் ஈடுபட்ட தோடு பிரபுக்களின் நிலத்தில் இலவசமாகச் சேவையாற்றியமை.

vi) சிறுகைத்தொழில்கள் காணப்பட்டமை.
உ-ம்: தானியம் குற்றும் ஆலைகள், பேக்கரிகள்

vii) மிகை உற்பத்தி காணப்படாத போதும் வியாபாரம் சிறிதளவில் பண்டமாற்று முறையீடு மேற்கொள்ளப்பட்டது.

**03.சமூகம்**

i) பிறப்பை அடிப்படையாகக் கொண்ட சமூக அந்தஸ்து காணப்பட்டமை. குறிப்பாக பிரபுக்கள் உயர்ந்தவர்களாகவும், அடிமைகள் தாழ்ந்தவர்களாகவும் இருந்தமை.

ii) சாதாரண மக்களுக்கு நில உரிமை இருக்கவில்லை.

iii) நிலத்தை அனுபவிப்பதற்கு பதிலாக பிரபுக்களுக்கு காணிக்கை செலுத்த வேண்டியிருந்தமை.

iv) பிரபுக்கள் சுகபோக வாழ்க்கை வாழ குடிமக்கள் அடிமைகளாக வாழ்ந்தமை.

v) கத்தோலிக்க திருச்சபைக்கு அரசியல், சமூக விடயங்களில் பெரும் செல்வாக்குக் காணப்பட்டமை.

vi) துறவியர் மடங்களையும் தேவாலயங்களையும் மையமாகக் கொண்டு கல்வி வளர்ச்சியடைந்தமை.

vii) சகல கலைகளும் சமயத்தை அடிப்படையாகக் கொண்டி ருந்தமை.

**7. மானிய முறையின் வீழ்ச்சிக்குரிய காரணங்கள்.**

- அரசர் முதல் சாதாரண மக்களையும் நிலத்தின் துணையுடன் இணைத்திருந்த நிலமானியமுறை 12ம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து ஐரோப்பாவில் செயலிழந்தது.

i) **வர்த்தகக் கொடுக்கல் வாங்கல்கள் விருத்தியடைந்தமை.**
பண்டமாற்றின் அடிப்படையில் கட்டியெழுப்பப்பட்ட இச்சமுதாய அமைப்பு பணத்தின் வருகையைத் தொடர்ந்து பிரபுக்களின் நிலங்களில் உழைப்பதற்குப் பதிலாக மக்கள் பணம் செலுத்தி தம்மை விடுவித்தனர் இதனால் நிலஉரிமை அடிப்படையிலான சேவைக்குப் பதிலாகப் பணத்தைச் செலுத்தும் முறை தோன்றியமை.

ii) **பணப் பாவனை, நகரங்கள் உருவாகியமை.**
முஸ்லிம்கள் கொன்ஸ்தாந்தி நோபிள், அலெச்சாந்திரியா வரை பொருட்களை எடுத்துவந்தாலும் பிரான்ஸ், இத்தாலி, ஸ்பானியா

மன்னர்கள் வர்த்தகத்தில் ஈடுபட்டதாலும் வர்த்தக வளர்ச்சி ஏற்பட்டதோடு நகரங்கள் தோன்றியமை. வங்கியாளர், வர்த்தகர், கப்பல் உரிமையாளர், வாகன உரிமையாளர் ஆகியோரின் எழுச்சியினால் பிரபுக்கள் அனுபவித்த சலுகைகள், அதிகாரங்கள் குறைவடைந்தமை.

iii) **சிலுவைப் போர்கள் ஏற்பட்டமை.**
கிறிஸ்த்தவர்களின் புனித தலமான ஜெருசலத்தை கி.பி 637ல் முஸ்லிம்கள் கைப்பற்றிக் கொண்டதால் இரு இனத்தவருக்குமிடையில் கி.பி 1097 முதல் 1250 வரை அவ்வப்போது 8 போர்கள் நடந்தன. இதில் பிரபு குலத்தவர்கள் பலர் இறந்தனர். இதனால் பிரபுகள் தமது அடிமைகளை விடுவித்து போரில் ஈடுபடச்செய்தனர். இதில் பெரும்பாலானவர்கள் போருக்கு செல்லாமல் வியாபாரம் செய்தனர். வேறுசிலர் பணம்செலுத்தி தம்மை அடிமைத் தன்மையிலிருந்து விடுவித்துக் கொண்டதால் மானிய முறை வீழ்ச்சியடைந்தது.

iv) **கொள்ளை நோய்கள், பஞ்சங்கள் ஏற்பட்டமை.**
கிபி 1315 முதல் 1317 வரை ஐரோப்பாவில் உண்டான பஞ்சமும், கி.பி 1347 முதல் 1350 வரை ஏற்பட்ட கருங்கொள்ளை நோயும் (Black death) காரணமாக ஐரோப்பாவின் மூன்றிலொரு பங்கினர் மரணிக்க காரணமாகியது. இதனால் பிரபுக்களின் நிலங்களில் தொழிலாளர் பற்றாக்குறை ஏற்பட்டதனால் பொருளாதாரம் நலிவடைந்தமை.

**சிலுவைப் போர்கள்.**

**8. சிலுவைப் போர்கள் என்றால் என்ன?**

i) கி.பி 600 அளவில் முஸ்லிங்களால் கைப்பற்றப்பட்ட கிறிஸ்தவர்களின் புனித தலமான ஜெருசலத்தை மீட்டுக் கொள்வதற்காக ஐரோப்பிய கிறிஸ்த்தவர்களினால் மேற்கொண்ட யுத்தம் சிலுவைப் போர் எனப்படுகின்றது.

ii) புனித பூமியை இஸ்லாமியர்களிடமிருந்து மீட்டுடெடுப்பதற்கு பாப்பாண்டவரின் அனுமதியுடன் ஐரோப்பிய கிறிஸ்தவர்கள் சிலுவை அணிந்துகொண்டு போரில் ஈடுபட்டதனால் சிலுவைப்போர்கள் என அழைக்கப்பட்டது.

**9.சிலுவைப் போர்களில் ஈடுபட்டவர்களுக்கு பாப்பாண்டவர் வழங்கிய வாக்குறுதிகள்.**

- கி.பி 1095ல் பாப்பாண்டவர் இரண்டாம் எர்பன், பிரான்ஸின் கிளர்மொன்ற் என்ற இடத்தில் வைத்து பின்வரும் வாக்குறுதிகளை வழங்கினார்.

i) அனைவரினதும் பாவங்கள் மன்னிக்கப்படும்.

ii) இறப்பவர்கள் விண்ணுலகம் செல்வார்கள்.

iii) இறப்பவரின் குடும்பத்திற்கும், சொத்துக்கும் திருச்சபை பாதுகாப்பளிக்கும்.

iv) குற்றவாளிகள் ஆயின் தண்டனைகள் நீக்கப்படும்.

v) போரில் ஈடுபடுபவர்களின் கடன்கள் தள்ளுபடி செய்யப்படும்.

**10.சிலுவைப் போரின் வகைகள்.**

- சிலுவைப் போர்கள் எட்டு நடைபெற்றுள்ளன. அவற்றுள் முதல் மூன்று சிலுவைப் போர்கள் முக்கியமானவை.

i) 1வது சிலுவைப் போர் - கி.பி 1096 - 1099 (வெற்றியளித்தது).
ii) 2வது சிலுவைப் போர் - கி.பி 1147 - 1187
iii) 3வது சிலுவைப் போர் - கி.பி 1189 - 1190
iv) 4வது சிலுவைப் போர் - கி.பி 1202 - 1204
v) 5வது சிலுவைப் போர் - கி.பி 1218 - 1221
vi) 6வது சிலுவைப் போர் - கி.பி 1228 - 1229
vii) 7வது சிலுவைப் போர் - கி.பி 1248 - 1250
viii) 8வது சிலுவைப் போர் - கி.பி 1270ல் தொடங்கி தொற்று நோயினால் மன்னனும், வீரர்களும் இறக்க இடையில் இப்போர் கைவிடப் பட்டது.

**11.சிலுவைப் போருக்கான காரணங்கள்.**

i) புனித பூமியான ஜெருசலத்தை மீட்பதற்காக.
ii) துருக்கியர்களின் கொடூர செயல்கள்.
iii) இஸ்லாமிய சமயத்தின் பரவல்.
iv) பிரபுக்களின் ஆதிக்கம் நிலவியமை.
v) பைசாந்தியப் பேரரசு துருக்கியரிடம் வீழ்ச்சியடைந்தமை.
vi) ஐரோப்பிய வணிகர்கள் துன்பப்பட்டமை.

**12.சிலுவைப் போர்களின் போது கிறிஸ்தவர்கள் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்.**

i) கிறிஸ்தவர்களிடத்தில் ஒற்றுமையின்மை நிலவியமை.
ii) சிறந்த தலைமைத்துவமின்மை.
iii) துருக்கியர் சிறந்த போர்முறைகளை கையாண்டமை.
iv) போரில் ஏற்பட்ட அதிக இழப்புகள்.
v) பைசாந்தியப் பேரரசின் உதவி கிடைக்காமை.

**13.சிலுவைப் போர்களின் விளைவுகள்.**

i) ஐரோப்பியரின் போர்க்கலை வளர்ச்சியடைந்தது. எடுத்துக்காட்டாக குறுக்கே எய்யும் அம்பின் உபயோகம், கவண் கல் எறிதல், சுரங்கங்களை அமைத்தல், தகவல்களை பரிமாற புறாக்களை பயன்படுத்தியமை.
ii) முஸ்லிம்கள் சீனர்களிடமிருந்து வெடிபொருட்களின் உபயோகத்தை அறிந்து கொண்டனர்.
iii) பெண்களின் செயற்பாட்டில் மாற்றம் ஏற்பட்டது, குறிப்பாக கணவரை யுத்தத்தில் இழந்த பெண்கள் அரசியல் பொறுப்புகளை ஏற்றனர்.

iv) நிலமானிய முறை வீழ்ச்சியடைந்தமை.

v) நகரங்கள் வளர்ச்சியடைந்தது. இத்தாலியில் வெனிஸ், ஜெனோவா, புளோரன்ஸ் போன்ற வர்த்தக நகரங்கள் உருவானது.

vi) பாப்பாண்டவர்களின் செல்வாக்கு உயர்ந்தது. முதலாவது சிலுவைப்போரில் கிறிஸ்தவர்கள் வெற்றி பெற்றமையால் திருச்சபையின் மதிப்பு உயர்ந்தது.

vii) நாடுகாண்பயணங்கள் வளர்ச்சியடைந்தது. சிலுவைப்போரினால் ஐரோப்பாவின் புவியியல் அறிவு வளர்ச்சி பெற்றமையே இதற்கு காரணமாகும்.

viii) ஐரோப்பிய, ஆசிய நாடுகளிடையே வர்த்தகம் வளர்ச்சி கண்டது. அரிசி, சீனி, பழவகைகள், பருத்தித்துணி மற்றும் வாசனைத் திரவியங்கள் போன்ற கீழைத்தேய பொருட்களுக்கு மதிப்பு அதிகரித்தது.

**14. ஐரோப்பாவுக்கு ஆசியாவிலிருந்து பொருட்கள் எடுத்து வரப்பட்ட மார்க்கங்கள்.**

i) இந்தியாவிலிருந்து செங்கடல் ஊடாக அலெச்சாந்திரியாவையும், பாரசீகக்குடா ஊடாக கொன்ஸ்தாந்திநேபிளையும் அடைந்தது.

ii) சீனாவிலிருந்து பட்டுப் பாதை ஊடாக கொன்ஸ்தாந்திநேபிளை அடைந்தது.




**15. சிலுவை யுத்தங்களுடன் ஐரோப்பாவின் வர்த்தகம் வளர்ச்சியடைதல்.**

i) **ஐரோப்பியர் ஆசியப் பொருட்களுக்கு பழக்கப்பட்டனர்.** சிலுவை யுத்த காலத்தில் வந்த முஸ்லிம் வியாபாரிகள் மூலம் தங்கம், வெள்ளி, முத்து, மாணிக்கம், வாசனைத் திரவியங்கள், பலசரக்குகள், ஆடையணிகள் என்பவற்றைப் பெற்றுக் கொண்டனர்.

ii) **ஐரோப்பிய வர்த்தகத்திற்குப் புத்தொளி கிடைத்தமை.** ஐரோப்பிய வர்த்தகர்கள் கொன்ஸ்தாந்திநோபிள் போன்ற வர்த்தக நகரங்களுக்குச் சென்று முஸ்லிம் வியாபாரிகளிடம் ஆசியப் பொருட்களைக் கொள்வனவு செய்து ஐரோப்பா முழுவதும் விற்பனை செய்வதற்கு சிலுவை யுத்தங்கள் காரணமாகியது.

iii) **முடியாட்சி முறையின் கீழ் வர்த்தகம் ஒழுங்கமைக்கப்பட்டமை.** சிலுவைப் போர்களால் மானிய முறை வீழ்ச்சியடைந்து முடியாட்சி முறை தோற்றம் பெற்றது. இப்புதிய ஆட்சியின் கீழ் ஐரோப்பிய நாடுகளின் தேசிய வர்த்தகக் கொள்கை; தேசிய வரிக்கொள்கை என்பன வகுக்கப்பட்டு வர்த்தகம் பாதுகாக்கப் பட்டது.

iv) **புதிய முடியரசுகளின் மன்னர்கள் வர்த்தக விருத்திக்கு நேரடியாக உதவியமை.** மன்னர்கள் சுய புகழ்ச்சிக்கு அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொள்வதற்கும் பணத்தை சம்பாதித்துக் கொள்ளும் ஒரு வழி முறையாக நாடுகாண் பயணங்களுக்கும் வர்த்தக நடவடிக்கைகளுக்கும் உதவ முன்வந்தனர்.

v) **வர்த்தக நடவடிக்கைகளை இலகுபடுத்த முயற்சித்தமை.**
வெளிநாடுகளுடன் வர்த்தக கொடுக்கல் வாங்கல்களை மேற் கொள்ளும் போது காசுப் பொதிகளைப் பாதுகாப்பதற்காக செலாவணி உண்டியல்கள், வங்கி முறைமைகள் அறிமுகப் படுத்தப்பட்டதால் கொடுக்கல் வாங்கல்கள் இலகுபடுத்தப்பட்டது.

vi) **ஒன்றிணைந்த வர்த்தக முயற்சிகள் தோன்றிமை.**
தனியார் வர்த்தக முயற்சிகள் இடர்பாடுகளுடன் கூடிய படியால் ஒன்றிணைந்த வர்த்தகக் கம்பனிகள் தோன்றியமை.
உ-ம்: 1600 ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனி
1602 டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனி

**16. ஐரோப்பாவிற்கான வர்த்தக மார்க்கங்கள் தடைப்பட்டதற்கான காரணங்கள்.**

i) கி.பி 1453ல் கொன்ஸ்தாந்திநேபிள் துருக்கியரிடம் வீழ்ச்சி யடைந்தமை.
ii) இஸ்லாமிய துருக்கியர் வர்த்தகநடவடிக்கைகளுக்கு இடையூறு விளைவித்தமை.
iii) கடல் மார்க்கமான அறிவு ஐரோப்பியரிடத்தே வளர்ச்சியடையாமை.

**17. வர்த்தக மார்க்கங்கள் தடைப்பட்டமையால் ஏற்பட்ட விளைவுகள்.**

i) உயர்ந்த விலைகளில் பொருட்களைக் கொள்வனவு செய்ய வேண்டியிருந்தமை.
ii) துருக்கியர்களால் தீர்வைகள் உயர்த்தப்பட்டமை.
iii) உரிய காலத்தில் பொருட்கள் கிடைக்காமை.
iv) வர்த்தக நகரங்கள் மதிப்பிழந்தமை.
v) நாடுகாண் பயணங்களில் ஐரோப்பியர் கவனம் செலுத்தியமை.

**மறுமலர்ச்சி**

**18."மறுமலர்ச்சி" என்ற பதத்தின் பொருள்.**

i) மறுமலர்ச்சி என்பதற்கு எளிமையான பொருள் "மீண்டும் மலர்தல்" என்பதாகும்.

ii) உரோம, கிரேக்க நாகரிகங்கள் "மறுபிறப்பு" என விளக்குகிறது.

**19.மறுமலர்ச்சி - வரைவிலக்கணம்.**

i) சமகால ஐரோப்பாவின் பல நாடுகளில் அரசியல், சமூக, சமய, கலாசார, பொருளாதார, விஞ்ஞானம் ஆகிய துறைகளில் அனைத்திலும் உண்டான புதிய எழுச்சியே மறுமலர்ச்சி எனப்படும்.

ii) மத்திய காலத்துக்கும் நவீனகாலத்துக்கும் இடைப்பட்ட காலத்தினை வரலாற்றில் மறுமலர்ச்சிக் காலம் எனலாம்.

**20.மறுமலர்ச்சி தோன்றுவதற்கான காரணங்கள்.**

- மறுமலர்ச்சிக்கு சில உடனடிக் காரணங்களும், நீண்ட காலக் காரணங்களும் காணப்படுகின்றன.

i) **கி.பி 1453ல் துருக்கியர்கள் கிழக்கு உரோமப் பேரரசின் தலைநகரான கொன்ஸ்தாந்திநோபிளை கைப்பற்றியமை உடனடிக் காரணம் ஆகும்.** இதனால் அங்கே பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்த பண்டைய கிரேக்க உரோமானிய இலக்கியங்களை கல்விமான்கள் எடுத்துக் கொண்டு மேற்கு ஐரோப்பாவுக்கு (குறிப்பாக இத்தாலிக்கு) தப்பிச் சென்றனர். அங்கே அவை ஆராயப்பட்டு புதிய சிந்தனைகள் உருவாக்கப்பட்டதால் சமயஇலக்கியங்களின் புகழ் குறைந்து மறுமலர்ச்சிக்கு வித்திட்டது.

ii) **வர்த்தக தொடர்புகளின் விருத்தி.** 12ஆம் நூற்றாண்டளவில் ஐரோப்பாவில் வியாபாரத்தில் ஏற்பட்ட அபிவிருத்தியால் இத்தாலி நகரங்களில் பணக்கார வகுப்பொன்று உருவாகியதால் கலைத்துறை வளர்ச்சிகளுக்கு உதவ முன்வந்தமை.
உ-ம்: மிலானில் ஸ்நேஸா, புளோரன்ஸில் மெடிஸி, பூராவில் எஸ்டே, மாண்டுவாவில் கொன்ஸாகா போன்ற பணக்காரக் குடும்பத்தினர் உதவியமை.

iii) **பாப்பரசர்களின் ஆதரவு கிடைத்தமை.** மனிதாபிமான பாப்பரசராகக் கருதப்படும் 5ஆம் நிக்கலஸ் வத்திக்கானில் நூல்நிலையம் ஒன்றை நிறுவுவதற்கு ஆதரவளித்தமை. அத்துடன் 6ஆம் அலெக்ஸாண்டர், 2ஆம் ஜூலியஸ், 10ஆம் லியோ போன்ற பாப்பரசர்கள் இத்தாலியின் கலை வளர்ச்சிக்கு ஆதரவு வழங்கியமை.

iv. **பல்கலைக்கழகங்கள் தோன்றியமை.** இத்தாலியில் 12ஆம் நூற்றாண்டளவில் தோன்றிய பல்கலைக் கழகங்கள் கலைகளின் நவீனத்துவத்திற்குத் தேவையான அறிவு பூர்வமான சூழலை உருவாக்கி சுதந்திர சிந்தனைக்கு வழி கோலியமை.

**21.மறுமலர்ச்சியின் பிரதான கட்டங்கள்.**

i) கலாசார மறுமலர்ச்சி(பெரியளவில் எழுச்சி)

ii) விஞ்ஞான மறுமலர்ச்சி.

iii) சமய மறுமலர்ச்சி
iv) நாடுகாண்பயணங்களில் மறுமலர்ச்சி

**22. மறுமலர்ச்சியின் பிரதான பண்புகள்**

i) சமயத் தன்மையுடன் கூடிய கலைகளும் இலக்கியங்களும் உலகியல் தன்மையைப் பெறத் தொடங்கியமை.

ii) கலைத்துறையில் உலகியல் சுகங்களையும் செல்வங்களையும் மதித்து உலகியல் ரசனையை எதிர்பார்த்த தனவந்தர்கள் கலைஞர்களுக்கு ஆதரவு வழங்கியமை.

iii) ஆற்றல்மிகு கலைஞர்கள் தமது தனித்துவம் மிளிரும் வண்ணம் ஆக்கங்களைப் படைக்கும் சந்தர்ப்பம் கிடைத்தமை.

iv) தனிநபர் ஆற்றலைக் காண்பித்து சுய விருப்பங்களை நிலை நாட்டிக் கொள்வதற்கு முயற்சித்ததால் மத்திய காலத்தில் நிலவிய கூட்டுத்தன்மை இல்லாமற் போனமை.

v) மானிடவாதக் கொள்கை வலுப்பெற்றமை. எல்லாவற்றையும் விட மனிதன் முக்கியமானவன் என்பதே இக்கொள்கையின் விளக்கமாகும்.

vi) மனிதன் தன்னைப்பற்றி அறியவும் ஆராயவும் அக்கறை கொண்டமை. குறிப்பாக மனிதனானவன் அறிவு, விவாதம், இரசனை என்பவற்றுக்கு முக்கியத்துவமளித்து கலை, வரலாறு, சட்டம், வானியல், விஞ்ஞானம் எனும் விடயங்களை கற்கத் தூண்டப் பட்டான்.

vii) கிரேக்க. இலத்தீன் மொழிகள் புத்துயிர் பெற்றமை. மத்திய காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் இனக்குழுக்களின் மொழியே பயன்படுத்தப் பட்டதால் கிரேக்க மொழி வழக்கிழந்தது ஆயினும் மறுமலர்ச்சிக் காலத்தில் இவ்விரண்டு மொழிகளும் புத்துயிர் பெற்றமை.

viii) மறுமலர்ச்சிக் கால கலைப்படைப்புக்களில் சித்திரத்திற்கும் விசேட இடம் கிடைத்தது. சித்திரத்தின் மத்திய நிலையமாக இத்தாலியின் புளோரன்ஸ் நகரம் திகழ்ந்தமை



**கோதிக் மரபு உயர் கூரிய நுனிக் கோபுரங்களுடனான ஆலயங்கள்**



ix) மறுமலர்ச்சிக் கால கலைப்படைப்புக்களில் சிற்பங்களும் முக்கியத்து வத்துக்குரியனவாக விளங்கியது. குறிப்பாக மத்திய காலத்தில்

கோதிக் கலைமரபே கையாளப்பட்டு வந்தபோதும் மறுமலர்ச்சிக் காலத்தில் உரோமானிய கட்டட நிர்மாணத்திற்கு இசைவாக கூர்நுனிக் கோபுரங்களுடன் சரிவான கூரைகளுடனான பெரிய கட்டிடங்கள் நிர்மாணிக்கப்பட்டன.

## 23.மறுமலர்ச்சி காலத்தில் பிரபலமடைந்த நூலாசிரியர்கள்

i) இத்தாலி:- ரான்ரே(தாந்தே) மறுமலர்ச்சியின் விடி வெள்ளியாக கருதப்படு கிறார், பிரான்சிஸ் பெற்றாக், பொக்காசியோ, நிக் கோலோமக்கிய வல்லி.

ii) கிரேக்கம்:- ஹோமர்

iii) இங்கிலாந்து:- தோமஸ்மூர், பிரான்சிஸ்பேக்கன், வில்லி யம் ஷேக்ஸ்பியர்.

iv) ஒல்லாந்து:- இராஸ்மஸ்

v) ஸ்பெயின்:-
டி செர்வாண்டஸ்.



மொனாலிசா ஓவியம்



கற்பாறையில் அமர்ந்திருக்கும் கன்னி மரியாள் உருவம்

## 24.மறுமலர்ச்சிக் கால சித்திர கலைஞர்கள் பற்றிய சிறுகுறிப்புக்கள்.

i) **லியனாடோ டார்வின்ஸி (கி.பி 1452 – 1519)**

- புளோரன்ஸ் நகரில் பிறந்த இவர் சகல துறைகளிலும் புகழ்பெற்று விளங்கியதால் "முழுமனிதர்" என அழைக்கப்பட்டார்.
- ஓவியராக மட்டுமன்றி, இசைக் கலைஞனாகவும், கவிஞனாகவும், பொறி யியலா ளராகவும் விளங் கினார்.



டாவின்ஸி

- இவரது ஓவியங்களில் யேசு நாதரின் இறுதி இராப் போசனம், மோனாலிஸா இரண்டும் அழியா உலகப் புகழ்மிக்கவை.
- குருதிச் சுற்றோட்டம் பற்றிய உண்மைகளையும் கூட இவர் கண்டறிந்தார்.



யோசுநாதரின் இறுதி இராப்போசனம்

ii) **மைக்கல் அஞ்சலோ (கி.பி 1475 –1564)**

- ஓவிய, கட்டிட, சிற்ப கலைகளில் வல்லுனராகத் திகழ்ந்தார்.
- 2ஆம் ஜூலியஸ் பாப்பாண்டவரின் அனுசரனையுடன் உரோமாபுரி சிஸ்டைன் தேவாலயத்தில் வரைந்த ஓவியங்கள் பிரசித்தி பெற்றவை. உ ம்:- இறுதித் தீர்ப்பு, மனிதன் நெறிதவறுதல், பெரும் வெள்ளப்பெருக்கு.
- கற்களில் உருவாக்கப்பட்ட புனித பேதுறு தேவாலயத்திலுள்ள பீட்டர்சிலை, லொறன்ஸோ மேடிவ்வின் உருவம் உலகில் இன்று
- சிறப்பானவையாக அமைந்தன.
- விவிலியத்திலே முக்கிய புருடர்களான தாவீது, மோசஸ் ஆகிய இருவரையும் சிலைகளில் வடித்தார்.



மைக்கல் அஞ்சலோ



இறுதித் தீர்ப்பு


மோசஸின் உருவம்


பீட்டர் (இயேசுவும் மரியன்னையும்)


மெடிசியின் கல்லறை


டேவிட்

iii) ரஃபேல் (கி.பி 1483–1520)

- சமய உணர்வினைத் தூண்டும் ஓவியங்களை வரைந்தார்.
- இவரது ஓவியங்களில் அன்னைமேரி, எதென்ஸ்பாடசாலை, மடோனா ஓவியம் என்பன பிரதான இடத்தினை வகித்தன.


எதென்ஸ்பாடசாலை

iv) டிசியன் (கி.பி 1477-1576)

- மனித உருவங்களை ஓவியங்களாகத் தீட்டுவதில் புகழ்பெற்றார். பாப்பாண்டவர் 3ஆம் போல், 5ஆம் சார்ள்ஸ் ஆகியோரின் உருவங்கள் இவரால் வரையப்பட்டது.

**விஞ்ஞான மறுமலர்ச்சி.**

**25.மறுமலர்ச்சி யுகத்தின் போதான விஞ்ஞான கண்டுபிடிப்புகளும், விஞ்ஞானி களும்.**

i) **நிக்கோலஸ் கொப்பர்னிக்கஸ் (கி.பி 1473-1543)**

- போலாந்து நாட்டவரான கொப்பர்னிக்கஸ் "வானியலின் தந்தை" எனக் கருதப்பட்டார்.
- "சூரியமையக் கொள்கையை" முன் வைத்தார். அதாவது சூரியனை மையமாகக் கொண்டு கோள்கள் வட்டவடிவமான பாதையில் இயங்குகிறது என்பதனை வெளயிட்டதன் மூலம் பிரபஞ்சத்தின் மையம் பூமி என்றும் அது தட்டையான ஒரு பொருள் எனவும் மத்திய காலத்தில் நிலவி வந்த தொலமியின் கருத்தை நிராகரித்தார்.



கொப்பர்னிக்கஸ்

- பூமி தன்னைத்தானே சுற்றிக் கொண்டு, சூரியனையும் சுற்றி வலம் வருவதால் இரவு, பகல் ஏற்படுகின்றது என விளக்கினார்.
- "விண் கிரகங்களின் புரட்சி" என்ற நூல் இவரால் வெளியிடப் பட்டது.

**ஜோனன் கெப்லர் (கி.பி 1571-1630)**

- கி.பி 1571ல் ஜேர்மனியில் பிறந்த இவர் அவுஸ்ரேலியப் பல்கலைக் கழகம் ஒன்றில் வானியல், கணித பேராசிரியராக பணியாற்றினார்.
- வானியலறிஞரான இவர் கணிதச் சமன்பாடுகளைப் பயன்படுத்தி கொப்பனிக்கஸின் கருத்தை நிரூபித்தார்.
- சூரியனைப் பற்றியும், ஏனைய கோள்கள் பற்றியும் ஆராய்ந்து கெப்லரின் விதிகள் என அழைக்கப் படும் மூன்று விதிகளை முன் வைத்தார்.



கெப்லர்

1. கோள்கள் அனைத்தும் சூரியனை நீள்வட்டப் பாதையில் சுற்றி வருகின்றன. இதுவே **நீள்வளைய விதி** ஆகும்.

2. சூரியனை அண்மிக்கும் போது கோள்களின் ஓட்ட வேகம் அதிகரித்து, சூரியனை விட்டு விலகும் போது ஓட்ட வேகம் குறைவடைகின்றன. இது பரப்பு விதி ஆகும்.
3. கோள் சூரியனைச் சுற்றிவர எடுக்கும் நேரமானது சூரியனுக்கும் அக்கோளுக்கும் இடைப்பட்ட தூரத்திலேயே தங்கியுள்ளது. இது இசைவுவிதி ஆகும்.

### iii) கலிலியோ கலிலி. (கி.பி 1564– 1642)

- இத்தாலி தேசத்தவரான இவர் பீசா பல்கலைகழகத்தின் கணித பேராசிரியராவர். இவர் நடத்திக் காட்டிய ஆய்வுகளுக்காக "செய்முறை விஞ்ஞானத்தின் தந்தை" என போற்றப்பட்டார்.


கலிலியோ கலிலி


வானியல் தொலைகாட்டி

- வானியல் தொலைகாட்டியைக் கண்டுபிடித்தார். இதன் மூலம் வானியலில் இவர் படைத்த சாதனைகள் வருமாறு.
  1. கொப்பனிக்கஸின் சூரியமையக் கொள்கையை உறுதிப் படுத்தினார்.
  2. சந்திரனிலுள்ள மலைகள், குழிகளை அவதானித்தார்.
  3. வியாழனின் நான்கு உபகோள்களை அவதானித்தார்.
  4. வெள்ளிக் கிரகமும், செவ்வாய்க் கிரகமும் வெவ்வேறு காலங்களில் பருமனில் மாற்றமடைவதனை அவதானித்தார்.
  5. சூரியனில் கரும்புள்ளிகள் உள்ளன எனக்கூறினார்.
- பொருட்கள் மேலிருந்து விழும் வேகத்திற்கும் அதன் நிறைக்கும் எவ்விதமான தொடர்பும் கிடையாது என காட்டினார்(பீசா கோபுரத்திலிருந்து இதை நிறுவினார்) இதனை கலிலியோவின் விதி என்பர்.
- தனக்குத்தெரிந்த உண்மைகளை துணிந்து கூறியதால் திருச்சபையின் கண்டனங்களுக்கு உட்பட்டதுடன் நாடும் கடத்தப்பட்டடார்.

### iv) ஐசக் நியுற்றன் (கி.பி 1642–1727)

- ஆங்கில நாட்டைச்சேர்ந்த இவர் கேம்பிரிட்ஜ்பல்கலைகழகத்தின் கணித பேராசிரியராவர்.




- தோட்டமொன்றில் அப்பிள் பழம் கீழே விழுவதை அவதானித்த இவர் பொருட்கள் ஏன் கீழ் நோக்கி வீழ்கின்றது? அவை ஏன் மேல் நோக்கி செல்வதில்லை? என ஆராய்ந்து **"இழுப்பு விசையை"** கண்டறிந்தார்.
- அரியத்தை பயன்படுத்தி சூரிய ஒளியில் வானவில்லிலுள்ள ஏழு நிறங்களும் உண்டு என்பதைக் காட்டினார்.
- கி.பி 1660ல் பிரதிவிம்பத் தொலைக் காட்டி இவரால் உற்பத்தி செய்யப்பட்டது.

**V) வில்லியம் ஹாவே (கி.பி 1578– 1657)**

- ஆங்கில தேச மருத்துவரான இவர் இத்தாலியின் பாதுவாப் பல்கலை கழகத்தில் மருத்துவ பீடத்தில் பல ஆய்வுகளை மேற்கொண்டார்.
- மனிதனின் குருதிச் சுற்றோட்ட அமைப்பு பற்றி விளக்கினார். இதன் மூலம் ஈரலிலிருந்து குருதி உற்பத்தியாகிறது, இதயம் இரண்டு அவுன்ஸ் இரத்தத்தை கொள்ளக்கூடியது, இருதயம் நிமிடமொன்றுக்கு 72தடவைகள் சுருங்கி விரிகிறது, இதயம் சுருங்கி விரிவதாலேயே இரத்தம் உடல் முழுவதும் பரவிச் செல்கின்றது என்ற உண்மையை கண்டுபிடித்தார்.
- வில்லியம் ஹவேயுடன் இணைந்து சுவிஸ் நாட்டு "சரசஸ் பஸஸ்" என்பவரும், ஸ்பானியா நாட்டு "மைக்கல் சர்வேஸஸ்" என்பவரும் இணைந்து ஆய்வுகளில் ஈடுபட்டனர்.

**(vi) ஜோஹன்னஸ் கூடன்பர்க்**

- சீனர்களிடமிருந்து ஐரோப்பாவுக்குக் கொண்டு செல்லப்பட்ட அச்சிடும் முறையை அடிப்படையாகக் கொண்டு கி.பி 1447இல் அச்சு இயந்திரத்தை கண்டு பிடித்தார்.



ஜோஹன்னஸ் கூடன்ஸ்பர்க்



அச்சு இயந்திரம்

**ஐரோப்பாவில் தேசிய அரசுகளின் தோற்றம்**

**26.தேசிய அரசுகள் என்றால் என்ன?**

i) வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் வாழ்ந்த ஒரே மொழியைப் பேசுகின்ற, ஒரே கலாசாரத்தைக் கொண்ட மக்கள் குழுக்கள் அரசன் ஒருவனின் தலைமையின் கீழ் ஐக்கியப்படுதலின் மூலம் உருவாக்கப்பட்டதே தேசிய அரசு ஆகும்.

ii) மானிய முறை அழிவுற்று நவீன யுகம் ஆரம்பமாகையில் 12ஆம் நூற்றாண்டில் தேசியஅரசு அல்லது புதிய முடியாட்சி முறை உருவாகியது.

iii) பிராந்திய அரசுகள் அனைத்தையும் ஒன்றிணைப்பதற்காக **யுத்தங்கள், திருமணச் சம்பந்தங்கள், பாரம்பரியங்கள்** ஆகிய பல்வேறு முறைகளைக் கையாண்டே தேசிய அரசுகள் உருவாக்கப்பட்டன.

**27. தேசிய அரசுகள் தோன்றிய நாடுகள்**

i) ஸ்பெயின்
ii) போர்த்துக்கல்.
iii) ஒல்லாந்து
iv) இங்கிலாந்து
v) பிரான்ஸ்

**28. தேசிய அரசுகளின் பண்புகள்.**

i) சட்டவாக்க, நிர்வாக, நீதிசார் அனைத்து அதிகாரங்களும் அரசனிடம் மையப்படுத்தப்பட்ட பலம்வாய்ந்த மன்னர் ஆட்சி உருவாக்கப் பட்டது.

ii) முழு நாட்டிற்கும் பொதுவான சட்டதிட்டங்களையும் வரிக் கொள்கைகளையும் மன்னன் அமைத்து செயற்படுத்தியதனால் நாட்டினுள் ஒருமைப்பாடு உண்டானது.

iii) மன்னனிடம் சம்பளம் பெற்று முழுநேரத்தையும் போர்ச் சேவைக்காக அர்ப்பணித்த நிரந்தரப்படை உருவாகியது.

iv) மன்னனின் ஆலோசகர்களாக கடமையாற்றிய வம்சத்தலை வர்களுக்குப் பதிலாக சம்பளம் பெறும் அலுவலர்கள் உருவாகினர்.

v) அரச ஊழியர்களுக்கு சம்பளம் கொடுக்கும் முறையினால் மன்னன் அவர்களிடத்தே கடமைப்பட வேண்டிய நிலை இல்லாது போனமை.

vi) கிறிஸ்தவ திருச்சபையின் ஆதிக்கம் வீழ்ச்சியடைந்தமையால் கிறிஸ்தவ சமயம் பிளவுண்டு புரட்டஸ்தாந்து சமயம் தோற்றம் பெற்றமை.

vii) வணிக வாதம் எனும் பொருளாதார தத்துவம் முன்வைக்கப் பட்டமை.

**நாடுகாண் பயணங்கள்.**

**29.நாடுகாண் பயணங்கள் ஏற்பட்டமைக்கான காரணங்கள்.**

i) கி.பி 1453ல் துருக்கியர்கள் கொன்ஸ்தாந்தி நோபிளைக் கைப்பற்றியமை. இதனால் கிழத்தேய மேலைத்தேய வர்த்தக பாதை தடைப்பட்டமை.

ii) இதனால் ஐரோப்பிய மக்களுக்கு ஏற்பட்ட அவமானத்தை போக்க

பெஸ்டர் ஜோன் என்ற மன்னனின் கிறிஸ்த்தவ இராச்சியத்தை கண்டுபிடிக்க வேண்டிய தேவை ஏற்பட்டமை.

iii) புதிய கடல் மார்க்கங்களை கண்டுபிடிக்க வேண்டிய அறிவு, சூழ்நிலை ஐரோப்பாவில் உருவாகியதோடு தொலமியினால் உலகப்படம், திசையறிகருவி கண்டுபிடிக்கப்பட்டமை.

iv) போர்த்துக்கல் மன்னன் "கடலோடி ஹென்றி" ஸ்பானியஅரசி "இஸப்பெல்லா" போன்றவர்கள் நாடுகாண் பயணங்களை மேற்கொள் வதற்கு தேவையான உதவிகளை வழங்கி ஊக்கப்படுத்தினர்.

v) சுப்பல் கட்டும் கலையில் ஐரோப்பியர் முன்னேற்றமடைந்தனர். அத்தோடு குருமார்கள் கிறிஸ்த்தவ மதத்தை உலகெங்கும் பரப்ப முற்பட்டனர். இதனால் குருமார்கள் தமது ஆதரவை வழங்கினார்.

**குறிப்பு:** ஹென்றி கடல் பிரயாணம்பற்றிய ஆராய்ச்சி செய்வதற்கு ஒரு நிலையத்தை நிறுவினான். இங்கு மாலுமிகள் காற்று, பெருக்குநீர், வற்றுநீர் ஆகியன பற்றி விளங்கிக் கொண்டதால் இலகுவான கடல் பிரயாணங்களுக்கு உதவியது. அத்தோடு ஆபிரிக்காவின் மேற்குக் கரையோரமாக பிரயாணம் செய்து அவர்களுக்கு அனுபவரீதியான பயிற்சியை வழங்கினார்.


ஹென்றி


கொலம்பஸ்

**30.நாடுகாண் பயணங்களில் ஈடுபட்டவர்களின் சாதனைகள்.**

i) **பர்த்தலோமியு டயஸ்**

- போர்த்துக்கல் நாட்டினை சேர்ந்த மாலுமியான இவர் புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் நோக்குடன் கி.பி 1486ல் ஆபிரிக்காவின் தென்முனையை அடைந்தபோது புயலில் சிக்கி பயணம் தடைப்பட்டதால் "புயல் முனை" என பெயரிட்டான்.
- இதனை ஒரு சுப சகுணமாக நோக்கிய ஹென்றி மன்னன் பின்னர் இந்த முனைக்கு "நன்னம்பிக்கை முனை" என பெயரிட்டான்.

ii) **கிறிஸ்தோபர் கொலம்பஸ்.**

- இத்தாலியின் ஜெனோவா நகரத்தினை பிறப்பிடமாகக் கொண்ட இவர் ஏற்கனவே மத்தியதரைக் கடற்தீவுகள், ஐஸ்லாந்து போன்றவற்றுக்கு கடற்பயணங்களை மேற்கொண்டிருந்தார்.
- தனது கடற்பயணத்துக்கு இங்கிலாந்து, போர்த்துக்கல்

- மன்னர்களிடம் உதவிகோரிய போதும் அவர்கள் உதவ முன் வராததால் ஸ்பெயின் அரசி இஸப்பெல்லாவின் உதவியோடு கடற் பயணங்களை மேற்கொண்டார்.
- கி.பி 1492ல் ஸ்பெயினின் பாலோஸ் துறைமுகத்திலிருந்து மூன்று கப்பல்களுடன் புறப்பட்ட கொலம்பஸ் அத்திலாந்திக் கடலில் தான் கண்ட தீவினை இந்தியா என நம்பினார்.
- ஸ்பானியாலோ தீவிலேயே கொலம்பஸ் இறங்கியிருந்த போதிலும் இன்றும் இத்தீவுகள் மேற்கிந்தியத் தீவுகள் என அழைக்கப்பட்டு வருகின்றன.
- கி.பி 1493ல் மீண்டும் கடற்பயணங்களில் ஈடுபட்டு என்பலின் தீவுக் கூட்டத்தை கண்டுபிடித்தார். இதே போல் கி.பி 1498ல் டிரினிடாட்தீவையும், கி.பி 1503ல் நிக்கருவா தீவையும் கண்டுபிடித்தார்.
- இவ்விதம் அமெரிக்கா கண்டத்தை சூழவுள்ள கடலில் இருந்த பல தீவுகளை கண்டுபிடித்மையால் புதிய உலகம் என வர்ணிக்கப்பட்ட அமெரிக்காவை கண்டுபிடித்த பெருமை இவரையே சார்ந்தது.

**iii) அமெரிக்கோ வெஸ்புசி.**

- இத்தாலி நாட்டினை சேர்ந்த மாலுமியான இவர் கி.பி 1501ல் தென்அமெரிக்காவுக்கு பயணம் செய்து இந்தியா அல்ல புதிய கண்டம் என எடுத்துக்காட்டி னார். இதனாலேயே அதற்கு அமெரிக்கா என பெயர்சூட்டப்பட்டது.
- தான் சென்ற நீண்ட பிரேசிலின் கடற்கரை பற்றி ஒரு நூலை எழுதினார்.



வெஸ்புசி

**iv) வஸ்கொடகாமா.**

- போர்த்துக்கேயரான இவர் பத்தலோமிய டயஸ் சென்ற பாதை வழியே கி.பி 1497ல் போர்த்துக்கல் மன்னன் இமானுவலின் ஆதரவுடன் நான்கு கப்பல்களில் புறப்பட்டு ஆபிரிக்காவின் தென்முனையை கடந்து கிபி 1498ல் இந்தியாவின் கள்ளிக் கோட்டையை அடைந்தார்.
- இவரே கீழைத்தேச நாடுகளுக்கு கடல்வழியாக ஆபிரிக்காவின் தென் முனையைச்சுற்றி முதன் முதலாக இந்தியா வந்தடைந்த முதலாவது ஐரோப்பியராவர்.
- இந்தியாவுக்கு வருவதற்கு முன்னர் இடையில் மொசாப்பிக் நாட்டில் தரையிறங்கிய போது சுதேச மக்களின் ஆபத்திலிருந்து தப்பிக்கொண்டான்.



வஸ்கொடகாமா

- காமாஇப்னு, மஜித் என்ற இரு முஸ்லிம் மாலுமிகள் இவனது பயணத்துக்கு உதவினர்.
- கள்ளிக் கோட்டையை அடைந்ததும் நாம் கிறிஸ்த்தவ சகோதரர்களையும் வாசனைத் திரவியங்களையும் தேடி இங்கு வந்தோம் என கூறினார்.

V) மகலன்.

- போர்த்துக்கல் நாட்டவரான மகலனுக்கு ஸ்பெயின் நாட்டு மன்னன் 5ம் சார்ள்ஸின் ஆதரவு கிடைத்தது.
- கி.பி 1519ல் கேடிலஸ் துறை முகத்திலிருந்து புறப்பட்டு பசுபிக் சமுத்திரதத்துக்கு ஊடாக சீனாவுக்கு செல்லக் கூடிய பாதையை கண்டு பிடிக்கும் நோக்கில் பயணித்தான்.


மகலன்

- அத்திலாந்திக் சமுத்திரத்திலிருந்து பசுபிக் சமுத்திரத்திக்குள் பிர வேசிக்கும் தொடுகடலை கண்டு பிடித்தமையால் அதற்கு "மகலன் தொடுகடல" என பெயரிடப்பட்டது.
- தனது பயணத்தை ஆரம்பித்த இவர் ஒரு பெருங்கடலுக்குள் பிரவேசித்த போது அமைதியாக இருந்தால் அக்கடலுக்கு "பசுபிக் சமுத்திரம்" என பெயரிடப்பட்டது.
- பின்பு கிழைத்தேய தீவு கூட்டத்தினை அடைந்த இவர் தனது இளவரசரின் நினைவாக "பிலிப்பைன்ஸ் தீவுகள்" என பெயரிட்டார்.
- இத்தீவுகளில் வாழ்ந்த பூர்வீகக் குடிகளுடன் நடைபெற்ற சண்டையில் மகலன் கொலை செய்யப்படவே ஏனையவர்கள் ஆபிரிக்காவினை வலம் வந்து ஸ்பெயினை அடைந்தனர்.
- கடல் மார்க்கமாக உலகைச் சுற்றி பிரயாணம் செய்ததன் மூலம் உலகம் உருண்டையானது என நிருபித்த பெருமை இவரையே சார்கின்றது.

**நாடுகாண் பயணங்களும் கண்டறிந்த இடங்களும்**

1. பத்தலோமியடயஸ் - புயல்முனை
2. கொலம்பஸ் - ஸ்பானியோலோ
3. அமெரிக்கோ வெஸ்புஸி - அமெரிக்கா
4. வஸ்கொடகாமா - இந்தியா
5. மகலன் - பிலிப்பைன்ஸ்

**31. நாடுகள் பயணங்களின் விளைவுகள்.**

i. ஆசிய, ஆபிரிக்க, அமெரிக்கக் கண்டங்களில் ஐரோப்பியரின் ஆதிக்கம் பரவியமை.

ii. நாடுகளைக் கைப்பற்றலும் குடியேற்றவாதம் தோற்றம் பெறலும்

iii. சமயப் பிரச்சார நடவடிக்கைகள் பரவலடைந்தமை.

iv. வர்த்தகம் விருத்தியடைந்தமை.

v. கைத்தொழில் புரட்சிக்கு இட்டுச் சென்றமை.

vi. ஐரோப்பிய நாகரிகம் பரவலடைந்தமை.

**மதச்சீர்திருத்தம்**

**32. மதச் சீர்திருத்த இயக்கத்தின் தோற்றத்துக்கான காரணங்கள்.**

- 16ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சியே மதச்சீர்திருத்த இயக்கமாகும். ஜேர்மனியிலேயே முதலில் தோற்றம் பெற்றது.

i) **திருச்சபையில் காணப்பட்ட ஊழல்கள், மோசடிகள்:** பாப்பரசர்களும், குருமார்களும், சமயக் கல்வியில் அக்கறை காட்டாமல் மூடநம்பிக்கையில் ஊறியிருந்தனர். செல்வங்களைச் சேகரிக்கின்ற இடமாகவும் ஊழல் நிறைந்த ஓரிடமாகவும் இருந்தமையால் திருச்சபையின் அதிகாரத்துக்கு எதிராக கிளர்ச்சி செய்ய தூண்டியது.

ii) **மறுமலர்ச்சியினால் மக்கள் மத்தியில் சிந்தனைப் புரட்சி ஏற்பட்டது:** மத்தியகாலத் திருச்சபையின் அதிகாரங்கள், சமயப்போதனைகள் பற்றி நன்கு ஆராய்ந்து பாப்பரசர்களின் கட்டளைகளை ஏற்க மறுத்தனர். இதனால் பழைய கிரேக்க தத்துவங்கள் செல்வாக்குப்பெற்றன.

iii) **சிலுவைப் போர்கள்:** சமய அரசியல் காரணிகளின் அடிப்படையில் ஏற்பட்ட இப்போர்களில் பங்கு கொண்ட கிறிஸ்தவர்களின் எண்ணங்களில் மாற்றங்கள் ஏற்பட்டமை. குறிப்பாக பிறசமயங்களில் சிறந்த தத்துவங்கள் இருப்பதனை ஏற்றுக் கொண்டனர்.

iv) **பாப்பரசர்களின் எல்லையற்ற அதிகாரங்கள்:** மத்திய காலத்தின் நடுப்பகுதியில் இனசன்ற் என்ற பாப்பரசர் தான் கடவுளிலும் கீழானவர் எனவும் மனிதர்களில் மேலானவர் என்றும் தன்னை எவரும் கட்டுப்படுத்த முடியாது என்றும் கூறியமை.

v) **வொல்டென்சியன், அல்பிகென்சியன்** என்ற இரு அமைப்புகள் திருச்சபைக்கு எதிராக தோன்றியமை.

**33. கத்தோலிக்க திருச்சபைக்கு எதிராக கண்டனங்களை வெளியிட்டோர்.**

i) ஜோன் வைக்கிளிப் (பைபிளை இலத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்)

ii) ஜோன்ஹஸ் (கிறிஸ்தவ திருசபையினால் உயிருடன் எரிக்கப்பட்டார்.)

iii) இராஸ்மஸ் iv) மார்ட்டின் லூதர் v) ஜோன் கல்வின்

**34. மதச் சீர்திருத்தத்தில் மார்ட்டின் லூதரின் பங்களிப்பு.**

i) அகஸ்தியான் சபையின் போதகரான லூதர் கத்தோலிக்க திருச்சபையைக் கடுமையாக விமர்சித்தார். தனது மாணவர்களின் கவனத்துக்கென இரு கேள்விகளை முன்வைத்தார்.

1. பிறப்பிலே பாவியாக இருக்கும் ஒருவர் மீட்சி பெறுவது எவ்வாறு?
2. மனிதனுக்கு மீட்சியை தருவது திருச்சபை தானா?



ii) ஆராதனையில் பங்கேற்றல், திருச்சபைக்கு பணத்தொகைகளைப் பங்களிப்பு செய்வதன் மூலம் பாவ மன்னிப்பை பெற முடியும் என்ற கருத்தை லூதர் கடுமையாக எதிர்த்தார். இது பைபிள் போதனைகளுக்கு முரணாக இருப்பதனை கண்டு பைபிளை ஜேர்மனிய மொழியில் 1525ல் மொழி பெயர்த்தார்.

iii) ஜோன் ரெட்செல் என்ற மதகுருவால் பாவ மன்னிப்பு பத்திரங்கள் விற்கப் பட்டன. மேசன்ஸ் என்ற இடத்தை சேர்ந்த பேராயர் பதவியை நிலை நிறுத்துவதற்காக செலவிட்ட பணத்தை திருச்சபை பெறும் பொருட்டு 1517ல் பாவமன்னிப்பு பத்திரங்கள் மூலம் நிதிசேகரிக்கும் முறையை எதிர்த்து 95 நியாயங்களைக் கொண்ட பிரகடனத்தை விற்றன்பேக் தேவலாயக் கதவில் 1518ல் ஒட்டினார்.

iv) கத்தோலிக்க திருச்சபையின் சமயம் சார்ந்த பிரச்சனைக்கு முக்கியமளித்தார். கடவுளுக்கும், பக்தர்களுக்கும் இடையே பாப்பரசர்கள், குருமார்கள் தேவையில்லையென்றும் மதகுரு ஒருவரின் துணையின்றி பைபிளை புரிந்து கொள்ள முடியும் என வாதிட்டார்.

v) பாப்பரசரின் கட்டளையை தீயிட்டார். 1520ல் பாப்பரசர் லூதரை கிறிஸ்த்தவத்தின் விரோதியாக கூறி திருச்சபையிலிருந்து வெளியேற்றும் கட்டளையை வெளியிட்டார்.

**35. லூதரின் கருத்துக்கள் விரைவில் பரவுவதற்கு செல்வாக்கு செலுத்திய காரணிகள்.**

i) 1517ல் திருச்சபைக்கு எதிராக ஆரம்பிக்கப்பட்ட இயக்கம் புரட்டஸ்தாந்து இயக்கமாக மாற்றமடைந்தமை. பாப்பரசர் 10ம் லியோவின் செயற்பாடுகளை எதிர்த்த ஜேர்மனிய பிரபுக்கள், விவசாயமக்களின் ஆதரவு கிடைத்தமை.

ii) அச்சிடும் இயந்திரம், கடதாசி கண்டுபிடிக்கப்பட்டமை. லூதரால் எழுதப்பட்ட ஆழமான கருத்துக்களை கொண்ட நூல்கள் இத்தாலி, பிரான்ஸ், ஸ்பெயின், இங்கிலாந்து போன்ற நாடுகளின் விற்பனை செய்யப்பட்டன.

iii) திருச்சபைக்கு எதிரான லூதரின் செய்கையானது மக்கள் மத்தியில் இவருக்கு பெருமை சேர்த்துக் கொடுத்தது.

குறிப்பு :

மாட்டின்லூதர், ஜோன் கல்வின், உலரிச் சுவிங்றி என்போரது சீர்திருத்தங்கள் புரட்டஸ்தாந்து இயக்கம் எனப்பட்டது. இவ்வியக்கம் ஜேர்மனியின் சிற்றரசர்களினதும் இங்கிலாந்தில் அரசர்களினதும் ஆதரவால் வெற்றி பெற்றது.

**36. மதச் சீர்திருத்தத்தின் விளைவுகள்**

i. ஐரோப்பாவின் சமய ஒருமைப்பாடு குலைந்து புதிய சமயக் கொள்கைகள் தோன்றியமை.

ii. கிறிஸ்தவ திருச்சபை பிளவுபட்டமை.

iii. புனித உரோமப் பேரரசின் செல்வாக்குக் குன்றியமை.

iv. பிராந்திய சிற்றரசர்களின் பலம் அதிகரித்தமை.

v. மிஷனரி இயக்கங்கள் தோற்றம் பெற்றமை.



**ரோமானிய சென்பீட்டர் தேவாலயம்**

# 8 ஐரோப்பியரின் ஆதிக்கப் பரம்பல்

**01.ஐரோப்பியர்கள் நாடுகாண் பயணங்களில் ஈடுபட்டமைக்கான காரணங்கள்**

i. கி.பி 1453இல் கிழக்கு உரோமப் பேரரசின் தலைநகரான கொன்ஸ்தாந்திநோபிள், முஸ்லிம்களுக்கான ஒட்டோமன் துருக் கியர் வசமாகியமை.

ii. தேசிய அரசுகள் தமது பலத்தையும் அதிகாரத்தையும் பெருக்கிக் கொள்வதற்காக கடற்பயணங்களுக்கு ஆதரவு வழங்கியமை.

iii. போர்த்துக்கல் மன்னன் கடலோடி ஹென்றி கடற்பயணங்களுக்கு ஆதரவு வழங்கியமை.

iv. மறுமலர்ச்சியால் ஏற்பட்ட விஞ்ஞானப் புரட்சி குறிப்பாக வானியல் அறிவு வளர்ச்சி, தொலைநோக்கி கண்டுபிடிப்பு, சூரியமையக் கொள்கை என்பன காரணமாகியது.

**02. ஐரோப்பியரின் அதிகாரப் பரவலுக்கான காரணங்கள்.**

i. தேசிய அரசுகளின் தோற்றம்.

ii. வர்த்தக கொடுக்கல் வாங்கல்களின் வளர்ச்சி.

iii. விஞ்ஞானத் துறையில் ஏற்பட்ட வளர்ச்சி .

iv. நாடுகாண் பயணங்களில் ஏற்பட்ட வளர்ச்சி.

v. மதச்சீர்திருத்தக் கருத்துக்களின் பரவல்.

**03. ஐரோப்பியாவில் அதிகாரப் பரவலில் ஈடுபட்ட நாடுகள்**

i. முன்னணியில் திகழ்ந்த நாடுகள்

- ஸ்பானியா
- போர்த்துக்கல்
- ஒல்லாந்து
- இங்கிலாந்து
- பிரான்ஸ்

ii. முயற்சி கைகூடாத நாடுகள்

- பெல்ஜியம்
- டென்மார்க்

**04. ஸ்பானியாவின் அதிகாரப் பரவலாக்கம் : முக்கிய அம்சங்கள்**

i. ஸ்பானியா நாடானது ஐரோப்பாவின் ஏனைய நாடுகளுடன் தொடர்பற்று பிறனீஸ் மலைத் தொடரினால் பிரிக்கப்பட்ட ஒரு தனியான நாடாக பிஸ்கே விரிகுடாவுக்குத் தெற்கே அமைந்துள்ளது.

ii. ஸ்பானியர்கள் அத்திலாந்திக் சமுத்திரத்தினூடே மேற்குத் திசையில் பயணித்து மத்திய, தென் அமெரிக்காவின் பல பிரதேசங்களை கண்டறிந்தனர்.

iii. கி.பி1492இல் கொலம்பஸ் மேற்கிந்தியத் தீவுகளைக் கண்டறிந்தமை. கி.பி 1519இல் பெர்ணாண்டோ கோட்டேஸ் என்பவன் மெக்சிகோவைக் கைப்பற்றியமை ஸ்பானியர்களின் முன்னேற்றத்தை வெளிப்படுத்தியது.

iv. ஸ்பானிய மன்னன் 5ஆம் சார்ஸ்ஸின் ஆதரவுடன் பிரான்சிஸ்கோ பிஸாரோ பெருவை கைப்பற்றிக் கொண்டதன் மூலம் ஸ்பானியரின் அதிகாரப் பரவலாக்கம் மேலும் விரிவடைந்தது.

v. கி.பி 1493இல் பாப்பரசரின் தீர்மானத்துக்கமைய அமெரிக்க கண்டத்தில் தமது நடவடிக்கைகளை மேற்கொண்ட ஸ்பானியர்கள் ஏனைய ஐரோப்பியர்களை விட வேறுபட்ட கொள்கை ஒன்றைப் பின்பற்றியமை.

vi. அதிகாரத்திற்குட்படுத்திய பிரதேசங்களில் வர்த்தக நடவடிக் கைகளை மேற்கொள்வதோடு அங்கிருந்த பெறுமதிமிக்க வளங்களைத் தமது நாட்டுக்கு கவர்ந்து சென்றனர்.

vii. ஐரோப்பாவில் நெதர்லாந்தையும் இத்தாலியின் பிரதேசங்களையும் தமது ஆதிக்கத்திற்கு உட்படுத்தினர்.

viii. 17ஆம் நூற்றாண்டாகும் போது ஐரோப்பாவின் ஆதிக்கநிலை ஒல்லாந்து, இங்கிலாந்து, பிரான்ஸ், எனும் நாடுகள் சார்பாக மாறவே ஸ்பானியாவின் ஆதிக்கம் வீழ்ச்சியுற்றது.

**05. போர்த்துக்கல்லின் அதிகாரப் பரவலாக்கம்: முக்கிய அம்சங்கள்:**

i. ஐபீரியத் தீபகற்பத்தின் முனையிலுள்ள நாடே போர்த்துக்கல் ஆகும். கி.பி 1493இல் பாப்பரசரின் தீர்மானத்துக்கு அமைய இந்து சமுத்திரப் பகுதிகளில் தமது கவனத்தைச் செலுத்தினர்.

ii. பத்தலோமிய டயஸ் கண்டறிந்து புயல்முனையைக் கடந்து வஸ்கொடகாமா இந்தியாவின் கள்ளிக்கோட்டை வந்தடைதல், சொகொத்ரா, ஒமஸ், கோவா ,மலாக்கா ஆகிய பிரதேசங்களை ஆதிக்கத்திற்கு கொண்டு வரல் போன்றவற்றால் இந்து சமுத்திர வர்த்தக ஆதிக்கத்தைக் தமதாக்கியமை.

iii. வர்த்தக நடவடிக்கைகளின் போது பிரதேச ஆட்சியாளர்களுடன் நட்புறவு உடன்பாடுகளுடனும் சிலவேளை ஆயுத மோதல்களுடனும் தமது நோக்கத்தை நிறைவேற்றினர்.

iv. குறிப்பாக இந்தியாவின் சிறு பிரதேசங்களில் ஆதிக்கத்தைச் செலுத்திய போர்த்துக்கேயர்கள் இலங்கையில் கோட்டை இராச்சியத்துடன் ஒப்பந்தம் செய்தும் சில தாழ் பிரதேசங்களில் ஆயுத பலத்தை பிரயோகித்தும் தமது அதிகாரத்தை நிலைநாட்டினர்.

**06. ஒல்லாந்தின் அதிகாரப் பரவலாக்கம் : முக்கிய அம்சங்கள்**

i. 17ஆம் நூற்றாண்டாகும் போது ஐரோப்பாவில் பலம் வாய்ந்த நாடாக ஒல்லாந்து எழுச்சியடைந்தது.

ii. கீழைத்தேச நாடுகளில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்வதற்கு

சுதேச ஆட்சியாளர்களின் உதவிகளை பெற்றுக்கொண்ட அதே வேளை சுதேசிகளுடன் மோதலிலும் ஈடுபட்டனர்.

iii. கி.பி 1602இல் நிறுவப்பட்ட டச்சு கிழக்கிந்திய வர்த்தக நிறுவனம் கிழக்கிந்திய தீவுகளான சுமாத்ரா, ஜாவா ,போர்னியோவில் கவனம் செலுத்தியது. அத்துடன் தமது தலைமையகமாக பட்டேவியாவைக் கொண்டிருந்தமை.

iv. ஒல்லாந்தர்களை விட அமெரிக்காவின் சில பிரதேசங்களிலும் மேற்கிந்தியத் தீவுகளிலும் வர்த்தக நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

v. வட அமெரிக்காவில் நியு நெதர்லாண்ட் குடியேற்றத்தை உருவாக்கிய ஒல்லாந்தர்கள் அதன் தலைநகரமாக நியூ அம்ஸ்டாம் (இன்றைய நியூயோர்க்) நகரை நிறுவினர்.

vi. 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரான்ஸ்சும் இங்கிலாந்தும் எழுச்சியுற்றதால் ஒல்லாந்தரின் பரவல் தடைப்பட்டது.

**07. இங்கிலாந்தின் அதிகாரப் பரவலாக்கம் : முக்கிய அம்சங்கள்**

i. 17ஆம் நூற்றாண்டளவில் ஆங்கிலேயரும் தமது வர்த்தக நடவடிக்கை களையும், குடியேற்றங்களை நிறுவுதலையும் ஆரம்பித்தனர்.

ii. இந்தியாவில் வர்த்தக நிலையங்களையும் வட அமெரிக்காவில் வர்ஜீனியா, நியூ இங்லண்ட், மேரிலண்ட், கெரோலினா, நியூயோர்க் , நியூஜர்ஸி, டெலவெயார் எனும் குடியேற்றங்களையும் நிறுவினர்.

iii. ஒல்லாந்தரின் வர்த்தக நிறுவனத்தை வீழ்வதற்காக இங்கிலாந்தில் கப்பற் சட்டம் ஒன்றை இயற்றி ஒல்லாந்தர் வர்த்தகத்தில் அடையும் இலாபத்தை தடுத்தனர்.

iv. ஐரோப்பாவின் ஆதிக்கப் பரம்பலின் போது இந்தியாவிலும் அமெரிக்காவிலும் தமது அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்வது தொடர்பில் பிரான்சுடன் ஏற்பட்ட போட்டியில் ஆங்கிலேயர் வெற்றிபெற்றுக் கொண்டனர்.

**08. பிரான்ஸின் அதிகாரப் பரவலாக்கம் : முக்கிய அம்சங்கள்**

i. 17ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே பிரான்ஸியர்கள் வட அமெரிக்காவில் ஆய்வுப் பயணங்களிலும் குடியேற்றங்களை நிறுவுவதிலும் ஈடுபட்டனர்.

ii. செம்பலேன் எனும் நாடுகாண் பயணி ஐம்பெரும் வாவிகளினூடாக வட அமெரிக்காவின் உட்பிரதேசத்தினுள் பிரவேசித்து குடியேற்றங் களை நிறுவினான்.

iii. 14ஆம் லூயி மன்னரின் நிதியமைச்சரான கோபெயா என்பவரின் வழிகாட்டலில் பிரான்சியர் வர்த்தக நிறுவனம் ஒன்றை கட்டியெழுப்ப தூண்டப்பட்டனர்.

iv. பிரான்சியர்கள் கனடா, லூசியானா போன்ற குடியேற்றங்களை நிறுவி தமது அதிகாரத்தை பரப்பிய போதிலும் கோல்பெயாவின் மரணத்துடன் பிரான்ஸியரின் ஆதிக்கப் பரம்பல் வீழ்ச்சியுற்றது.

**09. ஐரோப்பியரின் சமயப்பரப்பல் : முக்கிய அம்சங்கள்**

i. பல்வேறு நாடுகளுக்கு சென்ற ஐரோப்பியர்கள் கிறிஸ்தவ சமயத்தை பரப்புவது தமது கடமையும் பொறுப்பும் எனக் கருதினர்.

ii. ஐரோப்பாவில் கிறிஸ்தவ திருச்சபை கத்தோலிக்கம், புரட்டஸ்தாந்து என பிளவுபட்டதால் தத்தமது கருத்தை மேல் நிலைப்படுத்தும் நிலை தோன்றியதோடு புதிய சமய உத்வேகமும் பிறந்தது.

iii. உரோமன் கத்தோலிக்கத்தை விட புரட்டஸ்தாந்து சமயம் வேகமாகப் பரவியது.

iv. சமயத்தைப் பரப்பும் முக்கிய வழியாகக் கல்வியை பயன்படுத்தினர். சில சந்தர்ப்பங்களில் கிறிஸ்வ சமயத்தைத் தழுவியவர்களுக்கு பதவி, பட்டங்கள், பொருளாதார சலுகைகள் வழங்கப் பட்டது.

# 9 இலங்கையும் மேலைத்தேச நாடுகளும்

**1. இலங்கை வரலாற்றுடன் தொடர்புபடும் மேலைத்தேயத்தவர்கள்.**

i) போர்த்துக்கேயர் ii) ஒல்லாந்தர் iii) பிரித்தானியர்.

**2. போர்த்துகேயரின் கீழைத்தேய வருகைக்கு செல்வாக்கு செலுத்திய காரணங்கள்.**

i) கி.பி 1453ல் கொன்ஸ்தாந்தி நோபிள் துருக்கியர் வசமாகியமை. இதனால் கீழைத்தேயத்துடனான வர்த்தக தொடர்புகள் தடைப் பட்டன.

ii) கீழைத்தேயத்துக்கு கடல்ரீதியான பாதையை கண்டுபிடிப்பதில் போத்துக்கலும், ஸ்பெயினும் ஆர்வம் காட்டியமை. குறிப்பாக போர்த்துக்கல் மன்னன் கடலோடி ஹென்றி மாலுமிகளை ஊக்குவித்தமை.

iii) வாசனைத்திரவியங்களை தேடியும், சமயப்பிரசார நோக்கத்துடனும் கீழைத்தேயத்துடன் தொடர்புகளை கொண்டிருந்தனர். முதலில் 1498ல் வஸ்கொடகாம இந்தியாவின் கள்ளிக் கோட்டைத் துறைமுகத்துக்கு வந்தான்.

iv) கீழைத்தேயத்தில் வர்த்தக ஆதிகத்தை பெற்றுக் கொள்ளுதல். இந்துசமுத்திரத்தில் வர்த்தக ஆதிக்கத்தை பெற்றிருந்த முஸ்லிம்களை முறியடிப்பதற்கு விரும்பியமை.

**3. போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்த போது அரசியல் நிலைமைகள்.**

- 16ம்நூற்றாண்டின் ஆரம்பத்தில் (1505ல்) "லொறன்ஸ் டி அல்மேடா" என்ற போர்த்துக்கேயன் காலித்துறை முகத்தை வந்தடைந்த போது மூன்று இராச்சியங்கள் காணப்பட்டது.




i) **கோட்டை:** - எட்டாம் வீரபராக்கிரம பாகு

எல்லைகள்: -
வடக்கு - மல்வத்துஓயா,
கிழக்கு - மத்திய மலைநாட்டின் மேற்கு பகுதி
தெற்கு - வளவைகங்கை
மேற்கு - இந்து சமுத்திரம்.

ii) **மலைநாடு:** -
சேன சம்மத விக்கிரம பாகு.

iii) **யாழ்ப்பானம்:** - பரராஜசேகரன்.

**4. போர்த்துக்கேயருடன் கோட்டைமன்னன் ஒப்பந்தம் செய்தல்.**

i) வருடாந்தம் 400 பஹார்(80 மெற்றிக்தொன்) கறுவா போர்த்துக்கேயருக்கு வழங்குதல்.

ii) இலங்கையின் கரையோரப் பிரதேசத்தை போர்த்துக்கேயர் பாதுகாத்தல்.

| |
|---|
| பர்னாவோகற்றீம் என்ற போர்த்துக்கேயனையும் அவனது குழுவினரையும் கோட்டை அரசனிடம் அழைத்து சென்ற போது கோட்டை இருக்கும் இடம் கொழும்புக்கு மிகஅருகில் இருப்பதை போர்த்துக்கேயர் தெரிந்து கொள்ளக்கூடாது என்பதற்காக மலையகக் கணவாய்களுடன் கூடிய பாதை வழியே கோட்டை அரசனின் மாளிகையை சென்றடைந்ததால் "பறங்கி கோட்டைக்குச் சென்றது போல" என பழமொழி தோன்றியது. |

**5. "விஜயபாகு கொலை" என்பதன் கருத்து.**

- எட்டாம் வீரபராக்கிரமபாகுவின் பின்னர் கோட்டையில் ஆட்சிக்கு வந்த 7ஆம்விஜயபாகு மன்னனுக்கு புவனேகபாகு, மத்துமபண்டார, மாயாதுன்னை என மூன்று புதல்வர்கள் இருந்தனர். விஜயபாகுவின் பின்னர் புவனேகபாகுவிற்கே ஆட்சியுரிமை சேர வேண்டியிருந்தது. எனினும் தந்தை தனது இரண்டாவது ராணியான கீரவல்லியின் புதல்வனுக்கு (தேவகுமாரன்) ஆட்சியுரிமையை வழங்க முயற்சித்த போது மூன்று புதல்வர்களும் சலமன் என்ற வெளிநாட்டவரைக் கொண்டு தந்தையை கி.பி 1521ல் கொலை செய்தனர். இதுவே "விஜயபாகு கொலை" எனப்படுகிறது.




- விஜயபாகு கொலையை நடாத்தியவன் மாயதுன்னை ஆவான்.

**6. விஜயபாகு கொலைக்கு பின் கோட்டை இராச்சியம்.**

- மூன்று பிரிவுகளாக பிரிந்தது.

i) கோட்டை :- 7ஆம் புவனேகபாகு

ii) இறைகம :- மத்துமபண்டார (இறைகம பண்டார)

iii) சீதாவக்கை: - மாயாதுன்னை.

7. **கோட்டை இராச்சியத்தின் வீழ்ச்சிக்குரிய காரணங்கள்.**

i) **உள்நாட்டு மன்னர்களுக்கிடையில் ஒற்றுமை காணப்படாமை:** 7ஆம் புவனேகபாகு மன்னன் போர்த்துக்கேயரின் பாதுகாப்பினை பெற்றதால் மாயாதுன்னையுடன் ஏற்பட்ட மோதலால் போர்த்துக்கேயர் உள்நாட்டு அரசியலில் தலையிடுவதற்கு வாய்ப்பு கிடைத்தமை.

ii) **போர்த்துக்கேயரின் போர்திறமை:** நவீன ஆயுதங்களுடனும் கடற்படை வசதியுடனும் பலம்வாய்ந்த போர்த்துக்கேயரை சிங்கள வீரர்களால் எதிர்க முடியாமை.

iii) **கி.பி 1551ல் புவனேகபாகு இறக்க தர்மபால மன்னன் பதவிக்கு வந்தமை:** தர்மபாலன் சிறியவனாக இருந்ததால் இலகுவாக போர்த்துக்கேயரின் ஆதிக்கம் கோட்டையில் பரவ காரணமாகியது.

iv) **கி.பி 1557ல் தர்மபாலன் கத்தோலிக்க மதத்தை தழுவியமை:** "தொன்யுவான் தர்மபால" என்ற பெயரில் கத்தோலிக்க மதத்தை தழுவிய வரலாற்றில் முதல் மன்னனான இவன் போர்த்துக்கேயரின் கைப்பொம்மையாக செயற்பட்டான். இதனால் பௌத்த குருமார்கள், பிரபுக்கள் சீதவாக்கை நோக்கி சென்றதுடன் புனிததந்ததாதும் ஹாபிட்டிய நிலமேயால் எடுத்துச் செல்லப்பட்டது.

v) **கி.பி 1587ல் தர்மபால மன்னன் போர்த்துக்கேயருக்கு நன்கொடை சாசனம் வழங்கியமை.** தனக்கு பின் ஆட்சியுரிமை போர்த்துக்கேய மன்னனுக்குரியது என உறுதி சாசனத்தை வழங்கியதால் கி.பி 1597ல் தர்மபாலன் இறக்க மல்வானை ஒப்பந்தத்தின்படி போர்த்துக்கேயரிடம் ஆட்சியுரிமை சென்றமை.

8. **சீதாவாக்கை எழுச்சியடைந்தமைக்கான காரணங்கள்.**

- கி.பி 1521ல் உருவான சீதாவாக்கையின் எழுச்சிக்கு மாயாதுன்னை, 1ஆம்இராஜசிங்கன் ஆகிய மன்னர்கள் காரணமாக இருந்தனர்.

i) **கோட்டை இராச்சியத்தவரது ஒத்துழைப்பு:** தர்மபால மன்னனினதும், போர்த்துக்கேயரினதும் செயற்பாடுகளினால் வெறுப்புற்ற பௌத்த குருமார்கள், பிரபுக்கள், மக்கள் சீதாவாக்கை அரசனுக்கு ஆதரவு வழங்கியமை.

ii) **கி.பி 1538ல் இறைகம சீதாவாக்கையுடன் இணைக்கப்பட்டமை:** மத்துமபண்டார இறக்க மாயாதுன்னை இறைகமவை சீதாவாக்கையுடன் இணைத்துக் கொண்டமை.

iii) **கி.பி 1562ல் முல்லேரியா போரில் மாயாதுன்னையின் மகன் இராஜசிங்கன் போர்த்துக்கேயரின் படைக்கு பாரிய இழப்பை கொடுத்து வெற்றியீட்டியமை.**

iv) **கி.பி 1565ல் கொழும்பு தவிர்ந்த கோட்டை இராச்சியம் சீதாவாக்கை யுடன் இணைந்தமை:** போர்த்துக்கேயர் மாயாதுன்னையின் எதிர்ப்புக்கு ஈடுகொடுக்க முடியாது தர்மபாலனுடன் கொழும்புக்கு பின்வாங்கிய

v) **கி.பி 1582ல் கண்டி இராச்சியம் சீதாவாக்கையுடன் இணைந்தமை:** கண்டி மன்னன் கரலியத்த பண்டாராவை தோற்கடித்து 1ஆம் இராஜ சிங்கன் கண்டி இராச்சியத்தை சீதாவாக்கையுடன் இணைத்தமை.

**9. முல்லேரியா யுத்தம் தொடர்பான தகவல்கள்**

i) கி.பி 1562ல் அபோன்சு பெரெய்ரா தலஸர்தா தலைமையில் சீதா வாக்கை இராட்சியத்தை ஆக்கிரமிப்புச்செய்ய சென்ற போர்த்துக் கேயரின் படையை மாயாதுன்னையின் மகன் டிங்கிரிபண்டார (1ஆம் இராஜசிங்கன்) ஒரு பலம் வாய்ந்த சேனையுடன் முல்லேரியா பகுதியில் தோற்கடித்தான்.

ii) போர்த்துக்கேயர் பீரங்கிக்குள் வெடிமருந்தையிடும் நேரத்தை அவதானித்து தனது படைக்கு கட்டளையிட்டு போர்த்துக்கேயருக்கு பெரும் இழப்பை ஏற்படுத்தி யுத்தத்தில் வெற்றி கொண்டமை இவனது வீரத்தை வெளப்படுத்துகிறது.

iii) போரில் இறந்த போர்த்துக்கேயரின் குருதியினால் முல்லேரியா வயல்களின் நீர் குருதி நிறமாக காட்சியளித்ததாக வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர்.

**10. முதலாம் இராஜசிங்கன் கண்டி மீது படையெடுத்தல்.**

i) கண்டி இராச்சியத்தை கரலியத்தே பண்டார (தொன்யொன் எனும் கத்தோலிக்க ஞானஸ்தான பெயருடைய) மன்னன் ஆட்சி செய்து கொண்டிருந்தபோது 1ம்இராஜசிங்கன் கி.பி 1582ல் கண்டி மீது படையெடுத்தான்.

ii) கம்பளை பிரதானியான வீரசுந்தர பண்டாராவின் உதவியுடன் சீதாவாக்கையிலிருந்து இராஜசிங்கனின் படைகள் பலன கணவாய் ஊடாக சென்று கண்டியை கைப்பற்றிக் கொண்டது.

iii) உடுநுவர, யட்டிநுவர, மாத்தளை, தும்பளே பகுதிகளை முதலில் கைப்பற்றிக் கொண்ட போதிலும் முழுக்கண்டிப்பிரதேசமும் இராஜசிங்கனின் கட்டுப்பாட்டுக்குள் இலகுவாக கொண்டுவரப் பட்டது.

iv) கரலியத்தேபண்டாரனும் அவனதுகுடும்பத்தினரும் போர்த்துக் கேயரிடம் திருகோணமலைக்கு தப்பிச் சென்றான். அப்போது வன்னி சிற்றரசர்களிடம் உதவிகோரிய போதும் கிடைக்கவில்லை.

v) வீரசுந்தரபண்டாரா மலைநாட்டின் அரசுரிமையை பெற்றுக்கொள்ளக் கூடும் என்ற சந்தேகத்தில் இராஜசிங்கன் தந்திரமாக அவனை கொலை செய்தான். இதனால் மகன் கொனப்புபண்டாரா கொழும்புக்கு சென்று போர்த்துக்கேயரின் பாதுகாப்பிலிருந்தான்.

vi) போர்த்துக்கேயரிடம் சரணடைந்தோர் கத்தோலிக்க ஞானஸ் தானத்தை பெற்றுக்கொண்டனர். கரலியத்தே பண்டாராவின் மகள் குசுமாசனதேவி டொனாகதறினா எனவும், மருமகன் யமசிங்க பண்டார டொன்பிலிப் எனவும், கொனப்புபண்டார டொன்யுவான் என்ற பெயர்களில் கத்தோலிக்கராக மதம் மாறினர்.

**11. சீதாவாக்கை இராச்சியத்தின் வீழ்ச்சிக்கான காரணங்கள்.**

i) 1ஆம் இராஜசிங்கன் ஆற்றல் மிக்க இளவரசர்களை சந்தேகத்தில் கொலை செய்தான். இதனால் எதிர்கால தலைமைத்துவத்திற்கு அரசர்கள் இருக்கவில்லை.

ii) 1ஆம் இராஜசிங்கன் சைவசமயத்தை தழுவியமையால் எதிர்ப்பு ஏற்பட்டமை. தனது ஆட்சியின் இறுதிக் காலத்தில் தந்தையை கொலை செய்த பாவத்திலிருந்து விடுதலைபெற சைவசமயத்தை தழுவினான். இதனால் பௌத்த குருமாரின் ஆதரவை இழந்தான். அத்தோடு பௌத்த குருமார்களை கொலைசெய்ததோடு பௌத்த நூல்களுக்கு தீ வைத்தான். இதனால் மன்னனுக் கெதிராக கலகங்கள் தோன்றின.

iii) மலையக மக்களின் எதிர்ப்பு. வீரசுந்தரபண்டாராவை சந்தேகத்தில் கொலைசெய்தமையும், கொடுரமான ஆட்சியும் மக்களின் எதிர்ப்புக்கு ஆளாக வேண்டி ஏற்பட்டது.

iv) வாரிசின்றித் திடீரென இராஜசிங்கன் இறந்தமை. மலையக மன்னன் 1ஆம் விமலதர்மசூரியனுடன் கனேதன்ன எனும் இடத்தில் தோல்வியடைந்து அரண்மனை திரும்பும் போது மூங்கில் சிராய் குற்றிய விஷத்தால் கி.பி 1593ல் இறந்தான்.

**யாழ்ப்பாண இராச்சியம்.**

**12. யாழ்ப்பாண அரசுடன் போர்த்துக்கேயர் தொடர்புகளை ஏற்படுத்தக் காரணம்.**

i) பாக்குநீரிணையூடாக பயணம் செய்யும் கப்பல்கள் விபத்துக்குள்ளாகும் போது அவற்றை யாழ்ப்பாண ஆட்சியாளர்கள் கைப்பற்றிக் கொண்டமை.

ii) கத்தோலிக்க மதத்தை பரப்புவதற்காக.

**13. போர்த்துக்கேயர் சங்கிலி மன்னனுக்கெதிராக மேற்கொண்ட படையெடுப்புகள்.**

- கி.பி 1519ல் பரராஜசேகரனை கொலை செய்து சங்கிலிமன்னன் ஆட்சிக்கு வந்தான்.

i) கி.பி 1543ல் அபோன்ஸ் சூசாவின் தலைமையில் முதன்முதலாக போர்த்துக்கேயர் படையெடுத்தனர். சங்கிலியன் மன்னன் பின்வரும் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டான்.

   1) வருடாந்தம் 5000 பகார் கறுவாவும், இரண்டு யானைகளும் கப்பமாக தர வேண்டும்.

   2). யாழ்ப்பாணத்தில் கத்தோலிக்க சமயத்தைப் பிரச்சாரம் செய்ய இடமளித்தல்.

ii) கி.பி 1560ல் கொன்ஸ்ரைன் டி பிரகன்ஸா தலைமையில் படையெடுப்பு நிகழ்ந்தது. இந்துமத குருமார்களின் எதிர்ப்பினால் சங்கிலி மன்னன் கத்தோலிக்கத்துக்கெதிராக செயற்பட்டதாலேயே இப்படையெடுப்பு

நிகழ்ந்தது. சங்கிலி மன்னன் போர்த்துக்கேயரை எதிர்க்க முடியாது ஒழித்தான். போர்த்துக்கேய படை யாழ்ப்பானம், நல்லூர் பகுதிகளை சூறையாடியது. ஆனாலும் மீண்டும் முன்னைய ஒப்பந்தத்தை ஏற்க உடன்பட்டு மகனை போர்த்துக்கேயரிடம் பிணையாகவும் கொடுத்து ஆட்சியை தக்கவைத்தான்.

### 14. சங்கிலிமன்னனுக்கு பின் யாழ்ப்பாண இராசதானி.

i) கி.பி 1561ல் சங்கிலிமன்னனை எதிரத்து மக்கள் கலகம்செய்து மகன் புவிராசபண்டாரனை அரசனாக்கினர். ஆனாலும் அவனை நீக்கிவிட்டு காசிநைனார் ஆட்சிக்கு வந்தான்.

ii) கி.பி 1570ல் காசிநைனாரை போர்த்துக்கேயர் கொலை செய்து பெரியபிள்ளை என்பவனை ஆட்சிக்கு அமர்த்தினர். இவனுடைய காலத்தில் கத்தோலிக்க மதம் தீவிரமாக யாழ்ப்பாணத்தில் பரவியது.

iii) கி.பி 1582ல் புவிராசபண்டாரன், 2ம் பரராசசேகரன் எனும் பெயருடன் ஆட்சிக்கு வந்தான். இவன் மன்னார் கோட்டையை தாக்கிய போதும் தோல்வியே ஏற்பட்டது. கள்ளிக்கோட்டை சமோரின் உதவி கிடைக்காதமையே தோல்விக்கு காரணமாகியது.

iv) கி.பி 1591ல் கோவாவிலிருந்து மென்ரோசா தலைமையிலான படை மன்னார் வந்து பின்னர் யாழ்ப்பாணம் வரை சென்று 2ஆம் பரராஜசேகரனையும் கொலை செய்து பல அழிவுகளை செய்தது.

v) இப்போரிலே பெரியபிள்ளையின் மகன் எதிர்மன்னசிங்கன் வீரமாக போரடி கீழே வீழ்ந்த போது சிமாவோ பின்காவோ என்ற அதிகாரி அவனை காப்பாற்றி னான். இந்த காட்சி இரத்தின புரியிலுள்ள மகாசமன் தேவாலய கல்லொன்றில் அற்புதமாக பொறிக்கப்பட்டுள்ளது.



vi) கி.பி 1591ல் நல்லூர் மாநாடு யாழ்ப்பாண பிரதானிகளை நல்லூருக்கு வரவழைத்த பெற்றாடோ போர்த்துக்கல் மன்னனே யாழ்ப்பாணத்துக்கு அரசனென கூறியதை பிரதானிகள் ஏற்றுக்கொண்டனர். அமைச்சர் களின் ஆலோசனையின் பிரகாரம் எதிர்மன்னசிங்கன் அரசனாக முடிசூட்டினான். இவனும் பரராச சேகரன் என்றே அழைக்கப்பட்டான்.

vii) கி.பி 1615ல் எதிர்மன்னசிங்கன் இறக்க மருமகனான சங்கிலி மன்னன் ஆட்சிக்கு வந்தான். இக்காலப்பகுதியில்,

- மலைநாட்டு ஆட்சியாளர்கள் யாழ்ப்பாணத்தினூடாக இந்தியாவுடன் வர்த்தக இராஜதந்திர உறவுகளை வளர்த்துக் கொண்டனர்.
- சீதாவாக்கை, மலைநாட்டு மன்னர்கள் யாழ்ப்பாண ஆட்சியாளர்களுடன் உறவுகளை வைத்திருந்தனர்.
- ஒல்லாந்தரும் இந்து சமுத்திரத்தின் கிழக்கு நாடுகளுக்கு வந்தமை.

viii) இக்காரணங்களால் கி.பி 1619ல் "பிலிப் த ஒலிவேரா" சங்கிலி மன்னனை தோற்கடித்து கி.பி 1621ல் யாழ்ப்பாணம் முழுவதையும் தமது ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவந்தான். (சங்கிலிமன்னன் கோவைக்கு நாடு கடத்தப்பட்டான். இதன் மூலம் தமிழராட்சியும் முடிவுக்கு வந்தது.)

**15. யாழ்ப்பாண இராச்சிய மன்னர்கள்.**

i) பரராசசேகரன்-I (கி.பி1478-1519)

ii) செகராசசேகரன்-I ம் சங்கிலிராசன்ஸ (கி.பி1519-1561)

iii) புவிராசபண்டாரன்-I

iv) காசிநைனார் } (கி.பி 1561 - 1570)

v) செகராசசேகரன்-II (பொயபிள்ளை) கி.பி1570-1582)

vi) பரராசசேகரன்- II (புவிராசபண்டாரன்) (கி.பி1582-1615)

vii) சங்கிலிராசன்-II கி.பி1615-1621)

**போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் கண்டி இராச்சியத்துடன் தொடர்பு கொள்ளல்.**

**16. 1ஆம் விமலதர்மசூரியன் கண்டியரசனாகுதல்.**

i) போர்த்துக்கேயர் பாதுகாப்பிலிருந்த கரலியத்தேபண்டார நோய்வாய்ப்பட்டு இறக்கவே அரசுரிமை யமசிங்க பண்டாராவுக்கு சென்றது.

ii) தொன்யுவான் தலைமையில் கண்டி சென்ற போர்த்துக்கேய படை யமசிங்க பண்டாராவை (தொன்பிலிப்பை) அரசனாக்கியது. இதனை மக்களும் ஏற்றுக்கொண்டனர்.

iii) கண்டியை மீண்டும் கைப்பற்றும் நோக்கில் 1ஆம் இராஜசிங்கன் படையெடுத்தான். இதனை தொன்யுவான் "கனேதன்ன" எனும் இடத்தில் தோற்கடித்தான். இத்தோல்வியே 1ஆம்இராஜசிங்கனின் இறப்புக்கு காரணமாகியது.

iv) பின்னர் தொன்யுவான் தந்திரமாக தொன்பிலிப்பை கொலைசெய்து "1ஆம்விமலதர்மசூரியன்"எனும் பெயருடன் கண்டிக்கு அரசனானான்.

v) 1ஆம் விமலதர்மசூரியனின் செயற்பட்டால் ஆத்திரமடைந்த போர்த்துக்கேயர் தொன்பிலிப்பின் மகனான "சோ ஆவோ" வையும் அழைத்துக்கொண்டு கோட்டைக்கு சென்றனர்.

**17. போர்த்துக்கேயர் கண்டிமீது மேற்கொண்ட படையெடுப்புகள்.**

| ஆண்டு | போர்த்துக்கேயதளபதி | கண்டிமன்னன் | யுத்தம் நடைபெறும் இடம் |
|---|---|---|---|
| 1.கி.பி 1594 | பேரொல் லோபேஸ் டி சூசா | 1ஆம் விமலதர்மசூரியன் | தந்துரே |
| 2.கி.பி1602 | தொன் ஜொரனிமோ டி அஸவிடோ | 1ஆம் விமலதர்மசூரியன் | பலன |
| 3. கி.பி1630 | கொன்ரைன் டி சா | சௌரத்தின் கீழ் 2ஆம் இராஜசிங்கன் | ரந்தெனிகல |
| 4. கி.பி1638 | தியோத டி மெல்லோ கஸ்த்ரோ | 2ஆம் இராஜசிங்கன் | கன்னொருவ |

**18. கண்டி மீது போர்த்துக்கேயர் படையெடுத்தமைக்கான காரணங்கள்.**

i) **1ஆம் விமலதர்மசூரியனின் ஆட்சியினை குழப்புவதற்கு:** அவன் மீண்டும் பௌத்தமதத்தை பின்பற்றியமை துரோக செயலாக கருதிய போர்த்துக்கேயர் அவனது ஆட்சியினை எதிர்த்தனர். அத்துடன் சுதந்திர வியாபாரம், மதம் பரப்புதல் போன்றவற்றுக்கு மன்னன் தடையாக இருந்தமை.

ii) **கீழைத்தேய வியாபார தலைமையகத்தை இலங்கையில் ஏற்படுத்த எண்ணியமை:** இந்துசமுத்திர வியாபாரத்தை கட்டுப்படுத்த கோவாவை விட இலங்கையே சிறந்தது என போர்த்துக்கேயர் கருதியமை.

iii) **கி.பி 1602ல் கண்டி மன்னன் ஒல்லாந்தருடன் தொடர்பை ஏற்படுத்தியமை:** ஒல்லாந்தர் இலங்கைக்கு வந்தால் தமது செயற்பாடுகளுக்கு ஆபத்து ஏற்படும் என போர்த்துக்கேயர் அஞ்சியமை.

iv) **கண்டி சுதந்திர இராச்சியமாக இருப்பதனை விரும்பாமை:** கோட்டை, யாழ்ப்பாண இராச்சியங்களை இலகுவாக கைப்பற்றியது போல கண்டியையும் தமது ஆதிகத்தின் கீழ் இலகுவாக கொண்டு வரமுடியும் என போர்த்துக்கேயர் கருதினர்.

**19. கண்டி மீதான படையெடுப்புகள் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்.**

i) கண்டி இராச்சியம் இயற்கை அரண்களால் சூழப்பட்டிருந்தமை. வனஅரன், மலைஅரன், நீர்அரன் போன்றவற்றால் சூழ்ந்து பாதுகாப்பை அளித்தமை.

ii) கண்டி இராச்சியபடை கொரில்லாபோர் முறைகளை கையாண்டமை. இதனால் போர்த்துக்கேய படைக்கு அதிக இழப்புகள் ஏற்பட்டமை.

iii) கண்டி படையினர் சுதந்திர உணர்வுடன் போரிட்டமை. கண்டி மக்களின் அரசவிசுவாசம், மனோபலம் போன்றவற்றை போர்த்துக்கேயப் படைகளால் வெல்ல முடியாது போனமை.

iv) போர்த்துக்கேயர் போரில் தோல்விகளை சந்தித்தமையால் படையினரின் மனோபலம் குன்றியமை. அத்துடன் கூலிப்படைகளாகவும் காணப்பட்டனர்.

## 20.முதலாம் விமலதர்ம சூரியன் (கி.பி 1592-1604)


தலதாமாளிகை

i) கம்பளை பிரதானி வீரசுந்தரபாண்டாரா வின் மகன் ஆவான். கொனப்புபண்டார என்ற இயற்பெயரை கொண்ட இவன் கத்தோலிக்க ஞானஸ்த் தானத்தின் பின் தொன் யுவான் என அழைக் கப்பட்டான்.

ii) புதிய அரச வம்சத்தின் முன்னோடியாக விளங்கினான். தோனாகதறினாவை மணப்பதன் மூலம் தனது அரசுரிமையை உறுதிப்படுத்தினான்.

iii) கி.பி 1594ல் தந்துரே யுத்தத்திலும், கி.பி1602ல் பலன யுத்தத்திலும் வெற்றி கொண்டு கண்டி இராச்சியத்தை ஒரு சுதந்திர இராச்சியமாக நிறுவினான்.

iv) ஒல்லாந்தருடன் நட்புறவுகளை ஏற்படுத்திக் கொள்ள முயற்சித்தான். கி.பி1602ல் ஸ்பில்பேஜன், சீ போல்டி வீரட் என்ற இரு ஒல்லாந்த இனத்தவர்கள் மன்னனை சந்தித்தனர்.

v) பௌத்த சமயத்தின் வளர்ச்சிக்கு உதவினான்.

- சப்ரகமுவ மாகாணத்தில் தெல்கமுவ விகாரையில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த புனித பற்சின்னத்தை கண்டிக்கு எடுத்து வந்து தலதாமாளிகையை அமைத்து அதில் பிரதிஷ்டை செய்து கண்டிப் பாரம்பரியத்தை பாதுகாத்தான். இவனது காலத்திலேயே கடலா தெனியா, லங்காதிலக போன்ற விகாரைகள் புனரமைக்கப்பட்டது.
- பர்மாவிலிருந்து புத்தபிக்குகள் வரவழைக்கப்பட்டு உபசம்பதா வைபவம் நடத்தப்பட்டது.

vi) பொருளாதார நடவடிக்கைகளில் அக்கறை செலுத்தினான். நெல் உற்பத்தியை பெருக்குவதற்கு விவசாயிகளை தூண்டினான்.

## 21.செனரத் (கி.பி 1604 - 1635)

i) 1ஆம் விமலதர்மசூரியனின் ஒன்றுவிட்ட சகோதரனான இவன் தோனாகதறினாவை திருமணம் செய்து ஆட்சியை உறுதிப் படுத்தினான்.

ii) செனரத் மன்னன் தனது காலத்தில் கண்டி இராச்சியத்தை கிழக்கு நோக்கி விரிவுபடுத்தினான். திருகோணமலை, மட்டக்களப்பு துறைமுகங்கள் தவிர ஏனைய பிரதேசங்கள் கண்டிக்கு உரித்தானவை யாக இருந்தது.

iii) கி.பி 1629ல் கண்டி இராச்சியத்தை மூன்று கூறுகளாக பிரித்து விஜயபால, குமாரசிங்க, இராஜசிங்க என்ற தனது பிள்ளைகளுக்கு வழங்கினான்.

iv) கி.பி 1627ல் யாழ்ப்பாணம்மீதும், கோட்டைமீதும் படையெடுத்தான்.

v) கி.பி 1630ல் கண்டி மீது படையெடுத்த டிசாவை ரந்தெனிகல எனும் இடத்தில் மகனான இராஜசிங்கன் தோற்கடித்தான்.

**22.2ஆம் இராஜசிங்கன் - வெஸ்ரா வோல்ட் உடன்படிக்கை - கி.பி 1638.**

i) போர்த்துக்கேயரை இலங்கையிலிருந்து விரட்டுவதற்கு ஒல்லாந்தர் உதவவேண்டும்.

ii) போர்த்துக்கேயரை துரத்துவதற்கு ஏற்படும் செலவுகளை மன்னன் கொடுக்க வேண்டும்.

iii) போர்ச் செலவுகள் மன்னன் செலுத்தியதும் கோட்டைகள் மன்னனிடம் கையளிக்க வேண்டும்.

iv) துறைமுகங்களையும், ஏகபோக வர்த்தக உரிமையையும் ஒல்லாந்தரிடம் ஒப்படைத்தல் வேண்டும்.

v) கோட்டைகளிலிருந்து போர்த்துக்கேயரைத் துரத்திய பின்னர் **மன்னன் விரும்பினால் மாத்திரம்** ஒல்லாந்த போர்வீரர்கள் தங்கலாம்.

**23.ஒல்லாந்தருக்கும் 2ம் இராஜசிங்கனுக்கும் மனக்கசப்பு ஏற்படக் காரணங்கள்.**

i) ஒப்பந்தம் ஒல்லாந்து மொழியில் எழுதப்பட்டமை. போர்த்துக்கேயரிடமிருந்து பிடிக்கப்படும் கோட்டைகளை மன்னன் விரும்பினால் மட்டும் ஒல்லாந்தர் வைத்திருக்க முடியும் என்ற வாசகம் மன்னனின் பிரதியிலிருந்த போதும் ஒல்லாந்தரின் பிரதியில் இருக்காமை.

ii) கி.பி 1639ல் போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றப்பட்ட திருகோணமலை, மட்டக்களப்பு கோட்டைகள் மன்னனிடம் ஒப்படைக்கப்பட்ட போதிலும் கி.பி. 1640இல் கைப்பற்றப்பட்ட நீர்கொழும்பு, காலிக் கோட்டைகள் மன்னனிடம் ஒப்படைக்கப் படாமை.

iii) உடன்படிக்கையில் கூறியவாறு போர் செலவிற்காக கறுவா, மிளகு, ஏலம் ஆகியவற்றை மன்னன் வழங்காமை.

**24. இரண்டாம் இராஜசிங்கன் (கி.பி 1635- 1687)**

i) மஹாஅஸ்தான என அழைக்கப்பட்ட இராஜசிங்கன் தந்தையின் ஆட்சியின் போது ஊவா பிரதேசத்துக்கு பொறுப்பாக இருந்தான்.

ii) கி.பி 1635ல் செங்கடகலவிற்கு 2ஆம் இராஜசிங்கன் எனும் பெயருடன் அரசனாகி கி.பி 1640ல் சகோதரர்களை கட்டுப்படுத்தி கண்டி முழுவதற்கும் அரசனானான்.

iii) "திரிசிங்களாதீஸ்வர" என்ற பட்டப்பெயரை பயன்படுத்திய இவன் போர்த்துக்கேயருக்கு இந்நாட்டில் உரிமையில்லை என கூறினான்.


2ம் இராஜசிங்கன்

iv) சிறந்த போர் வீரனாக திகழ்ந்தான். தந்தையின் காலத்தில் ரந்தெனிகல யுத்தத்திலும் 1638ல் கன்னொருவ யுத்தத்திலும் போர்த்துக்கேயர் படையை புறங்கண்டான்.

v) போர்த்துக்கேயரை விரட்டவேண்டுமாயின் அவர்களுக்கு இணையான வல்லமையைக் கொண்ட இனத்தின் உதவி அவசியமென உணர்ந்து ஒல்லாந்தருடன் தொடர்புகளை ஏற்படுத்தினான்.

vi) ஒல்லாந்தருடன் பிற்காலத்தில் பகைத்துக் கொண்டான். இதனால் பிரதானிகள், பௌத்த பிக்குகள், மக்கள் ஆகியோரது எதிர்ப்பினையும் சம்பாதித்தான். இவனது செயல் "இஞ்சியைக் கொடுத்து மிளகாயை வாங்கியதைப் போல" என கருதப்பட்டது.

vii) ஒல்லாந்தருடன் நேரடியாக போர் தொடுக்காது விட்டாலும் அவர்களை பலவீனப்படுத்தும் செயல்பாடுகளில் ஈடுபட்டான்.

viii) போர்த்துக்கேயர் ஆட்சி முடிவில் கற்பிட்டி, சிலாபம் துறைமுகங்களை கண்டிக்கு சொந்தமாக்கினான்.

ix) தென் இந்தியாவின் மதுராபுரத்திலிருந்து நாயக்கவம்ச அரசகுடும்ப இளவரசிகளை விவாகம் செய்து கொள்ளும் வழக்கத்தை கண்டியில் ஆரம்பித்த பெருமை இவனையே சாரும்.

## 25. இரண்டாம் விமலதர்ம சூரியன் (கி.பி 1687- 1707)

i) 2ஆம் இராஜசிங்கனின் மகன் ஆவான். அரசியல் அனுபவமில்லாதவனாக காணப்பட்டதால் மிகவும் அமைதியான ஆட்சியாளராக இருந்தான்.

ii) ஒல்லாந்தருடன் நட்புடன் செயற்பட்டான்.

iii) சீனாவிலிருந்து பிக்குகளை வரவழைத்து உபசம்பதாவை மீண்டும் கண்டியில் நடாத்தினான்.

iv) தலாதமாளிகையை மூன்று மாடிகள் கொண்டதாக அமைத்து மேலும் முன்னேற்றமடையச் செய்தான்.

## 26. ஸ்ரீ வீரபராக்கிரம நரேந்திரசிங்கன் (கி.பி1707- 1739)

i) 2ஆம் விமலதர்மசூரியனின் மகன். இவன் திறமைமிக்க அரசனாகவோ, அமைதி நிலை நாட்டக் கூடியவனாகவோ விளங்காததால் பிரதானிகளின் அதிகாரம் உயர்வாக இருந்தது.

ii) பிரதானிகள் கற்பிட்டி, புத்தளம் துறைமுகங்களை வர்த்தகத்திற்காக திறந்து விடுமாறு ஒல்லாந்தரிடம் கேட்டிருந்தனர். இதற்கு மறுக்கவே கண்டி இராச்சியத்துக்கு ஊடாக திருகோணமலை துறைமுகத்துக்கு யானைகளை எடுத்துச் செல்வதை மன்னன் தடுத்தான். பாக்கு, மிளகு போன்ற வாசனைத் திரவியங்களை விற்பனை செய்வதையும் தடுத்தான்.

iii) கண்டி சிங்கள அரச வம்சத்தின் இறுதி மன்னனாக வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளான்.

**27. கறுவா புடைக்கும் தொழிலாளர் மேற்கொண்ட கிளர்ச்சிக்கான காரணங்கள்.**

i) தூர இடங்களுக்கு வயதுவேறுபாடின்றி கறுவா தொழிலுக்கு சிறுவர்களும் அழைத்துச் செல்லப்பட்டமை.

ii) 12வயதுக்கு உட்பட்டோர் 27-32kg கறுவாவையும், வயது வந்தோர் 300Kg கறுவாவையும் வழங்க வேண்டும் என்று நிர்ப்பந்திக்கப் பட்டனர். கொடுக்க தவறுவோருக்கு தண்டனை வழங்கப்பட்டது.

iii) விவசாய நடவடிக்கைகளுக்கென மக்கள் கறுவாக் காடுகளை அழித்தனர். இதனை கட்டுப்படுத்தும் விதத்தில் காணி உரித்தினை உறுதிப்படுத்தும் ஆவணங்களை சமர்ப்பிக்க வேண்டும் என சட்டம் இயற்றப்பட்டமை.

iv) ஒல்லாந்தர்கள் பல்வேறு வரிகளை விதித்து மக்களை துன்புறுத்தியமை. உ-ம்: நெல் வரி

v) கண்டி மன்னன் (நரேந்திர சிங்கன்), பிரபுக்கள் ஆகியோரின் ஆதரவு கிடைத்தமை.

**28. கண்டியில் நாயக்க வம்சத்தவர் ஆட்சி.**

i) நரேந்திர சிங்கனின் மரணத்தின் பின்னர் அரசுரிமை தொடர்பில் சிக்கல் நிலை தோன்றியதால் மன்னனின் மனைவியின் சகோதரன் ஆட்சிக்கு வந்தான்.

ii) ஸ்ரீ விஜய இராஜசிங்கனே (1739- 1747) நாயக்க வம்ச முதல் மன்னனாவான்.

iii) இக்காலத்தில் கண்டி அரசவையில் ஏற்பட்ட தாக்கங்கள்.

- சிங்கள பிரதானிகளுக்கும் மன்னனுக்குமிடையே கருத்து முரண்பாடுகள் ஏற்பட்டமை.
- சிங்கள பிரதானிகளுக்கும் அரசவையிலிருந்த நாயக்க வம்சத்தவருக்கும் இடையில் நல்லுறவு நிலவாதிருந்தமை.
- மன்னனுக்கு மக்களின் ஆதரவு கிடைக்காமை.

iv) நாயக்க வம்சமன்னர்கள் மக்களின் ஆதரவை பெறுவதற்கு,

- அரசாமைப் பெயரை சிங்கள மொழியில் அழைத்தமை.
- புத்தமதத்தை தழுவி, புத்தபாரம்பரியத்தை பின்பற்றினர்.

## 29. கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் (கி.பி 1747-1782)

i) ஸ்ரீ விஜயராஜசிங்க மன்னனின் மனைவியின் சகோதரன்.

ii) மிகச் சிறுவயதில் (வயது14) சிம்மாசனம் ஏறிய இம் மன்னன் நாயக்கவம்ச மன்னர்களுள் சிறந்தவனாக விளங்கினான்.

iii) புத்த சமயத்தின் மேம்பாட்டுக்கு பல பணிகளை மேற்கொண்டான். இதனால் இலங்கை வலராற்றில் முக்கியமான மன்னனானான்.

- விகாரைகளை புனரமைப்பு செய்தான், கங்கராமை, குண்டலசாலை விகாரை, ரிதிவிகாரை போன்றவற்றில் புத்தர் சிலைகளை அமைக்க ஒழுங்கு செய்தான். தொட்டகமுவ விகாரை, முல்கிரிகல விகாரை, தம்புள்ள விகாரைகள் புனரமைப்பு செய்யப்பட்டன.
- வருடாந்தம் தலதாபெரஹரா நடாத்துவதற்கு ஒழுங்குகள் மேற்கொண்டமை.
- பின்னடைந்த பௌத்த மதத்தின் வளர்ச்சிக்காக பர்மா, சீயம் ஆகிய நாடுகளிலிருந்து பிக்குகளை வரவழைத்து உபசம்பதா நிகழ்வினை நடாத்தியமை.
- வலிவிட் ஸ்ரீ சரணங்கராஜ தேரரின் தலைமையில் உருவான பௌத்த சாசனத்தின் வெற்றிக்கு உதவியமை.

iv) ஒல்லாந்தருக்கு எதிராக மன்னனுக்கு உதவும் நோக்கில் ஆங்கில தூதுக்குழுக்கள் 1762ல் ஜோன்பைபஸ் தலைமையிலும், 1782 ஹியுபொயில் தலைமையிலும் கண்டிக்கு வந்தன.

v) கி.பி 1765ல் ஒல்லாந்து தளபதி பன் எக் கண்டி மீது படையெடுத்தான். மாற்று வழி இல்லாது ஒல்லாந்தருடன் 1766ல் ஒப்பந்தம் செய்து கொண்டான்.

## 30.கி.பி 1766ல் ஒல்லாந்தர் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் உடன்படிக்கை.

- விலெம் பில்க் என்ற ஒல்லாந்த தேசாதிபதி நிபந்தனைகளை கூறிய ஆவணத்தில் மன்னன் ஹங்குராங்கத்த பகுதியில் வைத்து கையொப்பம் இட்டு ஏற்றுக் கொண்டான்.

i) கொழும்பு, மாத்தளை, காலி, யாழ்ப்பாணம், மன்னார், திருகோணமலை, மட்டக்களப்பு போன்ற பிரதேசங்கள் ஒல்லாந்தரின் ஆட்சியின் கீழ் இருத்தல் வேண்டும்.

ii) கடற்கரையிலிருந்து 4மைல் (ஒரு கவ்வ) அகலப்பிரதேசம் ஒல்லாந் தருக்கு உரித்தாக வேணடும்.

iii) கண்டி இராச்சியத்தின் வர்த்தகம், கறுவா வர்த்தகம் என்பன ஒல்லாந்தர்களுக்கு உரித்தாகவேண்டும்.

iv) கரையோரப் பிரதேசத்திலுள்ள உப்பளங்கள் கண்டி மன்னனுக்குரியது எனினும் அப் பிரதேசங்களை ஒல்லாந்தரிடம் ஒப்படைப்பதன் மூலம் ஏற்படும் நட்டங்களை ஒல்லாந்தர் வருடாந்தம் மன்னனுக்கு செலுத்துவா.

v) கண்டிக்கு சென்ற சிங்களவர்கள் மீண்டும் கரையோரத்திற்கும், கரையோரம் சென்ற சிங்களவர்கள் மீண்டும் கண்டிக்கும் வருதல் வேண்டும்.

**31. பிரித்தானியரின் கவனம் இலங்கை மீது திரும்பியதற்கான காரணங்கள்**

i) கிழக்கு மேற்குக் கப்பற் பாதையின் முக்கியமான பாதையில் அமைந்திருந்தமை.

ii) வடகிழக்குப் பருவக் காற்றுக் காலங்களில் பாதுகாப்பாகக் கப்பல்களை நிறுத்தி வைக்கக் கூடிய இலங்கைத் துறைமுகமாக திருகோணமலை அமைந்திருந்தமை.

iii) இந்தியாவின் கிழக்கு மேற்குக் கரைகளின் கப்பற் பாதையை இலங்கையிலிருந்து நிர்வகிக்க முடிந்தமை.

**குறிப்பு**

1. கி.பி 1796இல் பிரித்தானியர் இலங்கையின் கரையோரப் பகுதிகளை கைப்பற்றினர்.
2. கி.பி 1796- 1798 வரை இலங்கையின் கரையோரப் பகுதிகளை ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனியினர் நிர்வகித்தனர்.
3. கி.பி 1797இல் வர்த்தக கம்பனியின் வரிக்கொள்கையால் கரையோர மக்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். இது தொடர்பில் விசாரிக்க "மியூரன் குழு" நியமிக்கப்பட்டது.
4. கி.பி 1798-1802 வரை ஆங்கில கிழக்கிந்திய வர்த்தக கம்பனியுடன் பிரித்தானிய அரசும் இணைந்து இலங்கையின் கரையோரப் பகுதிகளை நிர்வகித்தது.
5. கி.பி 1802 இலங்கையின் கரையோரப் பகுதிகள் பிரித்தானிய முடிக்குரிய குடியேற்றமாக்கப்பட்டது.

**32 ஆங்கிலேயர் மலைநாட்டின் மீது கவனம் செலுத்தியமைக்கான காரணங்கள்**

i) வர்த்தக நடவடிக்கைகளின் போது கடவைகளில் மலைநாட்டு மன்னனுக்கு வரி செலுத்த வேண்டியிருந்தமை.

ii) கொழும்புக்கும் திருகோணமலைக்கும் இடையே தொடர்புகளை மேற்கொள்வதற்கு மலைநாடு தடையாக இருந்தமை.

iii) நாட்டின் மத்தியில் சுதந்திரமான அரசு ஒன்று இருப்பது பிரித்தானிய நிர்வாகத்திற்கு இடையூறாக இருந்தமை.

iv) கரையோரத்திலும் மலைநாட்டு எல்லையிலும் காவல் நிலையங்களை வைத்திருப்பதனால் யுத்தச் செலவுகள் அதிகரித்தமை.

- கி.பி 1803 இல் ஆளுநர் பிறட்றிக் நோர்த் மலையகம் மீதான படையெடுப்பை மேற்கொண்டார்.

**33. மலையகம் மீதான பிரித்தானியரின் படையெடுப்பு தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்.**

i) நோய்கள் ஏற்பட்டமை

ii) மழைக் காலம் ஆரம்பமானமை

iii) உணவு, குடிபானங்களை பெற்றுக்கொள்வது சிரமமாக இருந்தமை.

iv) மருந்துகளைப் பெற்றுக்கொள்வதில் சிரமமாக இருந்தமை.

V) கொழும்புடன் தொடர்புகளை மேற்கொள்ள முடியாமை.

- இவ்வாறு இன்னல்களை முகங்கொடுத்த ஆங்கிலப்படையை மன்னன் ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன் இலகுவாக தோற்கடித்தான்.

**34. ஆளுநர் தோமஸ் மெயிட்லண்ட்**

i) ஆளுநர் பிரட்றிக் நோர்த்துக்கு அடுத்து இரண்டாவது ஆளுநராக நியமிக்கப்பட்டார்.

ii) ஆளுநர் பிரட்றிக் நோர்த் நீக்கிய இராஜகாரிய முறையை மீளவும் அமுல் செய்தார்.

iii) சிவில் உத்தியோகத்தர்கள் சிங்கள தமிழ் மொழிகளைக் கற்றுக் கொள்வதற்கு ஊக்குவித்தார்.

iv) கி.பி *1810* குற்றவியல் வழக்குகளை விசாரிப்பதற்கு ஜூரிசபை முறையை அறிமுகம் செய்தார்.

**35. கண்டி இராச்சியம் 1815ல் ஆங்கிலேயரிடம் வீழ்ச்சியடைந்தமைக்கான காரணங்கள்.**

i) கண்டி மன்னன் ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன் மக்களின் ஆதரவை இழந்தான்.

ii) முதலமைச்சரான பிலிமத்தலாவைக்கும் மன்னனுக்கும் இடையில் மனக்கசப்பு தோன்றியமை. இதனால் மன்னனின் ஆட்சியினை முறியடிப்பதற்கு பிலிமத்தலாவை ஆங்கிலேயர் பக்கம் சார்ந்தமை.

iii) சப்பிரகமுவாவில் ஏற்பட்ட கிளர்ச்சி. இதன் பின்னணியில் எஹலேபொல ஆங்கிலேயரிடம் தஞ்சமடைந்தமை. இவனது மனைவி பிள்ளைகளை மன்னன் கொடூரமான முறையில் கொலை செய்ததால் மக்களின் ஆதரவு கிடைக்காது போனமை.

iv) மொல்லிக்கொட மகா அதிகாரம் ஆங்கிலப் படையினருக்கு உதவியமை.

v) ஆங்கில **தேசாதிபதி றொபேட் பிறவுண்றிக்** கண்டியை வெற்றிகொண்டு மன்னனையும் குடும்பத்தினரையும் நாடு கடத்தினான்.

**36. கண்டி ஒப்பந்தம் : முக்கிய அம்சங்கள்**

i) கி.பி. *1815* மார்ச்02இல் ஆளுனர் றொபட் பிறவுண்றிக்கும் சிங்கள பிரதானிகளும் மேற்கொண்ட உடன்பாடு கண்டி ஒப்பந்தம் ஆகும்.

ii) இவ் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஒப்பந்தமானது கண்டி மகுல்மடுவ மண்டபத்தில் இடம்பெற்றது.

iii) கண்டி ஒப்பந்தத்தில் கூறப்பட்ட முக்கிய வாசகங்கள் வருமாறு:

- நாயக்கவம்சத்தவரது சிங்காசன உரிமை மறுக்கப்பட்டது.
- மலையகத்தினது ஆட்சி உரிமை பிரித்தானியருக்கு வழங்கப்பட்டது.
- பௌத்தமதமும் பௌத்த தலங்களும் பௌத்த குருமாரும் பிரித்தானியரால் பாதுகாக்கப்படும்.
- உடல் அங்கங்களை சேதப்படுத்தும் மனிதாபிமானமற்ற தண்டனைகள் ஒழிக்கப்படும்.
- மலையக மக்கள் சம்பந்தப்பட்ட குற்றவியல் வழக்குகள் மலையக சட்டங்களின் அடிப்படையிலேயே விசாரிக்கப்படும்.

### 37. கி.பி. 1818ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டம்

- வெல்லஸ்ஸ பகுதியில் ஆரம்பமான கிளர்ச்சிக்கு செல்வாக்குச் செலுத்திய காரணங்கள்.

i) பழைய சட்டதிட்டங்களின் படி ஆட்சியை நடத்துவற்கு ஆங்கிலேயர் ஒப்புக் கொண்டிருந்தாலும் அவை செயற்படுத்தப்படாமை.

ii) மலை நாட்டின் பழக்கவழக்கங்களைப் பின்பற்றாமையும் அவற்றை கைவிட்டமையும்.

iii) சமய வழிபாட்டிடங்கள், பௌத்த குருமார்கள் தொடர்பான கடப்பாடுகளை நிறைவேற்றாமை.

iv) மலைநாட்டுப் பிரதானிகளுக்கு உரியதாயிருந்த வருமான வழிகள், சலுகைகள் ஒழிக்கப்பட்டமை.

v) சிங்களவர் பெரும்பான்மையாக வாழ்ந்த வெல்லஸ்ஸ பிரதேசத்தில் ஹஜ்ஜிமரிக்கார் என்ற முஸ்லிம் முகாந்திரம் பதவியில் அமர்த்தப் பட்டமை.

### 38. கி.பி 1848 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்திற்கான காரணங்கள்

i) கிராம சபைகளுக்கு உரித்தாயிருந்த நீதி அதிகாரங்களை நீதி மன்றங்களுக்கு ஒப்படைத்தமையால் சிறிய பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளவும் நீதிமன்றங்களுக்குச் செல்ல நேரிட்டமை.

ii) கி.பி 1840 இல் கொண்டு வரப்பட்ட தரிசு நிலச்சட்டத்தால் விளைவிக்கப்படாத நிலங்கள் அனைத்தும் அரசால் சுவீகரித்துக் கொள்ளப் பட்டமை.

iii) பொது நிலங்களான புல்நிலங்கள் கோப்பிச் செய்கைக்காகப் பெறப் பட்டமையால் மந்தை வளர்ப்பிற்கான வாய்ப்புகளை மக்கள் இழந்தமை.

iv) பெருந்தோட்டச் செய்கையால் கிராமிய வாழ்க்கை முறை சிக்கலுக் குள்ளானமை.

v) மதுபானசாலைகள் பெருகியமையால் சமூக வாழ்க்கை சீர் குலைந்தமை.

vi) ஆங்கிலேயரின் ஆட்சியை ஏற்றுக்கொள்வதில் மக்களிடையே காணப்பட்ட வெறுப்புணர்ச்சி.

viii) ஆளுநர் டொரிங்டனால் புதியவரிகள் விதிக்கப்பட்டமை,

- கடஹபொலதேரர் (குடாபொலதேரர்), கொங்காலே கொட பண்டா, வீரபுரன் அப்பு போன்ற தலைவர்கள் இக் கிளர்ச்சிக்கு தலைமை தாங்கினர்.

**39. போர்த்துக்கேயர் ஆட்சியின் செல்வாக்குகள்.**

i) உரோமன் கத்தோலிக்க சமயம் அறிமுகம் செய்தமை. சமயத்தை தழுவியவர்களுக்கு மானியங்கள், நன்கொடைகள், வரிச் சலுகைகள் வழங்கப்பட்டன.

ii) தேவாலயங்களுக்கு அருகில் சமயப் பாடசாலைகள் ஆரம்பிக்கப் பட்டமை. கல்வி மூலம் மதம் பரப்பப்பட்டது. கத்தோலிக்க மதத்தை தழுவியவர்களுக்கே நிர்வாகத்துறை பதவிகள் வழங்கப்பட்டன.

iii) போர்த்துக்கேய குடும்ப பெயர்களும், தனிப்பட்ட பெயர்களும் சமூகத்தில் சேர்ந்தமை.
உ-ம் :- குடும்ப பெயர்கள்:- சில்வா, பெரேரா, பர்ணாந்து, செபஸ்ரியான், பொன்சேகா
-தனிப்பட்டபெயர்கள்: - சீமன், லெயிசா, ஜுவன், தொன்

iv) போர்த்துக்கேய சொற்கள் சிங்கள, தமிழ் சொற்களுடன் கலந்தமை
உ-ம்:- அலுமாரி, வாங்கு, களிசான், கோப்பை, கடதாசி, துப்பாக்கி அலவாங்கு, விறாந்தை, பாண், பற்றீஸ், உறுகாய், தக்காளி, அச்சாறு, மிளகாய், சம்பல், சாராயம், அன்னாசி.

v) கபிஞ்ஞா, பைலா பாடல் போன்ற சங்கீத முறைகளை அறிமுகம் செய்தனர்.

**40. ஒல்லாந்தர் ஆட்சியின் செல்வாக்குகள்.**

i) புரட்டஸ்தாந்து கிறிஸ்தவ மதத்தை அறிமுகம் செய்தனர்.

ii) உரோமன் - டச்சுச் சட்டத்தினை அறிமுகம் செய்தனர்.

iii) தேசவழமை என்று யாழ்ப்பாணத்தில் தமிழ் மக்களிடம் செல்வாக்குச் செலுத்திய சட்டங்களின் தொகுப்பபை வெளியிட்டனர்.

iv) பறங்கியர் என்ற மக்கள் பிரிவினர் இலங்கைச் சமூகத்தில் உரு வாகியமை.

v) நவீன அச்சுக்கலையை அறிமுகப்படுத்தினர்.

vi) டச்சுக்கட்டிடமுறை இந்நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டது. மொறட்டுவையில் மரத்தளபாடக் கைத்தொழிலை ஆரம்பிப்பதற்கு முன்னோடிகளாக இருந்தனர்.

vii) சிங்கள மொழியில் ஒல்லாந்து சொற்கள் கலந்துள்ளன.
உம்:- இஸ்தோப்பு, பராதய, ஒரலோசுவ, பூதல், கந்தோரு

# 10 கைத்தொழில் புரட்சி

**1. கைத்தொழில் புரட்சி என்றால் என்ன?**

i) மனிதன் செய்கின்ற வேலைகளுக்குப் பதிலாக இயந்திர சாதனங்களை பயன்படுத்தும் நிகழ்வை கைத்தொழில் புரட்சி எனலாம்.

ii) மனிதன் தன் இருகரங்களினாலும் செய்கின்ற வேலைகளுக்குப் பதிலாக இயந்திர சாதனங்களைப் பயன்படுத்தி பொருளுற்பத்தியை ஏற்படுத்துகின்ற பெரியளவிலான மாற்றம் கைத்தொழில் புரட்சி ஆகும்.

**௨. கைத்தொழில் புரட்சி முதலில் தோன்றிய நாடும் காலப் பகுதியும்.**

i) 18ஆம் நூற்றாண்டில் முதன்முதலாக கைத்தொழில்புரட்சி இங்கிலாந்தில் ஆரம்பமானது

ii) கி.பி. 1750 - 1830க்கும் இடைப்பட்ட காலத்திலேயே இப்புரட்சி ஏற்பட்டுள்ளது.



ஐரோப்பிய பொருளாதாரத்தில் ஏற்பட்ட இந்தமாற்றத்தை "ஆர்னோல்ட் டொயின்பி" என்ற வரலாற்றாசிரியரே "புரட்சி" என்ற பெயரில் அழைத்தார்.

**3. கைத்தொழில் புரட்சி இங்கிலாந்தில் ஏற்பட்டமைக்கான காரணங்கள்**

i) **பொருளாதாரக் காரணங்கள்.**

- பணத்தின் தோற்றத்தினால் இங்கிலாந்தில் நகர வர்த்தகமும் வெளிநாட்டு வர்த்தகமும் விரிவடைந்தது. இதனால் பெருமளவு நிதியை (மூலதனம்) பிரித்தானியா கொண்டிருந்தது.
- தேவையான மூலப்பொருட்களை இங்கிலாந்திலிருந்தும் தனது குடியேற்ற நாடுகளிலிருந்தும் (அமெரிக்கா, இந்தியா, ஆபிரிக்கா, இலங்கை) இலகுவாகப் பெற்றுக் கொள்ள முடிந்தமை.
- தேவையான வளங்கள் இங்கிலாந்தில் இருந்தமை. குறிப்பாக இயந்திரங்களை இயக்குவதற்குத் தேவையான நிலக்கரியைப் பெறக்கூடியதாக இருந்தமை.
- சிறிய நிலங்கள் ஒன்றாக இணைக்கும் காணியடைப்பு இயக்கத்தினால் நிலங்களை இழந்த விவசாயிகள் வேலைதேடி நகரங்களுக்கு வந்தமை.
- இங்கிலாந்தின் விவசாயத்துறையில்ஏற்பட்ட மாற்றங்கள்
- இங்கிலாந்தின் சுதந்திர வர்த்தகக் கொள்கை
- இயற்கையாக அமைந்துள்ள ஆறுகள் காரணமாக உள்நாட்டில் கால்வாய்ப் போக்குவரத்தினை ஏற்படுத்துவது சுலபமாக இருந்தமை.

ii) சமூகக் காரணங்கள்.

- சனத்தொகைப் பெருக்கத்தினால் உற்பத்தியில் நவீன முறைகளைப் பிரயோகிக்க வேண்டி ஏற்பட்டமை.
- மறுமலர்ச்சியின் பயனாக 15ஆம், 16ஆம் நூற்றாண்டுகளில் விஞ்ஞானத் துறையில் ஏற்பட்ட வளர்ச்சி.
- புதிய புதிய கண்டுபிடிப்புகளுக்கு பரிசில்கள் வழங்கப்பட்டு மேலும் கண்டுபிடிப்புகளை ஊக்குவித்தமை.
- 17ஆம் நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்தில் நிலமானியச் சமூகமுறை ஒழிக்கப்பட்டு குடியானவர்கள் விடுதலை பெற்றமையால் தேவையான தொழிலாளர்களை நகரில் பெறக்கூடியதாக இருந்தமை.

## 4. கைத்தொழில் புரட்சியில் தோல்வியடைந்த ஐரோப்பிய நாடுகள்

i) இங்கிலாந்தைப் போன்று 18ஆம் நூற்றாண்டில் பிரான்ஸ், ஜேர்மனி பெல்ஜியம், ஒல்லாந்து போன்ற நாடுகள் கைத்தொழில் புரட்சியின் பொருட்டு மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தும் தோல்வி கண்டன.

ii) தோல்விக்கான காரணங்கள் வருமாறு.

- பிரான்சில் இயந்திரங்கள் மூலம் செய்யப்படும் பொருட்களை விட குடிசைக் கைத்தொழில் செய்யும் பொருட்களை மக்கள் விரும்பியமை
- ஒல்லாந்தில் இயற்கைவளங்கள் இல்லாமை
- பிரான்சில் காணப்பட்ட உள்நாட்டு இறைவரி முறைகள்
- பிரான்சில் இங்கிலாந்தைப் போல் நில அடைப்பு நிகழாமை குறிப்பாக சிறு நில உரிமையாளர் அதிகரித்துக் காணப் பட்டமை.
- பிரான்சியப் புரட்சியால் ஏற்பட்ட பயங்கர யுத்தங் காரணமாகத் தொழிற்சாலைகள் அழிவுற்றமை.
- நெப்போலிய யுத்தம் முடிவடைந்த போதிலும் போரினால் களைப் படைந்த முயற்சியாளர்கள் புது வழிகளைக் கண்டு பிடிக்க முன் வராமை
- இங்கிலாந்தின் சுய உற்பத்திகள் வெளியுலகிற்கு வழங்கப்படாமை
- கி.பி 1825ஆம் ஆண்டுவரை இங்கிலாந்து தன்தொழில் நிபுணர்கள் வெளிநாடுகளுக்குச் செல்வதற்கு சந்தர்ப்பத்தை வழங் காமை.

## 05. 19ஆம் நூற்றாண்டில் கைத்தொழில் புரட்சி பரவுதல்.

- 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து போல ஏனைய ஐரோப்பிய நாடு களிலும் கைத்தொழில் புரட்சி பரவலடைந்தது இதற்கு செல்வாக்குச் செலுத்திய காரணங்கள் வருமாறு.

i. ஐரோப்பிய கண்டத்திலும் குடியேற்ற நாடுகளிலும் சனத்தொகை அதிகரித்தமை.

ii. ஐரோப்பிய கண்டத்தில் போக்குவரத்து அதிகரித்தமை.

iii. வர்த்தக வளர்ச்சியின் பொருட்டு சட்டங்களும், நிருவாக சீர் திருத்தங்களும் ஏற்பட்டமை

iv. கைத்தொழில்களுக்கும், வீதி அமைத்தலுக்கும் அரச அனுசரணை கிடைத்தமை.
v. யுத்த காலத்தில் இங்கிலாந்தின் பஞ்சு ஏற்றுமதிக்கு தடை ஏற்பட்ட தால் ஐரோப்பாவில் கம்பனி உடைக்கும் கேள்வி அதிகரித்தமை
vi. வரிகள் நீக்கப்பட்டதால் எளிதாக மூலப் பொருட்களைப் பெற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தமை
vii. பிரான்சிலும் ஜேர்மனியிலும் நிலக்கரி கண்டுபிடிக்கப்பட்டமை.

## 06. இங்கிலாந்தில் கைத்தொழில் புரட்சி ஏற்பட்ட துறைகள்

i) முதன் முதலாக பின்வரும் துறைகளில் புரட்சி ஏற்பட்டது.
- புடவைத் தொழில்
- நிலக்கரித் தொழில்.
- இரும்பு உருக்குத் தொழில்.

ii) பிற்பட்ட காலத்தில் போக்குவரத்து, தொடர்பாடல், விவசாயம் போன்ற துறைகளில் புரட்சி ஏற்பட்டது.

## 07.கைத்தொழில் புரட்சிக் காலத்தில் நிகழ்ந்த கண்டுபிடிப்புக்கள்.

| சம்பந்தப்பட்டதுறை | | ஆண்டு | பெயர் | நிகழ்வு (கண்டுபிடிப்பு) |
|---|---|---|---|---|
| புடவைக் கைத்தொழில் | 1 | 1733 | ஜோன் கே | நூனாழி (பறக்கும் தறிஓடம்) |
| | 2 | 1769 | ஜேம்ஸ் மற்றும் கிறீவ்ஸ் | ஜெனி (கம்பனி நெசவுக்கானது) |
| | 3 | 1769 | ஜோன் ஆக்ரைட் | நீர்ச்சட்டம் |
| | 4 | 1790 | காட்ரைட் | விசைத்தறி |
| | 5 | 1824 | – | கம்பனி நெசவு இயந்திரம் (மின்வலுவால் இயங்குதல்) |
| | 6 | 1846 | எலியஸ் கோவே | தையல் இயந்திரம் |
| | 7 | – | தோமஸ் பெல் | சிலிண்டர் அச்சிடும் முறை |
| இரும்பு | 8 | 1730 | ஆபிரகாம் டார்வி | விறகுக்குப் பதிலாக நிலக்கரியைப் பயன்படுத்தி இரும்பினை உருக்கும் முறை |
| | 9 | 1784 | ஹென்றி கோட் | ரோலர் எனும் இயந்திரத்தால் இரும்பு உருக்கும் முறை. |
| | 10 | 1856 | ஹென்றி பேஸ்மர் | இரும்பிலுள்ள கழிவுகளை அகற்றி உலோகங்களை உருவாக்கும் முறை |
| | 11 | 1878 | வில்லியம்ஸ் சீமன்ஸ் | இரும்புத்தாது உருவாக்கு வதற்கு மின்சார சூளை தயாரித்தல் |

| | | | | |
|---|---|---|---|---|
| நிலக்கரிக் கைத்தொழில் | 12 | 1736 | நியூ கொமன் | நீராவிஇயந்திரம் (சுரக்கத்தின் நீரைக் குழாய் மூலம் வெளியேற்றவும் செயற்கையாக வாயுவைக் குளிரூட்டி அனுப்ப உதவியது) |
| | 13 | 1774 | ஜேம்ஸ் வாட் (1734–1819) | நீராவி இயந்திரம் (நியுகொமனின் கண்டு பிடிப்பிலுள்ள குறைகளை நீக்குதல்) |
| | 14 | 1812 | ஹம்ரிடேவி | பாதுகாப்பு விளக்கு |
| போக்குவரத்து | 15 | 1811 | ஜோன்மெக்டம் | பெருந்தெருக்களை அமைக்கும் போது மெக்டம்முறை அறிமுகம் |
| | 16 | 1814 | ஜோர்ஜ் ஸ்டீவன்ஸ் | நீராவியால் இயங்கும் புகையிரத என்ஜின் கண்டுபிடித்தல் |
| | 17 | 1807 | ரொபட் புல்டன் | "கிளெர்மோன்ட்" எனும் புகைப் படகை நீராவியினால் உபயோகித்தல் |
| | 18 | 1811 | ஹென்றிபெல் | புகைக் கப்பல் |
| | 19 | 1885 | டெம்ளர் | மோட்டார் வண்டி |
| | 20 | 1903 | ரைட்சகோதரர்கள் | ஆகாயவிமானம் |
| செய்தித் தொடர்பாடல் | 21 | 1840 | – | "பெனி"தபால் சேவை ஆரம்பம் |
| | 22 | 1844 | சாமுவேல் மோர்ஸ் | தந்தி முறை |
| | 23 | 1876 | அலெக்சாண்டர் –கிராகம்பெல் | தொலைபேசி |
| | 24 | 1895 | மார்க்கோணி | வானொலி |



நீராவி இயந்திரம்



அச்சு இயந்திரம்




ஐரோப்பாவில் கைத்தொழிற் புரட்சியின் பரவல்



நூல் நூற்கும் இயந்திரம்



நீர்ச்சட்டம்



பாரிய நெசவு இயந்திரம்



இரும்பை உருக்கும் நவீன இயந்திரம்



கிரஹம்பெல்லின் தொலைபேசி


டெய்லரின் மோட்டார் வண்டி


ரைட் சகோதரர்களின் விமானம்

## 08. கைத்தொழில் புரட்சியின் விளைவுகள்

### 01. அரசியல் விளைவுகள்

i. உச்ச இலாபத்தைப் பெறும் நோக்குடன் பணத்தை முதலீடு செய்ய முதலாளி வர்க்கமும், உழைப்பை விற்று வாழ்ந்த தொழிலாளர் வர்க்கமும் தோற்றம் பெற்றன.

ii. செல்வந்தர்கள் ஏழைகளின் உழைப்பைச் சுரண்டி பெரும் இலாபம் அடைந்தனர்.

iii. செல்வந்தரான முதலாளி வர்க்கத்திற்கும், ஏழைகளான தொழிலாளர் வர்க்கத்திற்கும் இடையே மோதல் ஏற்பட்டது.

iv. தொழிற்சங்கங்கள் தோற்றம் பெற்றன. குறிப்பாக ஊழியர் வேலைநிறுத்தம், உரிமைகளுக்காகப் போராடுதல் போன்ற செயற்பாடுகள் ஆரம்பமாகியமை.

v. புதிய அரசியற் கருத்துக்கள் தோன்றின. குறிப்பாக கார்ஸ் மார்க்ஸ் என்பரால் சமவுடைமைக் கோட்பாடும், அடம்ஸ் சிமித்தால் தலையிடாமைக் கோட்பாடும் முன்வைக்கப் பட்டது.

vi. புதிய பேரரசுவாதம் கி.பி 1850களின் பின்னர் ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்பட்டமை

vii. சமவுடைமைவாதம், தாராண்மைவாதம், முதலாளித்துவ வாதம், புதிய பேரரசுவாதம் என்பன அரசியலில் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகும்.

### 02. பொருளாதார விளைவுகள்

i. வர்த்தக நடவடிக்கைகள் பொருளாதாரத்தில் முதன்மை பெற்றமை.

ii. விவசாயத்துறையில் இயந்திர உபகரணங்கள் பயன்படுத்தப்பட்ட தால் உற்பத்தி அதிகரிக்கப்பட்டு சந்தைப்படுத்தப்பட்டமை

iii. சிறு நிலச் சொந்தக்காரர்களாகிய விவசாயிகள் தொழிற்சாலை களில் வேலை செய்வதற்காக நகரங்களை நோக்கிப் படை யெடுத்தமை.

iv. உற்பத்தியில் சிறப்புத்தேர்ச்சி, தொழிற்பிரிப்பு என்பவற்றால் மனிதனின் வேலைப்பளு குறைவடைந்தது.

v. விரிவடைந்து சென்ற வர்த்தக நடவடிக்கைகளுக்கான பணம் முதலீடு செய்தல் தனியாரால் முடியாது போகவே வர்த்தக நிறுவனங்கள் தோற்றம் பெற்றன.

உ+ம்:

- ஆங்கில கிழக்கிந்திய வர்த்தக சங்கம்
- ஒல்லாந்து கிழக்கிந்திய வர்த்தக சங்கம்

vi. வர்த்தக நிறுவனங்கள் உற்பத்திச் செயற்பாடுகளிலும் விற்பனைச் செயற்பாடுகளிலும் ஈடுபட்டதோடு பணம், வங்கிச் செயற் பாடுகளிலும் ஈடுபட்டமை.

**03. சமூகவிளைவுகள்**

i. ஐரோப்பிய நாடுகளில் நகரங்களின் எண்ணிக்கை அதிகரித்தமை

ii. செல்வந்தர், ஏழை என்ற பிரிவினர் சமூகத்தில் தோன்றியமை

iii. மத்திய வகுப்பினர் தோற்றம் பெற்றமை. அதாவது வங்கி யாளர்கள், ஒப்பந்தக்காரர்கள், தொழிநுட்பவியலாளர்கள் என்போரே மத்திய வகுப்பினர் ஆவர்.

iv. தொழிலாளர் வகுப்பினர் சமூகத்தில் பின்தள்ளப்பட்டு ஏழை களாக வாழ்ந்தனர்.

v. தொழிற்சாலை கழிவுகளால் சுற்றாடல் மாசடைந்து காணப் பட்டமை.

**9. "கைத்தொழில் புரட்சி என்பது முடிவில்லாத ஒரு செயன்முறையாகும்" விளக்குக?**

- இன்றும் கூட புதியகண்டுபிடிப்புக்கள் தொடர்கின்றது. அத்துடன் சிந்தனைத்துறையில் ஏற்பட்டுவரும் வளர்ச்சி புதியதகவல்களை தருகின்றன இதற்கு பல உதாரணங்களைக் காட்ட முடியும்.

i) செயற்கைக் கோள், பக்ஸ், ஈமெயில், இன்ரநெற், போன்ற விடயங்கள் தொடர்புசாதனத் துறையில் ஏற்பட்டுவரும் துரிதமான வளர்ச்சியால் உடனுக்குடன் தகவல்களை அறிந்துகொள்ள முடிகின்றது.

ii) கணனியின் உருவாக்கம் இன்று கணனியுகம் ஒன்றைத் தோற்று வித்துள்ளது.

iii) இருதய மாற்று சத்திரசிகிச்சை, லேசர் கதிர்ச்சிகிச்சை, பிளாஸ்ரிக் சத்திரசிகிச்சை, பரிசோதனைக் குழாய்க் குழந்தை போன்றவிடயங்கள் மருத்துவத்துறையில் ஏற்பட்டுவரும் வளர்ச்சியைக் காட்டி நிற்கின்றது.

iv) இன்றைய உலகில் பாரிய விஞ்ஞான ஆராய்ச்சிகளாகக் கருதப்படும் விண்வெளிப்பயணம் பற்றிய ஆய்வுகள், அணுவாயுத உற்பத்தி பற்றிய ஆய்வுகள் கைத்தொழில்புரட்சி முடிவில்லாத ஒரு செயன்முறை என்பதையே வெளிப்படுத்துகின்றது.

# 11 ஐரோப்பாவில் புதிய அரசியல் சிந்தனையில் ஏற்பட்ட வளர்ச்சி

**01. மானிடவாதம் என்பது யாது?**

i) ஏனைய எல்லாவித உயிரினங்களையும், தெய்வங்களையும் விட மனிதன் உயர்வானவன் என ஏற்றுக்கொள்ளுதலே மானிடவாத மாகும்.

ii) ஐரோப்பாவில் மானிடவாதம் என்னும் கருத்து மறுமலர்ச்சி காலத்தில் மேலெழுந்த போதிலும் சிறிதளவாவது செயலுருவில் வந்து பிரான்சியப் புரட்சியின்போதே ஆகும்.

iii) பிரான்சில் நெப்போலியனால் மானிடவாத சீர்திருத்தங்கள் ஏற் படுத்தப்பட்டது.

**02. பிரான்சியப்புரட்சி : முக்கிய அம்சங்கள்.**

i) கி.பி 1789ஆம் ஆண்டில் பிரான்சை ஆட்சி செய்த 16ஆம் லூயி மன்னனுக்கு எதிராக ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சியே பிரான்சியப் புரட்சி ஆகும்.

ii) ஐரோப்பிய வரலாற்றில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த புரட்சிகளில் ஒன்றாகும். பிற்பட்ட காலங்களில் ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சிகளுக்கு ஒரு வழிகாட்டியாகவும் பிரான்சியப் புரட்சி அமைந்துள்ளது.

iii) 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்ட புரட்சியானது நிலமானிய அரசமுறையிலிருந்து நவீன காலத்திற்கு நாட்டினை இட்டுச் சென்றது.

iv) புரட்சியின் போது பிரான்சிய மன்னராக 16ஆம் லூயி இருந்தான் இவனுக்கு முன்னர் ஆட்சி செய்த 14ஆம், 15ஆம், லூயி மன்னர் களின் காலத்திலேயே புரட்சிக்கான காரணங்கள் படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்தன.

**03. பிரான்சியப் புரட்சிக்கான காரணங்கள்**

**01. அரசியல் காரணங்கள்**

i) பிரான்சில் ஏனைய ஐரோப்பிய நாடுகளைப் போன்று அரசியல் சீர்திருத்தங்கள் நடைபெறாமை.
உ+ம்: இங்கிலாந்தில் பாராளுமன்ற முறை தோன்றிய போதிலும் பிரான்சில் தொடர்ந்து முடியாட்சி முறையே நிலவியமை

ii) லூயி ஆட்சியாளர்களின் ஆட்சி தெய்வீக வழிவந்த கோட் பாட்டின் அடிப்படையில் அமைந்தமை. குறிப்பாக 14ஆம் லூயி மன்னன் "நானே அரசன் நானே நாடு" எனக் கூறியமை.

iii) மன்னர்கள் அளவற்ற அதிகாரத்தைக் கொண்டிருந்ததனால் காரணமின்றி கைதுசெய்தல், தண்டனை அளித்தல் போன்ற வற்றால் அரசியல் எதிரிகளை அடக்கினான். பஸ்தீல் சிறைச் சாலையில் அவர்கள் அடைக்கப்பட்டு சித்திரவதை செய்யப் பட்டனர்.

iv) ஸ்டேட் ஜெனரல் என்ற பாராளுமன்றம் கூட்டப்படாமை. இப் பாராளுமன்றம் குருமார், பிரபுக்கள், சாதாரணமக்கள் என் போரைக் கொண்டிருந்தது. இச்சபை கி.பி 1614 ஆம் ஆண்டின் பின்னர் கூட்டப்படாமல் மன்னனால் புறக்கணிக்கப்பட்டு வந்தமை.

v) 14ஆம் லூயிமன்னனுக்குப் பின் ஆட்சி செய்த மன்னர்கள் திறமை யானவர்களாக இல்லாததனால் ஒழுங்கற்ற அரசியல் நிர்வாகம் காணப்பட்டமை.

vi) 16ஆம் லூயிமன்னன் செயற்திறன் அற்றவனாகக் காணப் பட்டான். குறிப்பாக பழமையான சிந்தனையுடைய வயோதிபரான மொரிபா என்பவரை ஆலோசகராக கொண்டிருந்தமை. மனைவியான மேரி அன்டோயினட் வெளிநாட்டவளாக இருந்ததால் தேவையற்ற விதத்தில் பிரான்சிய நிர்வாகத்தில் தலையிட்டமை மக்களை வெறுப்புக்குள்ளாகியது.

**02. பொருளாதாரக் காரணங்கள்**

vii. எல்லையற்ற வரிவிதிப்பால் சாதாரண பொதுமக்கள் தமது வருமானத்தின் பெரும்பகுதியை வரியாகச் செலவிட்டனர். வேலிவரி, உப்புவரி கெப்பிடேஷன் எனும் புதிய வரி, நீர் வரி போன்றன குறிப்பிடத்தக்கது.

viii. ஐரோப்பாவில் மறுமலர்ச்சியுடன் வர்த்தகத்தின் மூலம் வர்த்தகர்கள், பொருளியலாளர்கள், வழக்கறிஞர்கள், சிந்தனை யாளர்கள் போன்ற மத்திய வகுப்பினர் தோன்றினர் ஆயினும் பிரான்சிலிருந்த மத்தியவகுப்பினரால் அரசியல் செயற்பாடு களில் பங்குபற்ற முடியாமையும் புரட்சிக்குக் காரணமாகியது.

ix. கி.பி 1786இல் இங்கிலாந்துடன்செய்து கொள்ளப்பட்ட "ஈடன் உடன்படிக்கை" காரணமாகப் புடவை இறக்குமதி மீதான வரி நீக்கப்படவே பிரான்சின் சிறுகைத்தொழில் உற்பத்திகள் ஸ்தம்பிதம் அடைந்தமை.

x. வெளிநாட்டு யுத்தங்கள் காரணமாக அரச திறைச்சேரி வெறுமையடைந்தமை.

xi. செல்வந்தர், ஏழை என்ற காரணத்தாலும் பிரபுக்களிடையே மோதல்கள் ஏற்பட்டமை.

xii. பிரபுக்களின் நிலங்களையே மக்கள் பயன்படுத்த வேண்டிய கட்டாயம் காணப்பட்டதுடன் வரியும் செலுத்த வேண்டி ஏற்பட்டமை.

xiii. பிரபுக்கள் வேலியடைப்புச் செய்ததால் விவசாயிகளுக்கு அவர்களின் கால்நடைகளுக்கான புற்றரை இல்லாமல் போனமை.

**03. ஏனைய காரணங்கள்**

xiv) ரூசோ, வோல்டேயர், மொன்டஸ்கியூ போன்ற தத்துவ ஞானிகள் முன்வைத்த மானிடவாதக் கொள்கைகள் மக்களை சிந்திக்கத் தூண்டியது.

xv) இங்கிலாந்திலிருந்த பாராளுமன்ற முறையும், கி.பி. 1776 இல் நடைபெற்ற அமெரிக்க சுதந்திரப்போரும் பிரான்சியப் புரட்சிக்கு வித்திட்டது.

**04. பிரான்சியப் புரட்சியின் ஆரம்பம்: முக்கிய அம்சங்கள்**

i) 16ஆம் லூயி மன்னனின் இறுதிக் காலத்தில் பிரான்சில் ஏற்பட்ட நிதி நெருக்கடியை சீர்செய்யும் நோக்குடன் சுமார் 175 வருட காலமாக கூட்டப்படாமலிருந்த பாராளுமன்றத்தை கி.பி 1789 இல் மன்னன் கூட்டினான்.

ii) நிலையான அரசாங்கத்தை ஸ்தாபிக்குமாறு சலுகைகளை இழந்த சாதாரண மக்கள் "டெனிஸ் மைதானத்தின் சத்தியப் பிரமாணம்" மூலம் வலியுறுத்தியமை பாராளுமன்றத்தில் நெருக்கடியைத் தோற்றுவித்தது.

iii) கி.பி 1789இல் பிரான்சில் ஏற்பட்ட பஞ்சம் காரணமாக பொதுமக்கள் வீதியில் இறங்கி அரசனுக்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்ததுடன் பஸ்டீல் சிறைச்சாலையைத் தாக்கினர். இந்நிகழ்வு புரட்சிக்கு வித்திட்டது.

iv) கி.பி 1789 ஆகஸ்ட் 29இல் மனித உரிமை தொடர்பான சாசனம் வெளியிடப்பட்டது. இதில் "அனைத்து மனிதர்களும் சமமானவர்கள், அவர்கள் சட்டம் இயற்றுவதில் பங்கேற்க வேண்டும், கருத்து வெளியிட அவர்களுக்கு உரிமையுண்டு" என குறிப்பிடப்பட்டிருந்தது.

v) கி.பி 1791இல் புதிய யாப்பு உருவாக்கப்பட்டதுடன் சட்டமியற்ற 750 பேரைக் கொண்ட சபையை அமைத்து அரசனின் அதிகாரம் மட்டுப்படுத்தப்பட்டது.

vi) பிரான்சு நாட்டின் ஆட்சிமன்றம் மன்னர் ஆட்சி முறையை ஒழித்து பிரான்ஸை குடியரசாகப் பிரகடனம் செய்தது. அத்துடன் மன்னரை குற்றவாளி என ஆட்சி மன்றம் தீர்மானித்து மரண தண்டனைத் தீர்மானமும் ஒரு வாக்கு வித்தியாசத்தில் நிறை வேறியது.

vii) கி.பி 1793இல் 16ஆம் லூயி மன்னனும் அவரது மனைவி மேரி அன்டடோயின்ட்டும் மரணதண்டனைக்கு உட்படுத்தப் பட்டனர்.

viii) சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற எண்ணக்கரு பிரான் சிலும் அதற்கு வெளியிலும் பரவியதுடன் மனித உரிமையைப் பாதுகாத்த புரட்சியாகவும் விளங்கியது.



16ஆம் லூயியின் தலை துண்டிக்கப்படல்



16ஆம் லூயி

**05. பிரான்சியப் புரட்சியின் விளைவுகள்**

i) 1791இல் வெளியிட்ட மனிதஉரிமைகள் தொடர்பான பிரகடனம் உலகம் முழுவதற்கும் பிரசித்தி பெற்றுள்ளது.

ii) பலரது உடைமைகளையும் சொத்துக்களையும் இப்புரட்சி இழக்கக் காரணமாக அமைந்ததோடு பல உயிர்களை இழக்கவும் செய்தது.

iii) பூபன் வம்சத்தவர்களின் ஆட்சிக்கு முடிவு காணப்பட்டது.

iv) மானியமுறைப் பொருளாதார அமைப்பு முற்றிலும் வீழ்ச்சி கண்டது.

v) முதலாளித்துவப் பொருளாதார அமைப்பு உருவாகியது.

vi) மக்களின் உணர்வுகளை எடுத்துக்காட்டி மக்களாட்சியை நோக்கி நாடு செல்வதற்கு வழிவகுத்தது.

vii) சிறுகாணிச் சொந்தக்காரர்களான விவசாயிகள் வர்க்கம் ஒன்று தோன்றியமை.

viii) சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கோட்பாடுகள் மக்களிடையே பரவின.

ix) பலருக்கு வழிகாட்டியாக விளங்கியது இத்தாலிய ஐக்கியம்,

ஜேர்மனியஐக்கியம், அவுஸ்திரியா, கிரேக்கம், ஸ்பெயினில் நடந்த புரட்சிகள், என்பன இப்புரட்சியின் விளைவுகளே.

x) பிரான்சின் கொடியில் மாற்றங்கள் ஏற்பட்டன. வெள்ளை நிறக் கொடிக்குப் பதிலாக மூவர்ணக் கொடி (சிவப்பு, வெள்ளை, நீலம்) ஏற்படுத்தப்பட்டது.

xi) பல தத்துவ அறிஞர்கள், சிந்தனையாளர்கள், எழுத்தாளர்கள், போன்றவர்களை இப்புரட்சி உலகிற்கு வழங்கியது.

**06.பஸ்தீல் சிறைச்சாலை - சில அம்சங்கள்**

i) பிரான்சிய மன்னர்கள் தமது அரசியல் எதிரிகளை (கைதிகளை) தடுத்துவைக்கும் கோட்டையாகும்.

ii) 8 அடுக்கு மாடியான இந்தக் கோட்டை பழைய அரசியல் முறையின் சின்னமாக விளங்கியது.

iii) முழு ஐரோப்பாவிலும் பிரசித்தி பெற்றிருந்த இச்சிறைச்சாலை பிரெஞ்சு மன்னர்களின் எதேச்சதிகாரப் போக்கினை எடுத்துக் காட்டும் ஒரு சின்னமாகவும் உள்ளது.

iv) ஸ்ரேற் ஜெனரல் சபையில் தோன்றிய நெருக்கடி படிப்படியாக நாடெங்கும் பரவியது அதாவது அரசியையும் அரசியின் சகோதரனையும் தலைவராகக் கொண்ட பிரபுத்துவக் கட்சி ஏற்படுத்திய சில நடவடிக்கைகளினால் அரசனுக்கும் மக்களுக்கும் இடையே பிளவு ஏற்பட்டது.

v) கலகம் என்ற போர்வையின்கீழ் 40,000 இராணுவத்தினர் பாஸ் நகரத்தை முற்றுகையிட்டனர். பலர் கைது செய்து சிறையில் அடைக்கப்பட்டனர்.

vi) தானிய உற்பத்தி குறைவினாலும், வேலையில்லாப் பிரச்சினையாலும் இளைஞர்கள் பலர் பாஸ்ரில் நகரில் கூடினர். இவர்கள் மத்தியில் புரட்சிக் கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன.



பஸ்தீல் சிறைச்சாலை

vii) கலகக்காரர்கள் ஆயுதங்களைக் கைப்பற்றி நகரில் ஆர்ப்பாட்டம் செய்தனர். இவர்கள் 1789 ஜூலை 14 ஆம் திகதி பஸ்தீல் சிறைச்சாலை என்ற கோட்டையை தாக்கினர். இந் நிகழ்வே பிரான்சியப் புரட்சியின் ஆரம்பத்திற்கு காரணமாகியது.

**இத்தாலிய ஐக்கியம்**

**07. தேசிய வாதம் என்றால் என்ன?**

i) குறிப்பிட்ட நிலப்பரப்பில் குறிப்பிட்ட ஒரே இயல்புகளைக் கொண்ட மக்கள் பொது நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரே குழுவாகத் தனது நிலையைக் கட்டியெழுப்புதல் தேசிய வாதம் ஆகும்.

ii) மொழி, இனம், மதம், பழக்கவழக்கங்கள், உரிமை என்பனவே பெரும்பாலும் தேசிய வாதத்திற்கு அடிப்படையாக அமைகிறது.

iii) இத்தாலி ஐக்கியத்தின் அடிப்படை தேசியவாதக் கொள்கையே ஆகும்.



**08.இத்தாலியை ஒற்றுமைப்படுத்த முடியாதிருந்தமைக்கான காரணங்கள்.**

i) இத்தாலியத் தீபகற்பம் வெவ்வேறு அந்நியர் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தமை.

- நேபிள்ஸ், சிசிலித் தீவுகள், பிரான்சியப் பூபன் வம்சத்தின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தது
- மத்திய இத்தாலி போப்பாண்டவரின் கீழ் இருந்தது.
- பர்மா, டஸ்கனி, மொடனா, வெனிசியா, லொம்பாடி போன்ற பிரதேசங்கள் ஆஸ்திரியாவின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தது.
- பியட்மன்ட், சாடினியாதீவு இத்தாலியின் சவோய் வம்சத்திற்கு உரித்தானதாக இருந்தமை.
- பல பிரதேசங்களில் இத்தாலியப் பிரதானிகளின் ஆட்சி நிலவியது.

ii) பாப்பரசர் கொண்டிருந்த அளவுக்கதிகமான அதிகாரம் இத்தாலியின் ஐக்கியத்திற்கு சவாலாக அமைந்தமை.

iii)இத்தாலிய மக்களிடையே 19ஆம் நூற்றாண்டு வரையில் தேசிய உணர்வுகள் தோன்றாமை.

**09.இத்தாலியை ஐக்கியப்படுத்தும் இயக்கத்தின் முன்னோடிகள்**

i) **நெப்போலியன் பொனபாட்** :- இத்தாலிய மக்களிடையே தேசிய உணர்வை ஏற்படுத்தி அதனை ஒன்றிணைக்க முடியும் என வழிகாட்டியவன்.

ii)**ஜோசப் மசினி** : நெப்போலியனின் எண்ணங்களை செயலில் முன்னெடுத்தவன்.

iii)**கவுன்ட் கவூர்**:- நெப்போலியனின் எண்ணங்களை செயலில் முன்னெடுக்கத் திட்டமிட்டவ்ன்.

iv) **கரிபால்டி** :– இதன் பொருட்டுப் படை திரட்டியவன்.

**10. இத்தாலியில் தேசிய உணர்வை உருவாக்குவதில் நெப்போலியனின் பங்களிப்பு**

i) **இத்தாலியப் பிராந்திய அரசுகளை இரண்டாகக் குறைத்தமை:** கி.பி. 1797 ஆம் ஆண்டு வட இத்தாலியில் லொம்பாடி, ஜினோவா, நேப்பிள்ஸ் ஆகிய பிரதேசங்களை முதலில் கைப்பற்றிக் கொண்டான். கி.பி 1807இல் பாப்பரசரின் கீழ் இருந்த இத்தாலியப் பிரதேசத்தைப் பெற்று "வட இத்தாலி" என்ற அரசை ஆரம்பித்து அதன் அரசனாக முடி சூட்டினான். அத்துடன் "மிலான்" நகரை தலைநகராகத் தெரிவு செய்தான்.

ii)**இத்தாலியின் நிர்வாகநடவடிக்கையைச் சீர்செய்தமை**

- கொடூரமான நீதிமுறையை ரத்துச் செய்தல்.
- நெப்போலிய சட்டத் தொகுப்பினை இத்தாலியில் செயற் படுத்துதல்.

- ஆற்றலும் தகுதியும் உடையவர்களுக்கு பதவிகளை வழங்குதல்
- வீதிகள், பாலங்களை அமைத்தான்

**11. வியட்ன்னா உடன்பாடு (மாநாடு)**

i) கி.பி 1815ல் நெப்போலியனுடைய தோல்வியும் வியன்னா உடன்பாடுமே ஐரோப்பிய அரசியல் வரலாற்றில் புதிய மாற்றத்தை ஏற்படுத்தியது.

ii) நெப்போலியனிடம் சரணாகதியடைந்த நாடுகளின் எதிர்காலத்தை நிர்ணயிக்கவும் அமைதியிழந்த ஐரோப்பாவில் ஒழுங்கை நிலைநாட்டவும் ஐரோப்பிய மன்னர்களின் பொதுச் சம்மதத்தினால் ஆஸ்திரியாவின் அமைச்சரான மெற்றனிக் தலைமையில் ஒன்று கூடியதே "வியன்னா உடன்பாடு" ஆகும்.

**12. வியன்னா உடன்பாட்டு முடிவுகள் இத்தாலியில் ஏற்படுத்திய தாக்கங்கள்.**

i) இத்தாலியை மீண்டும் பழைய வம்ச வழிகளுக்கும், புராதன பிரிவினைகளுக்கும் கையளித்தது.

- நேபிள்ஸ், சிசிலிப் பிரதேசம் பிரான்சியப் பூபன் அரசவம்சத்திற்கு வழங்கப்பட்டது. இவ்வம்ச அரசனான 1ஆம் பேடினந்து அடக்கு முறையி லான ஆட்சியை ஏற்படுத்தினான்.
- மத்திய இத்தாலி பாப்பரசருக்கு வழங்கப்பட்டது.
- பர்மா, மொடனா, டஸ்கனி பிரதேசம் ஆஸ்திரியாவுக்கு வழங்கப் பட்டது.
- லொம்பாடி, வெனிஸியா பிரதேசம் அவுஸ்திரியாவின் ஹப்ஸ்பேர்க் அரச வம்சத்திற்கு வழங்கப்பட்டது.
- பியட்மன், சாடினியாப் பிரதேசம் சாடினிய அரசனுக்கு வழங்கப் பட்டது.

ii) இத்தாலியின் ஆட்சி ஆஸ்திரியாவின் விருப்பில் நடைபெற்றது.

iii) ஆஸ்திரியா தனது பேரரசிற்குத் தேவையான வருமானத்தில் 25% இத்தாலியிலிருந்து பெற்றுக் கொண்டது.

iv) பாப்பரசரும், சார்டீனியா , மன்னன் விக்டர் இம்மானுவேலும் இத்தாலிய ஆட்சியாளர் எனக் கூறத்தக்கவகையில் இருந்தனர்

v) நெப்போலியனின் விதவை மனைவியாகிய மேரிலூயியின் கீழிருந்த தஸ்கனிப் பிரதேசத்தில் சிறந்த ஆட்சி நிலவியது.

**13. காபொனாரிப் போர்ச்சங்கம்.**

i) இத்தாலியில் மீண்டும் தோன்றிய சர்வாதிகார ஆட்சியை எதிர்த்து நேபிள்ஸில் தோன்றிய அமைப்பு "காபொனாரிப் போர்ச் சங்கம்" ஆகும்.

ii) அன்னியரை நாட்டிலிருந்து துரத்துதல், வரம்புடைய ஆட்சியை ஏற்படுத்துதல் இவ்வமைப்பின் நோக்கமாக இருந்தது.

iii) இதன் தலைவராக "ஜோசப் மசினி" காணப்பட்டார்.

iv) "கருஞ்சட்டை வீரர்" என்ற பெயரில் இவர்கள் செயற்பட்டனர்.

v.) கி.பி 1825இல் காபொனாரி இயக்கத்தை அடக்கி, ஜோசப் மசினியைப் பிரான்சிற்கு நாடு கடத்துவதில் ஆஸ்திரிய அரசு வெற்றி கண்டது.

**14. இத்தாலியின் ஐக்கியத்திற்கு ஜோசப் மசினியின் பங்களிப்பு.**

i) தேசிய உணர்வுட்டும் உரைகள் மூலம் மக்களிடையே புத்துணர்ச்சியை ஏற்படுத்தினார்.

ii) இத்தாலியை ஒற்றுமைப்படுத்தும் இயக்கத்தை ஆரம்பித்தார்.

iii) நெப்போலியனால் மக்களுக்கு வழங்கப்பட்ட உரிமைகளைப் பாதுகாக்க முயற்சிகள் மேற்கொண்டார்.

iv) 1815ல் மசினி இத்தாலி குறித்து கூறியது "எமக்கு ஒரு தேசியக் கொடி இல்லை, ஐரோப்பிய நாடுகளிடையே ஒரு அரசியல் அந்தஸ்த்தையும் கொண்டிருக்கவில்லை".

v) 1830ல் "இளம் இத்தாலியர் இயக்கம்" என்ற அமைப்பினை ஸ்தாபித்தார். அவுஸ்திரியாவின் அதிகாரத்தை நீக்காமல் இத்தாலியின் சுதந்திரத்தைப் பெறமுடியாது இதற்கு காபொனாரி அமைப்பு மாத்திரம் போதாது என்பதற்காக "ஒற்றுமையும் சுதந்திரமும்" என்ற சுலோகத்துடன் இவ்வமைப்பு ஆரம்பமானது.

vi) இளைஞர்களைப் பாமரமக்களின் தலைவனாக நியமியுங்கள் அவர்களிடத்தில் எவ்வளவு மகத்தான சக்தி அடங்கியிருக்கின்ற தென்பதை நீங்கள் அறியமாட்டீர்கள் என்று அறை கூவினார்.

vii) சாடினியா மன்னன் சார்ள்ஸ் அல்பாட் மன்னனுக்கெதிராக போர்ப் பிரகடனம் செய்தபோதிலும் தோல்வியை அடைந்த மசினி 1833ல் இங்கிலாந்துக்கு நாடு கடத்தப்பட்டார்.

**15. இத்தாலியின் ஐக்கியத்திற்கு கவுன்ட் கவூரின் பங்களிப்பு.**

i) இத்தாலியை ஒற்றுமைப்படுத்தும் இயக்கத்தின் முன்னோடியாக விளங்கினார்.

ii) இத்தாலியை ஒற்றுமைப்படுத்தி புதிய அரசைத் தோற்றுவிப்பதற்காக "மீள்பிறப்பு" எனும் நூலூடாக தனது கருத்துக்களை விளக்கினார்.

iii) விக்ரா இம்மானுவேல் மன்னனின் அரசில் 1852ல் முதலமைச்சராக பதவியேற்ற இவர் பொருளாதார விருத்தியோடு இராணுவ பலத்தையும் அதிகரித்துக் கொண்டார். இதனால் இத்தாலிய விடுதலைப் பிரச்சினை ஒரு புதிய சகாப்தத்தை எய்தியது.

iv) இத்தாலி ஒற்றுமைக்கு வெளிநாட்டின் உதவி அவசியமென உணர்ந்து 1854ல் கிரிமியன் போரில் அவுஸ்திரியாவை முறியடித்து பிரான்ஸ், இங்கிலாந்தின் கவனத்தை தன்பக்கம் ஈர்த்தான்.

v) *1858*ல் பிரான்ஸ் மன்னன் 3ஆம் நெப்போலியனுடன் ஒப்பந்தம் ஒன்றினை எற்படுத்தினார். அதனை "புளொம்பியஸ் ஒப்பந்தம்" என அழைப்பர்.

vi) *1859*ல் நெப்போலியனின் உதவியுடன் ஆஸ்திரியாவுக்கு எதிராகப் போர்ப் பிரகடனம் செய்து வெற்றி கொண்டார்.

vii) பீட்மன்ட் அரசின் கீழ் இத்தாலி ஐக்கியப்படுதல் இவரது நோக்கமாக இருந்த போதும் 3ம் நெப்போலியனிடத்திலிருந்து இதற்கு எதிர்ப்பு ஏற்பட்டது ஆனாலும் இங்கிலாந்தின் தலையீட்டால் கருத்து வேறுபாடு நீங்கியது.

viii) ஆஸ்திரியாவுடன் மூன்றாம் நெப்போலியன் ஏற்படுத்திக் கொண்ட "விலாபிரன்கா என்ற உடன்படிக்கை " மூலம் கவூருக்கான படை உதவிகளை பிரான்ஸ் நிறுத்தியது.

**16.இத்தாலியின் ஐக்கியத்திற்கு கரிபால்டியின் பங்களிப்பு.**

i) *1807*ல் சவோய் பிரதேசத்தில் கரிபால்டி பிறந்தார்.

ii) தனது செஞ்சட்டைப் படையின் மூலம் இத்தாலியின் ஒற்றுமைப் படுத்தும் போராட்டத்தில் மனைவியான எலியாவுடன் பங்களித்தார்.

iii. செஞ்சட்டை வீரர்களால் கைப்பற்றப்பட்ட பிரதேசங்களுக்கு ஜனாதி பதியாக செயற்பட்ட போதிலும் அப்பிரதேசங்களை இரண்டாம் விக்டர் இம்மானுவேலுக்கு வழங்கினான்.

iv. வெனிஸ் ஆஸ்திரியாவின் கீழும், உரோம் பாப்பரசரின் கீழும் இருந்தமை இத்தாலிய ஐக்கியத்துக்குத் தடையாக இருந்ததால் ஜேர்மனியின் பிஸ்மார்க்குடன் உடன்படிக்கை மேற்கொண்டு ஜேர்மன் - ஆஸ்திரியப் போரில் ஜேர்மனுக்கு உதவி வெனிசை தான் பெற்றுக் கொள்வதற்காக முயற்சித்தான்.

**17.இத்தாலிய ஐக்கியத்தின் நிறைவு**

i) *1861*ல் தியூறினில் கூடிய முதல் இத்தாலியப் பாராளுமன்றத்திற்கு வெனிஸ், உரோம் தவிர்ந்த ஏனைய பிரதேசப் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். இதில் 2ஆம்விக்ரா இம்மானுவேல் இத்தாலிய அரசனாகப் பிரகடனம் செய்யப்பட்டார்.

ii) *1866*ல் ஜேர்மனியின் பிஸ்மார்க் ஆஸ்திரியாவிற்கு எதிராக போரிட்ட போது வெனிஸை ஆக்கிரமிக்கும் நோக்கில் இத்தாலி பிஸ்மார்க்கிற்கு உதவியது. குறுகிய போரில் பிஸ்மார்க் ஆஸ்திரியாவை வெற்றி கொண்டதுடன் வெனிஸ் இத்தாலிய ஐக்கியத்தில் இணைந்தது.

iii) *1870*ல் உரோமாபுரியும் இத்தாலிய ஐக்கியத்தில் இணைந்து கொண்டது பிரெஞ்சுக்கும் பிரசியாவிற்கும் இடையேயான போரில் பிரெஞ்சுப்படை தோல்வி கண்டது. இத்தாலியப் படைகள் பாப்பரசரின் பகுதியில் நுழைந்து உரோமை ஆக்கிரமித்துக் கொண்டது.

iv) *1872*ல் விக்ரா இம்மானுவேல் இத்தாலியின் தலை நகரை உரோமில் அமைத்தான். இவ்வாறு இத்தாலியின் ஒற்றுமை நிறைவேறியது.

குறிப்பு: 1929இல் பதவிக்கு வந்த பதினோராம் பத்திநாதர் (பியுஸ்) இத்தாலியின் முசோலினியுடன் செய்து கொண்ட உடன்படிக்கை மூலம் வத்திக்கான் என்ற மிகச் சிறிய நாடு உதயமாகிறது.

## ஜேர்மனியின் ஐக்கியம்

### 18. லிபரல் (தாராண்மை) வாதம் என்றால் என்ன?

i) மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட சபையின் துணையுடன் உருவாக்கப்பட்ட அரசியல் அமைப்பின் மூலம் மக்களுக்கு சிறந்த ஆட்சியை அமைத்துக் கொடுப்பதே லிபரல் வாதம் ஆகும்.

ii) ஜேர்மனியின் ஐக்கியத்துக்கு லிபரல்வாத கருத்துக்களும், தேசிய வாதக் கருத்துக்களும் காரணமாக அமைந்தது.

### 19. ஜேர்மனியின் ஐக்கியத்துக்கு முன்னரான நிலை

i) கி.பி 19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஜேர்மன் என்ற பெயரில் ஒரு நாடு இருக்கவில்லை. ஜேர்மன் மொழி பேசும் மக்களைக் கொண்ட 369 நாடுகள் அங்கு இருந்தன.

ii) இதில் பிரஷ்யா, ஆஸ்திரியா என்பவை முக்கியமானவை ஆகும்.

### 20.ஜேர்மனியில் தேசிய உணர்வினைத் தோற்றுவிப்பதில் நெப்போலியனின் பங்களிப்பு

i) நெப்போலியன் கி.பி 1805இல் ஆஸ்திரியாவையும், கி.பி 1806இல் பிரஷ்யாவையும் தோற்கடித்துத் தனது அதிகாரத்தைப் பரப்பினான்.

ii) ஜேர்மன் பகுதியில் செயற்பட்ட புனித உரோமப் பேரரசை ஒழித்து அதற்குப் பதிலாக கி.பி 1806இல் "றைன் கூட்டமைப்பை" ஆரம்பித்தான்.

iii) பழைய வலுவிழந்த சட்டத்தொகுப்பிற்குப் பதிலாக நெப் போலியனின் சட்டத்தொகுப்பு அமுல் செய்யப்பட்டதால் தேசிய உணர்வுகளை மக்களிடையே கிளர்ந்தெழச் செய்தார்.

### 21.கால்ஸ்பார்ட் கட்டளைகள் - 1819

i) ஆஸ்திரியாவின் சான்சலர் பதவி வகித்த மெட்டநிக், தமது பிரதேசங்களில் மக்களிடையே எழுச்சி பெற்ற லிபரல் வாதக் கருத்துக்களைப் பலவீனப்படுத்தும் நோக்கிலும் மத்திய ஐரோப் பாவின் நிலையைப் பரிசீலனை செய்வதற்காகவும் கால்ஸ்பாட்டில் மாநாடு ஒன்றினைக் கூட்டினார்.

ii) மெட்டரிக்கின் தூண்டுதலின் பேரில் ஜேர்மன் கூட்டமைப்பு நிறை வேற்றிய ஆணையை "கால்ஸ்பாட் கட்டளைகள்" என்பர்.

iii) இக்கட்டளைகள் ஜேர்மன் ஐக்கியத்தில் முக்கியத்துவம் பெற்றது. மெட்டநிக்கின் இந்தத் தடைகள் காரணமாக ஆஸ்திரியாவுக்குப் பணிந்திட ஜேர்மன் விரும்பவில்லை.

**22. பிரஷ்யாவின் எழுச்சியும் ஜேர்மனியின் ஐக்கியமும்.**

i) மெட்டநிக்கின் அடக்குமுறைகள் பிரஷ்யாவை எழுச்சி பெறச் செய்தது.

ii) பிரஷ்யாவில் மானிய அடிமைமுறை ஒழிக்கப்பட்டு, மத்திய வகுப்பினரைக் கூடுதலாக நிர்வாகத்தில் பங்கு கொள்ளச் செய்து, விரிவான கல்விக் கொள்கையை செயற்படுத்தியதோடு பலம் வாய்ந்த போர்ப்படையும் ஏற்படுத்தப்பட்டது.

iii). கி.பி 1843இல் பிரஷ்யாவை மையமாகக் கொண்டு ஜேர்மன் பிர தேசத்தில் **சொல்வரின்** எனும் தீர்வையற்ற வர்த்தக சங்கம் ஆரம்ப மானது. இதனால் வர்த்தகம் வளர்ச்சியடைந்தது.

vi) தீர்வையற்ற வர்த்தக சங்கத்தில் இணைந்த அரசுகளிடம் தீர்வை அறவிடப்படாததால் பல ஜேர்மன் அரசுகள் இதில் சேர்த்துக் கொர்ண்டன.

v) தென் ஜேர்மன், வடஜேர்மன் அரசுகளிடையே இவ்வாறான சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டது. அவை அனைத்தும் சொல்வரின் சங்கத்துடன் இணைந்து கொண்டதால் பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமாகியது

vi) ஜேர்மன் கட்டமைப்பை முடிவுக்குக் கொண்டுவந்து ஒன்றிணைந்த ஆட்சியின் பொருட்டு அரசியல் அமைப்பை உருவாக் கிக் கொள்வதன் மூலம் லிபரல் வாத ஆட்சியை ஏற்படுத்துவதே பிரஷ்யாவின் நோக்காக இருந்தது.

vii) ஆஸ்திரியாவில் மெட்டர்நிக் பதவி விலகி சீர்திருத்தங்களுக்கு இணங்கினான் இதனால் பிரஷ்யாவில் ஏற்பட்ட புரட்சி வெற்றி யளித்தது.

**23. பிராங்பேர்ட் பாராளுமன்றம்**

i) ஜேர்மனியை ஐக்கியப்படுத்தும் பொருட்டு லிபரல்வாதிகள் நிறுவிய சபையாகும். ஜேர்மன் மொழி பேசும் மக்களின் முதல் பாராளுமன்றம் இதுவே.

ii) ஜேர்மன் கூட்டாட்சியமைப்பின் எல்லா அரசுகளினதும் வாக்குரி மையால் தெரிவு செய்யப்பட்ட 500 பிரதிநிதிகளைக் கொண்டிருந்தது.

iii) காலப்போக்கில் இரண்டாகப் பிரிந்தது.

- ஆஸ்திரியா உட்பட ஜேர்மன் அரசுகள் மகாஜேர்மனி என அறிமுகமானது.
- பிரஷ்யா உள்ளடங்கிய பகுதி சிறிய ஜேர்மனி எனப்பட்டது.
-

**24. ஜேர்மனியின் ஐக்கியத்திற்கு பிஸ்மார்க்கின் பங்களிப்பு**

i) பிரஷ்ய வம்சத்தைச் சேர்ந்த இவர் தீவிரமான தேசிய வாதியாகவும் தாராளவாதத்தின் எதிரியாகவும் செயற்பட்டார்.

ii) பிரசியாவின் தலைமையிலேயே ஜேர்மனி ஒற்றுமைப்பட வேண்டும் என்ற நோக்கினை கொண்டிருந்தார்.

iii) பிரடரிக் வில்லியத்தின் மரணத்திற்குப் பின் 1ஆம் வில்லியம் பிரசியாவின் மன்னனானான். ஜேர்மனியின் ஒற்றுமைக்கு எதிரியான ஆஸ்திரியாவை இராணுவ பலத்தினாலேயே வெல்ல முடியும் என்ற கருத்தைக் கொண்டிருந்தான். ஆனால் தாராண்மைவாதிகளை அதிகமாகக் கொண்ட பாராளுமன்றம் மன்னனது கருத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்தது.

iv) இந்நிலையிலேயே 1ஆம் வில்லியம் பிஸ்மார்க்கை வரவழைத்து 1862ல் பிரசியாவின் முதலமைச்சர் பதவியை (சான்சலர் பதவி) வழங்கினான். இது ஐரோப்பிய வரலாற்றில் ஒரு புதுயுகம் மலர வழி வகுத்தது.

v) இராணுவபலமே ஜேர்மன் ஐக்கியத்தின் பூரண சாதனம் எனும் முடிவை ஆரம்பத் திட்டமாகக் கொண்ட இவர் முக்கிய பிரச்சினைகள் பிரசங்கங்களினாலும் பெரும்பாண்மைத் தீர்மானங்களினாலுமன்று இரத்தத்தினாலும், இரும்பினாலுமே தீர்க்கப்படும் எனப் பகிரங்கமாகக் கூறினார்.

vi) ரஷ்யாவின் நட்பைப் பெற்றுக் கொண்ட இவர் டென்மார்க் மீது ஆக்கிரமிப்புச் செய்து கைப்பற்றினார். ஆனாலும் ஆஸ்திரியாவிடம் போர் ஏற்படும் எனக் கருதி டென்மார்க்கைப் பிரசியாவிற்கும் ஆஸ்திரியாவிற்கும் பிரித்துக் கொண்டார்.

vii) ஆஸ்திரியாவை ஐரோப்பாவிலிருந்து தனிப்படுத்தும் பொருட்டு 1865 இல் பிரான்ஸுடன் இரகசியப் பேச்சு வார்த்தையில் ஈடுபட்டார். அதன் மூலம் ஆஸ்திரியா பிரசியா போரில் பிரான்ஸை நடுநிலைமை வகிக்க ஏற்பாடு செய்தார்

viii) இத்தாலியின் கவூருடன் இரகசிய ஒப்பந்தத்தை மேற்கொண்டு இத்தாலியின் ஆதரவைப் பெற்றுக்கொண்டார்.

ix) 1866ல் ஆஸ்திரியா போரில் தோற்கடிக்கப்பட்டது. இதனை அடுத்து ஆஸ்திரியப் பேரரசு ஆஸ்திரியா - கங்கேரியா என இரண்டாகப் பிரிந்தது.

x) ஆஸ்திரியாவை ஜேர்மன் கூட்டாட்சியிலிருந்து விலக்கினார். தாராளவாதிகளுடன் சமாதானம் செய்து கொண்டார். பிரசிய முடியின் கீழ் ஜேர்மனியை ஐக்கியப்படுத்தலாம் என்று தாம் கண்ட கனவை நனவாக்கினார்.

**25. ஜேர்மனிய ஐக்கியத்தின் நிறைவு**

i) ஆஸ்திரியா தோற்கடிக்கப்பட்டதை அடுத்து செல்ஸ்விக், கொல்ஸ்டைன், ஹனோவா, நசொ, பிராங்போட், ஹெசே ஆகிய பிரதேசங்கள் பிரசியத் தலைமையின் கீழ் வந்தமை.

ii) நெப்போலியன் தலைமையிலான பிரெஞ்சுப்படை தோற்கடிக்கப் பட்டமை. இந்நிகழ்வு ஜேர்மனிய ஐக்கியத்தின் மைல் கல்லாக இருக்கிறது என வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர்.

iii) பவோயா, வுட்டாபோக், போடன் ஆகிய தென் பிரதேசங்கள் ஜேர்மனியுடன் இணைந்து கொண்டதே ஜேர்மனியை ஐக்கியப்படுத்தலின் இறுதி நடவடிக்கையாகும்.

iv) 1871ல் வோசை நகரத்தின் "கண்ணாடி மண்டபத்தில்" பிரசியாவின் மன்னன் ஜேர்மன் சக்கரவாத்தியாக முடிசூட்டப்பட்டதைத் தொடர்ந்து ஜேர்மனியை ஐக்கியப்படுத்தும் பணி நிறைவு பெற்றது.

**ரஸ்யப்புரட்சி**

**26. பொதுவுடைமை வாதம் என்றால் என்ன?**

i) செல்வம் தொடர்பாகப் பொது உரிமையை உறுதி செய்து, அனைத்துப் பிரஜைகளும் தமது திறமையை வளர்த்துக் கொள்ளும் பொருட்டு சமஅளவிலான சந்தர்ப்பத்தை உறுதிசெய்து உற்பத்தியின் பலனை அனைவரிடையேயும் சமமாகப் பங்கீடு செய்யும் பொருளாதார அரசியல் முறையே பொதுவுடைமை ஆகும்.

ii) ரஷ்யப் புரட்சியில் பொதுவுடைமை வாதத்தை காணமுடிகிறது.

## 27. ரஸ்யப்புரட்சிக்கான காரணங்கள்.

i) **சார் மன்னர்களின் எதேச்சாதிகார செயற்பாடு:** திறமையற்ற கொடூர வல்லாட்சி முறையினால் பிற நாடுகளுடன் நடந்த போர்களில் இரசியப்படை தோல்வி கண்டமை. 1904 - 1905ல் ஜப்பானுடன் ஏற்பட்ட தோல்வியினால் பல விவசாயக் கிளர்ச்சிகளும், வேலை நிறுத்தங்களும் ஏற்பட்டமை.



1905 கிளர்ச்சியின் போது

ii) **சமூக அமைப்புக்கள் உயர் வகுப்பினரை, கீழ் வகுப்புக்களிலிருந்து பிரித்து வைத்தமை:** 1ஆம் அலெக்சாண்டர் காலத்தில் மைக்கல் ஸ்பேன்ஸ்கி பிரபுக்கள், மத்திய(குருவாயம்), ஊழியர் வர்க்கம் என மூன்றாக அதி களவிலான ஏற்றத்தாழ்வுடன் பிரித்தமையினால் நிலத்தின் பெரும்பகுதி பிரபுக்களுக்கும், திருச்சபைகளுக்கும் சொந்தமாக இருந்தமையால் ஊழியர் மூன்றாம் பிரிவினர் போல் துன்பத்திலும், வறுமையிலும் வாழ்ந்தனர்.

iii) **அறிவுத்துறையில் ஏற்பட்ட முன்னேற்றம்:** மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த கல்விமான்களும், தீவிரவாதிகளும், ரோல்ஸ்ரோய், துரகனேவ், டொசுத்தேவ்சிக்கி போன்ற எழுத்தாளர்களும் நில அடிமை முறையை எதிர்த்தமை. இதனால் 2ஆம் அலெக்சாண்டர் விவசாய அடிமைகளை விடுவித்தார்.

iv) **வணிக நகரங்களின் தோற்றம்:** ரஸ்ய கைத்தொழில் துறையில் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டமையால் தொழிற்சாலைகள் விரிவடைந்த தோடு மொஸ்க்கோ நகரை உள்ளிட்ட பீட்டர்ஸ்போக், வொல்கா நகரங்கள் வணிக நகரங்களாக உருவாயிருந்தமை. பின்னர் முதலாளித் துவ பொருளாதாரம் வளர்ச்சியடைந்து மனித உரிமைகள் தொடர்பாக போராட்டங்கள் தோன்றியது.

**28.லெனின்: குறிப்புகள்.**

i) "விளடிமீர் இலிச் உலியனோவ்" என்ற இயற் பெயர் உடையவரே பின்னர் லெனின் என அழைக்கப்பட்டார்.

ii) தொழிலாளர் மத்தியில் மார்க்கின் போதனைகளை பிரச்சாரம் செய்வதில் அதிக காலத்தை செலவளித்தார். இதனால் அவருடைய நன்மதிப்பை பெற்றுக் கொண்டார்.

iii)1895ல் தொழிற்சாலைத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்திற்கு தலைமை வகித்த லெனின் கைது செய்யப்பட்டு சைபீரியாவுக்கு நாடு கடத்தப்பட்டார். அங்கிருந்து 1900ல் மியூனிக் சென்று அங்கு "இசுக்ரா"(தீப்பொறி எனப் பொருள்படும்). என்ற பத்திரிகையை அச்சிட்டு இரகசியமாக ஐரோப்பா எங்கும் விநியோகித்தார்.

iv)1902ல் இலண்டனில் குடியேறிய இவர் பத்திரிகையை தொடர்ந்து பிரசுரித்து வந்தபோதுதான் இலண்டனில் கூடிய சமூகக் குடியாட்சிக் கட்சியில் ஏற்பட்ட பிளவினால் லெனின் போல்ஷ்விக் கட்சியின் தலைவரானார். இதற்குப்பின் "மென்ஷ்விக்கான்" (லெனினின் கருத்துக்களை எதிர்த்தோர்) பலத்தை குறைக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

v) 1904ல் "முற்போக்கு" எனும் பத்திரிகையின் ஆசிரியராகக் கடமை ஏற்றார். மேலும் "செய்யவேண்டியது என்ன" என்ற நூலையும் வெளியிட்டார்.

vi)1912ல் பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்தைக் கொண்டுவரும் நோக்கில் ரஸ்யாவில் "போல்ஷ்விக்" கட்சியினை உருவாக்கினார்.


லெனின்


டரொஸ்கி

vii)ஸ்ரொட்ஸ்கியுடன் சேர்ந்து செயற்பட்ட லெனின் 1917ல் ஒக்ரோபர் 24ல் புரட்சிகர அரசாங்கத்தை நிறுவினார். சோவியத் தேசிய காங்கிரஸ்

லெனின் தலைமையில் கூடி நாட்டின் அதிகாரத்தை ஆணையாளர் சபைக்கு வழங்கினார். கட்சியின் முக்கியத் துவம் வாய்ந்த இவர் ரஸ்யாவின் முடிசூடா மன்னரானார்.

## 29. சார் மன்னர்களின் ஆட்சி வீழ்ச்சி யடைந்தமைக்கான காரணங்கள்.


2ஆம் நிக்கலஸ்

i) சார் இன மன்னர்கள் சமயத்தைப் பரப்புவதிலேயே அக்கறை செலுத்தினர். திறமையற்ற கொடூரமான ஆட்சிமுறையினால் மக்களுடைய சமூக பொருளாதாரம்மீது அக்கறை காட்டாமை.

ii) யப்பானுடனான போரில் ரஸ்யா தோல்வியடைந்தமை, பல விவசாய கிளர்ச்சிகள் தோன்றின. பிற்காலத்தில் லெனின் தலைமையில் புரட்சித் தொழிலாளர் சங்கம் உருவாகியமை.

iii) இதனால் சஞ்சலமடைந்த 2ஆம் நிக்கலஸ் மன்னன் பல சீர்திருத்தங்களைச் செய்வதற்கு இணங்கியமை. ஆனாலும் அவனது அடக்குமுறைகளை எதிர்த்து கிளர்ச்சிகள் பரவியமை.

iv) ரஸ்யாவில் மட்டுமன்றி பால்டிக், துருக்கி, பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளிலிருந்தும் எதிர்ப்புக்கள் அதிகரித்தமை.

v) 1913ன் பின் ரஸ்யாவின் புரட்சிகர இயக்கம் தீவிரநிலையை அடைந்து பாரிய வேலைநிறுத்தங்களில் ஈடுபட்டது. இந்நிலையிலேயே 1914ல் 1ஆம் உலகப் போரை எதிர்கொண்டது.

vi) 1916ல் ரஸ்யாவின் சமூகநிலை மோசமடைந்து காணப்பட்டது. எங்கும் பஞ்சம், துன்பம் இதில் ராணுவமும் பாதிக்கப்பட்டது.

vii) 1917ல் விவசாயிகள், தொழிலாளர்கள், சிப்பாய்கள் அனைவரும் நிக்கலஸ் மன்னனுக்கு எதிராக நிலம், பாண், சமாதானம் என்ற சுலோகத்துடன் போராட்டத்தில் ஈடுபட்டனர்.

viii) நாடு முழுவதும் போர்நிறுத்தம், உணவுப் பொருட்களுக்கான கிளர்ச்சி, போர்முனையில் ஜேர்மனியுடன் தோல்வி என்ற பல காரணங்களால் 1917ல் மன்னர் சிம்மாசனத்தை துறந்தார்.

## 30. ரஸ்யப் புரட்சியின் விளைவுகள்.

i) மானிய முறையின் கீழிருந்த தனிப்பட்டவர்களின் நிலங்களின் உரிமைகள் இரத்துச் செய்யப்பட்டன.

ii) தொழிற்சாலைகள் தேசிய மயமாக்கப்பட்டது.

iii) வங்கிகள் போக்குவரத்துக்கள் தேசியமயமாகியது.

iv) மன்னர் ஆட்சிமுறை ஒழிக்கப்பட்டது.

# இலங்கையின் மன்னர் வரிசை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விசயன் | .... | ..... | கி.மு. | 543 | தம்பபண்ணி |
| இடைக்காலம் | .... | ..... | ... | 505 | |
| பந்துவாசுதேவன் | .... | ..... | ... | 504 | விசிதபுரம் |
| அபயன் | .... | ..... | ... | 474 | |
| இடைக்காலம் | .... | ..... | ... | 454 | |
| பந்துகாபயன் | .... | ..... | ... | | 437 அனுராதபுரம் |
| முத்தசீவன் | .... | ..... | ... | 367 | |
| தேவானம்பியதீசன்.... | | ..... | ... | 307 | கி.மு. 247 |
| உத்தியன் | .... | ..... | ... | 267 | |
| மகாசிவன் | .... | ..... | ... | 257 | |
| சூரதீசன் | .... | ..... | ... | 247 | |
| சேனனும் சூத்திகனும் | | .... | ... | 237 | |
| அசேலன் | .... | ..... | ... | 215 | |
| எல்லாளன் | .... | ..... | ... | 205 | |
| துட்டகாமனி | .... | ..... | ... | 161 | |
| சத்தாதீசன் | .... | ..... | ... | 137 | |
| தூலத்தனன் | .... | ..... | ... | 119 | |
| இலஞ்சதீசன் | .... | ..... | ... | 119 | |
| கலாட்டநாகன் | .... | ..... | ... | 109 | |
| வட்டகாமனி | .... | ..... | ... | 104 | |
| ஐந்து தமிழர் | .... | ..... | ... | 103 | |
| வட்டகாமனி (மீண்டும்) | | .... | ... | 88 | |
| மகாசூளி மகாதீசன் | | .... | ... | 76 | |
| சோரநாகன் | .... | ..... | ... | 62 | |
| தீசன் | .... | ..... | ... | 50 | |
| சிவன் | .... | ..... | | | |
| வடுகன் | .... | ..... | | | |
| தாருபாதிகதீசன் | .... | ..... | | | |
| நிலியன் | .... | ..... | | | |
| அனுலா | .... | ..... | | | |
| குடகன்னதீசன் | .... | ..... | ... | 42 | |
| பாதிகாபயன் | .... | ..... | ... | 20 | |
| மகாதாதிக மகாநாகன் | | .... | கி.பி. | 09 | |
| ஆமந்தகாமனி | .... | ..... | ... | 21 | |
| கனிரசானுதீசன் | .... | ..... | ... | 30 | |
| சூலாபயன் | .... | ..... | ... | 33 | |
| சீவலீ | .... | ..... | ... | 35 | |

| | | | | |
|---|---|---|---|---|
| மூன்றாண்டு இடைக்காலம்.... | | ... | —— | |
| இளநாகன் | .... ..... | ... | 38 | |
| சந்தமுகசிவன் | .... ..... | ... | 44 | |
| யசலாளகதீசன் | .... ..... | ... | 52 | |
| சுப்பராசன் | .... ..... | ... | 60 | |
| வசபன் | .... ..... | கி.பி | 65 | |
| வங்கனாசிகதீசன் | .... ..... | ... | 110 | |
| கசபாகு, 1ஆம் | .... ..... | ... | 113 | |
| மகல்லநாகன் | .... ..... | ... | 135 | |
| பாதிகதீசன் | .... ..... | ... | 141 | |
| கனிட்டதீசன் | .... ..... | ... | 165 | |
| சூச்சநாகன் | .... ..... | ... | 193 | |
| சிறீ நாகன், 1ஆம் | .... ..... | ... | 196 | |
| வோகாரிக்கதீசன் | .... ..... | ... | 215 | |
| அபயநாகன் | .... ..... | ... | 237 | |
| சிறீ நாகன், II ஆம் | .... ..... | ... | 245 | |
| விசயகுமாரன் | .... ..... | ... | 247 | |
| சங்கதீசன் | .... ..... | ... | 248 | |
| சங்கபோதி(சிறீ சங்கபோ) | ..... | ... | 252 | |
| கோதகாபயன் | .... ..... | ... | 254 | |
| சேட்டதீசன், Iஆம். | ..... | ... | 267 | |
| மகாசேனன் | .... ..... | ... | 277 | |
| சிறீ மேகவண்ணன்.... | ..... | ... | 304 | கி.பி. 3040 வ. |
| சேட்டதீசன், IIஆம் | ..... | ... | 332 | |
| புத்ததாசன் | .... ..... | ... | 341 | |
| உபதீசன் | .... ..... | ... | 370 | |
| மகாநாமம் | .... ..... | ... | 412 | கி.பி. 428 வ. |
| சோதிசேனன் | .... ..... | ... | 434 | |
| சத்தகாசன் | .... ..... | ... | 434 | |
| மித்தசேனன் | .... ..... | ... | 435 | |
| ஆறு தமிழர் | .... ..... | ... | 436 | |
| தாதுசேனன் | .... ..... | ... | 463 | |
| காசபன், Iஆம் | .... ..... | ... | 479 | கி.பி. 527,வ.சிகிரியா |
| மொகலானா, Iஆம் | ..... | ... | 497 | அனுராதபுரம் |
| குமார தாதுசேனன் | ..... | ... | 515 | |
| கித்திசேனன் | .... ..... | ... | 524 | |
| சிவன் | .... ..... | ... | 524 | |
| உபதீசன் | .... ..... | ... | 525 | |
| அம்பசாமநேர சிலாகால | ..... | ... | 526 | |
| தாதாப்பபூதி | .... ..... | ... | 539 | |

| | | |
|---|---|---|
| மொகலானா, II ஆம் .... ... | | |
| சித்தி சிறீ மேகவண்ணன் .... ... | 560 | |
| மகாநாகன் .... ..... ... | 561 | |
| அக்சபோதி, Iஆம் .... ..... ... | 564 | |
| அக்கபோதி, IIஆம் ..... ... | 598 | கி.பி. 609 வ. |
| சங்கதீசன் .... ..... ... | 608 | |
| தல்லமொகலானா .... ..... ... | 608 | |
| சிலாமேகவண்ணன்.... ..... ... | 614 | |
| அக்கபோதி, III ஆம் ..... ... | 623 | |
| சேட்டதீசன், III ஆம் ..... ... | 623 | |
| அக்கபோதி, III ஆம் (மீண்டும்) ... | 624 | |
| தாதோபதீசன் .... ..... ... | 640 | |
| காசபன், II ஆம் .... ..... ... | 652 | |
| தப்புலன், I ஆம் .... ..... ... | 661 | |
| தாதோபதீசன், IIஆம் ..... ... | 664 | |
| அக்கபோதி, IV ஆம்.... ..... ... | 673 | |
| தத்தன் .... ..... ... | 689 | |
| உன்னனாகர அத்ததா. ..... ... | 691 | |
| மானவம்மன் .... ..... ... | 691 | |
| அக்கபோதி, ஏ ஆம்.... ..... ... | 726 | |
| காசபன், IIIஆம் .... ..... ... | 732 | |
| மகிந்தன், Iஆம் .... ..... ... | 738 | |
| அக்கபோதி, VI ஆம்.... ..... ... | 741 | |
| அக்கபோதி, VII .... ..... ... | 781 | பொலனறுவை |
| மகிந்தன், II ஆம் .... ..... ... | 787 | அனுராதபுரம் |
| தப்புலன், II ஆம் (உதயன்) | 807 | |
| மகிந்தன், IIIஆம்.... ..... ... | 812 | |
| அக்கபோதி, VIIIஆம் ..... ... | 816 | |
| தப்புலன், IIIஆம் .... ..... ... | 827 | |
| அக்கபோதி, IX ஆம்.... ..... ... | 843 | |
| சேனன், Iஆம் .... ..... ... | 846 | கி.பி. 819/20 பொலனறுவை |
| சேனன், IIஆம் .... ..... ... | 866 | |
| உதயன், Iஆம் .... ..... ... | 901 | |
| காசபன், IVஆம் .... ..... ... | 912 | |
| காசபன், Vஆம் .... ..... ... | 929 | |
| தப்புலன், IV ஆம் .... ..... ... | 939 | கி.பி. 918 /9 வ. |
| தப்புலன், V ஆம் .... ..... ... | 940 | |
| உதயன், IIஆம் .... ..... ... | 952 | |
| சேனன், IIIஆம் .... ..... ... | 955 | |
| உதயன், IIIஆம் .... ..... ... | 964 | |

சேனன், IVஆம் .... ..... ... 972
மகிந்தன், IVஆம் .... ..... ... 975
சேனன், Vஆம் .... ..... ... 991
மகிந்தன், Vஆம் .... ..... ... 1001 வெளியேற்றப்பட்டது. கி.பி. 1017 வ. அனுராதபுரம்
காசபன் அல்லது விக்கிரமபாக ... 1037
கீர்த்தி .... ..... ... 1049
மகாலான கீர்த்தி .... ..... ... 1049
விக்கிரமபாண்டியன்.... ..... ... 1052
சக்திபாலன் .... ..... ... 1053
பராக்கிரமன் .... ..... ... 1057
உலோகீசுவரன் .... ..... ... 1059
விசயபாகு, Iஆம் .... ..... 1056–1111 பொலனறுவை
சயபாகு, Iஆம் .... ..... 1108–1145/6+ பொலனறுவையும் உறுகுணையும்
(விக்கிரமபாகு, Iஆம்) ..... 1111–1132 பொலனறுவை
கசபாகு, Iஆம் .... ..... 1131–1153
பராக்கிரமபாகு, Iஆம்.... ..... ... 1153–1185
விசயபாகு, IIஆம் .... ... 1186–1187
மகிந்தன், VI ஆம் .... ..... ... 1187
நிசங்கமல்லன் .... ..... ... 1187 – 1196
வீரபாகு .... ..... ... 1196
விக்கிரமபாகு, IIஆம்.... ..... ... 1196
சோடகங்கன் .... ..... ... 1196–1197
இலீலாவதி (I) .... ..... ... 1197–1200
சாகசமல்லன் .... ..... ... 100–1202
கல்யாணவதி .... ..... ... 1202–1208
தர்மாசோகன் .... ..... ... 1208–1209
அனிகங்கன் .... ..... ... 1209
இலீலாவதி (2) .... ..... ... 1209 – 1210
உலோகீசுவரன் .... ..... ... 1210 – 1211
இலீலாவதி (3) .... ..... ... 1211–1212
பராக்கிரம பாண்டியன்.... ..... ... 1212–1215
மாகன் .... ..... ... 1215–1236+
விசயபாகு, IIIஆம் .... ... 1220 வ. 1224 தம்பதெனியா
பராக்கிரமபாகு, IIஆம் .... ... 1234 – 1269
விசயபாகு, IV ஆம்.... ..... ... 1267/8–1270
புவனேகபாகு, Iஆம்.... ..... ... 1271–1283 தம்பதெனியாவும் யாப்பகுவும்
இடைக்காலம் .... ..... ... 1283–1302
பராக்கிரமபாகு IIIஆம் ..... ... 1302 வ. –1310+ பொலனறுவை

| | | | |
|---|---|---|---|
| புவனேகபாகு, IIஆம் | ..... | ... | 1310–1325/6 குருநாகல் |
| பராக்கிரமபாகு, IV ஆம் | ..... | ... | 1325/6 |
| புவனேகபாகு, IIIஆம் | ..... | ... | |
| விசய (சப) பாகு, V ஆம் | ..... | ... | |
| புவனேகபாகு, IV ஆம் | ..... | ... | 1344/5–1353/4 + கம்பனை |
| பராக்கிரமபாகு, V ஆம் | ..... | ... | 1344/5–1359 +தெடிகமையும் கம்பனையும் |
| விக்கிமபாகு, IIIஆம் | ..... | ... | 1357 வ – 1374+கம்பனை |
| புவனேகபாகு, V ஆம் | ..... | ... | 1372/3–1405/6 அல்லது 1407/8 + கம்பனை |
| வீரபாகு | ..... | ... | 1391/2–1396/7+இறைகாமம் |
| வீர அழகேசுவரன் | ..... | ... | 1397 வ. – 1409 இறைகாமம் |
| ("விசயபாகு, VI ஆம்") | ..... | ... | |
| பராக்கிரமபாகு, VIஆம் | ..... | ... | 1412–1467 வ. கோட்டை |
| பராக்கிரமபாகு, VI ஆம் | ..... | ... | 1409–1412 |
| சயபாகு, IIஆம் | ..... | ... | 1467 வ. – 1472/3 |
| புவனேகபாகு, VIஆம் | ..... | ... | 1472/3–1480/1+ |
| பராக்கிரமபாகு, VII ஆம் | ..... | ... | 1480/1–1484 வ. |
| பராக்கிரமபாகு, VIIIஆம் | ..... | ... | 1484 வ. – 1513 அல்லது 1818 |
| பராக்கிரமபாகு, IX ஆம் | ..... | ... | 1509 – 1528 + கழனி |
| விசயபாகு, VII ஆம் | ..... | ... | 1509 – 1521 கோட்டை |
| புவனேகபாகு, VIIஆம் | ..... | ... | 1521–1551 |
| தர்மபாலன் | ..... | ... | 1551–1597 |

# உசாத்துணை நூல்கள்


1) அருந்தவராஜா.க (2004), ஐரோப்பா (1555 – 1795)
(2005), ஐரோப்பிய வரலாறு
(பிற்பட்ட இடைக்காலத்துக்குரியது)

2) இளையதம்பி.மு (1962), இலங்கைச் சரித்திரமும் உலக சரித்திரமும்

3) கிருஷ்ணராஜா.செ (2005), இலங்கை வரலாறு பாகம் – 1 (திருத்திய)
(2000), இலங்கை வர்லாறு பாகம் – 11

4) சத்தியநாதஐயர்.ஆர். பாலசுப்பிரமணியம்.டி. (1959), இந்திய வரலாறு (கி.பி 1200 வரை)

5) நடராசா.வே.க. (1969), பண்டைய ஈழம் பாகம் –1
(1973), பண்டைய ஈழம் பாகம் – 11

6) நிக்களஸ்.வி.ஈ. (1961), புதுஉலக சரித்திரம்.
(1968), படிமுறைச் சரித்திரம் (இலங்கையும் உலகமும்)

7) பசாம். ஏ.எல். வியத்தகு இந்தியா

8) மஜுந்தார். ஆர்.சி. ராய்சௌதுரி.ஏச்.சி, தத்தா.கே (1971), இந்தியாவின் சிறப்பு வரலாறு – முதற்பகுதி.

9) வரலாறு – தரம் 10 (2011), கால்வி வெளியீட்டுத் திணைக்களம்.

10) Abeyasinghe, Tikiri, (1986) *Jaffna under the Portuguese*.

11) Delamer Jensen, (1981), *Renaissance Europe*, D.Cheath and Company, Lexington Massachusetts, Toronto.

12) Edward, Mcmall Burns Roberte Lerner, stadish meacham. (1980), *Westerncivilization*, w.w.Norton and Company I.N.C, Newyork.

13) Grant, A.J, (1952), *A History of Europe from 1494 to 1610, Volume V,* Methuen and Company Ltd London.

14) *History Grade 10* (2006), Educational Publications Department.

15) Perera. Fr. S. G (1943), *A History of Ceylon (the Portuguese and the Dutch period 1505 1796)*

